# நூற்றாண்டு விழா

அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கத்தின்
(இஸ்கானின்) ஸ்தாபக ஆச்சாரியார்
தெய்வத்திரு.

## அ.ச.பக்தி வேதாந்த சுவாமி
## ஸ்ரீல பிரபுபாதா

அவர்களின்

## நூற்றாண்டு விழா

திட்டமிடப்பட்டுள்ள நிகழ்ச்சிகளில் சில:

* கிருஷ்ண பிரசாதம் விநியோகித்தல்
* கிருஷ்ண உணர்வினைப் பெருக்குதல்
* ஸ்ரீல பிரபுபாதாவின் புத்தகங்களை விநியோகித்தல்
* மக்களை விழிப்படையச் செய்தல்

## ஸ்ரீல பிரபுபாதாவின் நூற்றாண்டு விழா
## 1896 - 1996

உலகமனைத்தும் வாழ
ஸ்ரீல பிரபுபாதா அவர்கள் கட்டிய வீடு

**அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கம்,**

59,பர்கிட் ரோடு, தி.நகர்
சென்னை - 600 017.போன்: 4343266, 4345929

வாழ்க ஸ்ரீ குரு மற்றும் கௌரங்கர்

# வேதம் வழங்கும் அறிவு

## ஸ்ரீ ஈசோபநிஷத்

முழுமுதற் கடவுளாகிய ஸ்ரீ கிருஷ்ணரிடம்
அழைத்துச் செல்லும் விஞ்ஞானம்

அறிமுகம், மொழி பெயர்ப்பு மற்றும்
அதிகாரபூர்வமான பொருளுரைகளுடன்

தெய்வத்திரு
*அ.ச. பக்திவேதாந்த சுவாமி பிரபுபாதா*
(ஸ்தாபக ஆசார்யர், அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கம்)



தமிழாக்கம்
*கே. ராமசுப்ரமணியன்*



பக்தி வேதாந்த புத்தக நிறுவனம்
நியூயார்க் - லாஸ் ஏன்ஜலஸ் - லண்டன் - பம்பாய் - சென்னை

முதல் பதிப்பு — 5000
இரண்டாம் பதிப்பு — 5000
மூன்றாம் பதிப்பு — 3000
நான்காம் பதிப்பு - 3000

இப்புத்தகத்தைப் பற்றிய மேலும் விவரங்களுக்கு, ஆர்வமுடையவர்கள் கீழ்கண்ட முகவரியை அணுகவும்.

விலாசம் :

அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கம்
59, பர்ஹிட் ரோடு, தியாகராய நகர்
சென்னை-600 017.

Tamil Translation of

# SRI ISOPANISHAD

With Introduction,
Translation and Authorised Purports

by

His Divine Grace

A.C. BHAKTIVEDANTA SWAMI PRABHUPADA

Tamil Translation by:


K. RAMASUBRAMANIAN,
H. 36/4, West Avenue
Kamaraj Nagar,
Tiruvanmiyur,
MADRAS-600 041.

எல்லோருக்கும் எங்கள்

புகழ் மிக்க

# ஹரே கிருஷ்ண

## ஞாயிறு விருந்து

வருக, வருக என்று அழைக்கிறோம்! சுத்தமான சைவ உணவை (பிரசாதம்) உண்டு மகிழுங்கள்! கீதையிலிருந்து சொற்பொழிவு, நாடகம், சினிமா (ஆன்மீகம்), இன்னிசை ஆகியவை உங்களைப் பரவசமூட்டும்.

ஒவ்வொரு ஞாயிறும் மாலை 5-30 மணிக்கு

உங்கள் உள்ளூர் ஹரே கிருஷ்ண கோவிலில்

தொடர்பு கொள்ளவும்.

விலாசம் :

அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கம்
59, பர்ஹிட் ரோடு, தியாகராய நகர்
சென்னை-600 017.

---

அச்சிட்டோர்: மணி ஆஃப்செட், 112, பெல்ஸ் ரோடு,
சென்னை—5, போன்: 8588186, 8555249

# அறிமுகம்

## 'வேதங்கள் வழங்கும் அறிவு'

(தெய்வத்திரு அ. ச. பக்திவேதாந்த சுவாமி பிரபுபாதா அவர்கள் 1969 அக்டோபர் 6ம் தேதியன்று லண்டனில் கான்வே ஹாலில் ஆற்றிய உரை)

ஸ்ரீமதியரே, ஸ்ரீமான்களே!

இன்றைய உரையின் பொருள் "வேதங்கள் வழங்கும் அறிவு" என்பதாகும். 'வேதம்' எனும் சம்ஸ்கிருதச் சொல்லின் அடிப்படைச் சொல்லுக்குப் பல வகையில் விளக்கம் தரலாம். ஆனால் அதன் இறுதியான பொருள் ஒன்றே. 'வேதம்' என்றால் அறிவு. ஒப்புக் கொள்ளப்படும் எந்த அறிவும் வேதமே. ஏனென்றால், வேதங்கள் கற்பிக்கும் அறிவே மூல அறிவாகும். கட்டுப்பட்ட நிலையிலுள்ள நம் அறிவு குறைபாடுகள் மிக்கது. கட்டுப்பட்ட ஆத்மாவுக்கும் முக்தியடைந்த ஆத்மாவுக்குமிடையே உள்ள வித்தியாசம் என்ன வென்றால், கட்டுப்பட்ட ஆத்மாவுக்கு நான்கு குறைபாடுகள் உள்ளன. முதலாவது குறை, அவன் பல தவறுகள் செய்பவன். உதாரணமாக, எங்கள் நாட்டில் மகாத்மா காந்தி மனிதருள் மாணிக்கமாகக் கருதப்பட்டவர். ஆனால் அவரும் பல தவறுகளைச் செய்தார். அவரது வாழ்வின் இறுதி நாட்களில் கூட, அவரது உதவியாளர், "மகாத்மா காந்தியவர்களே, நீங்கள் புது டெல்லிக் கூட்டத்திற்குப் போக வேண்டாம். அதில் ஆபத்திருப்பதாக நண்பர்கள் மூலம் அறிகிறேன்' என்று எச்சரித்தார். ஆனால் அவர் கேட்கவில்லை. போவதில் பிடிவாதமாக இருந்தார். அங்கு கொல்லப்பட்டார். மகாத்மா காந்தியைப் போன்ற பல பெரு மக்கள், ஜனாதிபதி கென்னடி - இப்படிப் பலர் - தவறுகள் செய்தார் கள். தவறுவது மனித இயல்பு. இது கட்டுண்ட ஆத்மாவின் ஒரு குறை.

மற்றொரு குறை, மாயையின் வசப்படுவது. மாயை என்றால், இல்லாத ஒன்றை இருப்பதாக எண்ணுவது. எல்லாரும் தன் உடலைத் தானாகக் கருதுகிறார்கள். உங்களை நான், "நீங்கள் யார்?" என்று கேட்டால், "நான் திரு. ஜான். நான் செல்வந்தன், இது, அது" என்று சொல்வீர்கள். இவையெல்லாம் உடலையொட்டிய இனப்பாடுகள். நீங்கள் உங்கள் உடலல்ல. அப்படி எண்ணுவது மாயை.

மூன்றாவது குறை, ஏமாற்றும் இயல்பு. பிறரை ஏமாற்றும் குணம் எல்லாரிடமும் உண்டு. ஒருவன் முதல்தரமான முட்டாளா யிருந்தாலும் தன்னைப் பெரிய அறிவாளியாகக் காட்டிக்கொள்வான். அவன் மாயையின் வசப்பட்டுத் தவறுகள் செய்பவன் என்று

முன்பே அவனுக்குச் சொல்லப்பட்டிருந்தாலும், "இது இப்படிப் பட்டது, இது இப்படியானது" என்று தத்துவம் பேசுவான். ஆனால் தனது சுய நிலையைக்கூட அவன் அறியான். குறைபாடுகள் மிக்கவனாகவிருந்தும் தத்துவ நூல்களை எழுதத் துணிவான். அது அவனைப் பிடித்துள்ள நோய், ஏமாற்றும் நோய்.

இறுதியாக, நமது புலன்கள் குறைகளுள்ளவை. நம் கண்களைப் பற்றி நாம் பெருமைப்பட்டுக் கொள்கிறோம். "கடவுளைக் காட்ட முடியுமா?" என்று பலர் சவால் விடுகிறார்கள். ஆனால், கடவுளைக் காணும் தகுதியுடைய கண்களை அவர்கள் பெற்றிருக்கிறார்களா? அந்த கண்களில்லாவிட்டால் உங்களால் காண முடியாது. திடீரென்று இந்த அறை இருட்டாகிவிட்டால் உங்கள் கைகளைக்கூட உங்களால் காணமுடியாது. அப்படியானால், உங்கள் காணும் சக்தியை என்னவென்பது? எனவே, குறைவுள்ள இந்தப் புலன்களின் உதவியால் அறிவை (வேதத்தை) எதிர்நோக்க முடியாது. கட்டுப்பட்ட வாழ்வின் குறைகளிடையே இருந்து கொண்டு முழுமையான அறிவை நாம் யாருக்கும் தர முடியாது. நாமும் முழுமையானவர்களல்ல. எனவே வேதங்களை அவை உள்ளவாறே ஒப்புக் கொள்கிறோம்.

வேதங்கள் ஹிந்துக்களைச் சேர்ந்தவையென்று நீங்கள் சொல்லலாம். ஆனால் நாங்கள் ஹிந்துக்களல்ல. எங்களது உண்மையான அடையாளச் சொல் "வர்ணாச்ரமம்" என்பதே. "வர்ணாச்ரமம்" எனறால், வேதங்களின்படி நடப்பவர்கள், "வர்ணம்" மற்றும் "ஆச்ரமம்" எனும் எட்டு பிரிவுகளில் மனித சமுதாயம் அடங்கியுள்ளது என்பதை ஒப்புக் கொள்பவர்கள், என்றாகும். சமுதாயத்தில் நான்கு பிரிவுகளும், ஆன்மீக வாழ்வில் நான்கு பிரிவுகளும் உள்ளன. இது "வர்ணாச்ரமம்" எனப்படும். பகவத்கீதையில் இதைப் பற்றிச் சொல்லப்பட்டிருப்பதாவது: "இந்தப் பிரிவுகள் கடவுளால் உண்டாக்கப்பட்ட காரணத்தால் எல்லா இடங்களிலும் நிலவுகின்றன." சமுதாயத்தின் பிரிவுகளாவன:

பிராம்மணர், க்ஷத்திரியர், வைச்யர், சூத்திரர். மனிதரில் மிகச் சிறந்த அறிவாளிகளை, பிரம்மத்தை உணர்ந்தவர்களை, பிராம்மணர் என்பர். அதுபோலவே, அதற்கடுத்த அறிவாளிகளும் ஆட்சியாளர்களுமான வகுப்பினர் க்ஷத்திரியர். அடுத்து வருபவர்கள் வைச்யர்கள் - வியாபாரிகள். இந்த இயல்பான பாகுபாடு எங்கும் காணப்படுவதாகும். இது வேதக் கோட்பாடு. இதை நாங்கள் அப்படியே ஒப்புக்கொள்கிறோம். வேதக் கோட்பாடுகள் ஐயந்திரிபற்ற உண்மைகளாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. ஏனென்றால் அவைகளில் தவறுக்கே இடமில்லை. ஒப்புக்கொள்வதென்றால் இதுதான். உதாரணமாக, இந்தியாவில் பசுவின் சாணத்தைப் புனிதமானதாக ஒப்புக்கொள்கிறார்கள்; ஆனாலும் பசுச் சாணம் ஒரு

22-5

மிருகத்தின் மலமே. மலத்தைத் தொட்டால் உடனே நீராட வேண்டுமென்று வேதம் ஓரிடத்தில் கட்டளையிடுகிறது. ஆனால் மற்றோரிடத்தில் பசுச் சாணம் புனிதமானதென்று சொல்லப்பட்டுள்ளது. புனிதமற்ற இடத்தைப் பசுச் சாணத்தால் மெழுகினால் அந்த இடம் புனிதமடைகிறது. இவை முரண்பாடான கூற்றுக்களென்று நம் சாதாரண அறிவு சொல்லும். சாதாரணமாக ஒப்புக்கொள்ளப்படும் நிலையிலிருந்து இது வேறுபட்டதுதான்; ஆனாலும் இது பொய்யல்ல. இதுவே உண்மை. கல்கத்தாவில் ஒரு பிரபல விஞ்ஞானியும் மருத்துவரும் ஆராய்ச்சி செய்து பசுஞ்சாணத்தில் நச்சறுக்கும் தன்மைகள் உள்ளனவென்று கண்டுள்ளார்கள்.

இந்தியாவில் ஒருவன் மற்றொருவனிடம், "இப்படிச் செய்ய வேண்டும்" என்று சொன்னால், "இதென்ன வேதவாக்கா, நான் அப்படியே ஒப்புக்கொள்வதற்கு?" என்று மற்றவன் கேட்பான். வேதக் கட்டளைகளை விமர்சிப்பதில்லை. ஆனால் அவை எப்படி ஏற்பட்டுள்ளனவென்று கவனமாக ஆராய்ந்தால், அவையெல்லாம் சரியானவையே என்பது புலனாகும்.

வேதங்கள் மனித அறிவின் தொகுப்புக்கள் அல்ல. வேத ஞானம் ஆன்மீக உலகிலிருந்து, அதாவது கிருஷ்ண பரமாத்மாவிடமிருந்து, வருவதாகும். வேதத்திற்கு மற்றொரு பெயர் "ஸ்ருதி". "ஸ்ருதி" என்றால் கேள்வியிலிருந்து வரும் அறிவு. அது ஆராய்ந்தறியும் அறிவல்ல. "ஸ்ருதி" தாயைப் போன்றது. நாம் நமது தாயிடமிருந்து எவ்வளவோ அறிவைப் பெறுகிறோம். உதாரணமாக உங்கள் தந்தை யாரென்று தெரிய வேண்டுமானால் அதை உங்களுக்குச் சொல்லக் கூடியவர் யார்? உங்கள் தாயே. "இது உன் தந்தை" என்று உங்கள் தாய் சொன்னால் நீங்கள் அதை ஒப்புக்கொண்டே ஆக வேண்டும். அவர் உங்கள் தந்தைதானா என்று ஆராய்ந்து அறியும் வழி எதுவுமில்லை. அதுபோலவே, உங்கள் அனுபவ அறிவிற்கு, ஆராய்ச்சி அறிவிற்கு, புலனறிவிற்கு அப்பாற்பட்ட ஒன்றைப்பற்றி நீங்கள் அறிய வேண்டுமானால், வேதத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். இதில் ஆராய்வதற்கிடமில்லை. இது ஏற்கனவே ஆராயப்பட்டு எடுக்கப்பட்ட முடிவு. முன்பு உதாரணமாகச் சொன்னது போல் தாயின் கூற்றை அப்படியே ஒப்புக்கொள்ள வேண்டும். வேறு வழியில்லை.

வேதங்கள் தாயென கருதப்படுகின்றன. பிரம்மா பிதாமகரென்று கருதப்படுகிறார். ஏனென்றால், வேத ஞானத்தில் முதன் முதலாக பயிற்சி பெற்றவர் அவரே. ஆரம்ப காலத்தின் முதல் உயிர்வழி பிரம்மாவே. அவர் வேத ஞானத்தைப் பெற்று, அதை நாரதமுனிக்கும் மற்ற சீடர்களுக்கும், மகன்களுக்கும் கற்பித்தார். அவர்களும் அதைத் தம் சீடர்களுக்கு வழங்கினார்கள். இப்படியாக, வேதஞானம் சிஷ்ய பரம்பரையில் வந்துகொண்டிருக்கிறது. வேத ஞானம் இவ்வாறு அறியப்படுவதை பகவத்கீதையும் உறுதி செய்

கிறது. ஆராய்சசி முறையிலும் இதே முடிவைத்தான் அடைகிறோம். எனவே காலத்தை விரயம் செய்யாமலிருக்க இதை அப்படியே ஒப்புக் கொள்வது நல்லது. உங்கள் தந்தை யாரென்றறிய உங்கள் தாயின் வாக்கை ஒப்புக்கொள்வதாகவிருந்தால், அவள் சொல்வதை விவாதம் செய்யாமல் அப்படியே ஏற்றுக் கொள்ளலாம். மூன்று வகையான சாட்சியங்கள் உள்ளன: பிரத்யட்சம், அனுமானம், சப்தம். பிரத்யட்சம் என்றால் நேரடியானது (கண்கூடு). நேரடியான சாட்சியம் அவ்வளவு சரியானதாக இருக்காது; ஏனென்றால் நமது புலன்கள் குற்றமற்றவையல்ல. நாம் தினமும் சூரியனைப் பார்க்கிறோம். அது ஒரு சிறிய தட்டுப்போல் தோன்றுகிறது; ஆனால் உண்மையில் அது பல கிரஹங்களைவிட மிகமிகப் பெரியது. எனவே கண்ணால் பார்ப்பதில் என்ன பயன்? பல நூல்களைப் படித்து சூரியனைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டியதிருக்கிறது. ஆக, நேரடி அனுபவம் முழுமையானதல்ல. அடுத்தது அனுமான அறிவு. "இப்படி இருக்கலாம்" என்று யூகித்து அறிவது. உதாரணமாக, டார்வினின் கொள்கையில், "இது இப்படியிருக்கலாம், அது அப்படியிருக்கலாம்" என்று சொல்லப்படுகிறது. ஆனால் அது விஞ்ஞானமாகாது. அது அனுமானமேயன்றி, குறைவற்ற அறிவாகாது. அதிகாரபூர்வமான இடத்திலிருந்து பெறும் அறிவே பக்குவமான அறிவாகும். வானொலி நிலைய அதிகாரிகளிடமிருந்து பெறும் நிகழ்ச்சி நிரலை நீங்கள் அப்படியே ஒப்புக் கொள்ளலாம். அதை நீங்கள் மறுப்பதில்லை. அதிகாரபூர்வமான இடத்திலிருந்து பெறப்பட்டிருப்பதால் அதை நீங்கள் பரிட்சித்துப் பார்க்கத் தேவையில்லை.

வேதஞானம் "சப்தப்பிரமாணம்" என்று அழைக்கப்படுகிறது. அதன் மற்றொரு பெயர் "ஸ்ருதி". ஸ்ருதி என்றால் காதால் கேட்டு அறியப்படுவது என்று பொருள். பரமான அறிவைப் பெறுவதற்கு அதை நாம் அதிகாரபூர்வமானவர்களிடமிருந்து கேட்டறிய வேண்டும். பரமான அறிவு இந்தப் பிரபஞ்சத்திற்கு அப்பாலிலிருந்து பெறப்படுவது. பிரபஞ்சத்தில் பெறப்படுவது ஜட அறிவு. பிரபஞ்சத்திற்கப்பால் விளங்குவது பரமான அறிவு. இந்தப் பிரபஞ்சத்தின் எல்லையையே நம்மால் எட்ட முடியாது. அப்படியிருக்க, ஆன்மீக உலகிற்கு நாம் எப்படிச் செல்ல முடியும்? எனவே, இப்பிரபஞ்சத்தில் முழுமையான அறிவு பெறுவதென்பது இயலாத காரியம்.

ஆன்மீக வெளி என்று ஒன்று இருக்கிறது. வெளித்தோற்றத்திற்கும் தோற்றமற்ற நிலைக்கும் அப்பாற்பட்ட மற்றொரு இயற்கை உள்ளது. நித்யமான கிரகங்களையும் கிரகவாசிகளையும் கொண்ட ஆகாயம் ஒன்று உள்ளது என்பதை எப்படி அறிவது? இவையெல்லாம் உள்ளனவென்று அறியப்பட்டுள்ளது, ஆனால் இவற்றை ஆராய்ந்தறிவது எப்படி? அது இயலாத காரியம். எனவே, வேதத்தின் உதவியை நாடுகிறோம். இதுவே வேத ஞானம். நமது

கிருஷ்ண உணர்வு இயக்கத்தில் நாம் பகோன்னத அதிகாரியான கிருஷ்ணரிடமிருந்து அறிவைப் பெறுகிறோம். மனித இனத்தின் எல்லா வகையினரும் கிருஷ்ணரை மகோன்னத அதிகாரியாக ஒப்புக்கொள்கிறார்கள். முதலில் நான் இருவகையான பரமஞானி களைப் பற்றிக் கூறுகிறேன். அருவவாதிகள் எனப்படும் மாயா வாதிகள் ஒரு வகையினர். சங்கராசார்யாரின் வழிநடப்பவர்களான இவர்கள் பொதுவாக வேதாந்திகள் எனப்படுவர். மற்றொரு வகை யான பரமஞானிகள் வைஷ்ணவர்கள்: ராமானுஜாசார்யர், மாத்வா சார்யர், விஷ்ணு ஸ்வாமி போன்றவர்கள். சங்கர சம்பிரதாயம், வைஷ்ணவ சம்பிரதாயம் ஆகிய இரு வகையினரும் கிருஷ்ணரை முழுமுதற்கடவுளாக ஒப்புக்கொள்கிறார்கள். அருவ்வாதப் (அவ் யக்த பிரஹ்மம்) பிரசாரம் செய்வதாகக் கருதப்படும் சங்கராசார்ய ரும் உண்மையில் வ்யக்தவாதியே. பகவத்கீதைக்கு அவர் எழுதிய விரிவுரையில், "முழுமுதற் கடவுளான நாராயணர் பிரபஞ்சத் தோற்றத்திற்கு அப்பாற்பட்டவர் என்று குறிப்பிடுகிறார். மேலும் அவர் உறுதிப்படுத்துகிறார். "முழுமுதற்கடவுளான நாராயணரே கிருஷ்ணர். அவர் தேவகிக்கும் வசுதேவருக்கும் மகனாக வந்தவர்". கிருஷ்ணரின் தாய் தந்தையரின் பெயரை அவர் விசேஷமாகக் குறிப்பிடுகிறார். இவ்வாறாக, கிருஷ்ணரே முழுமுதற் கடவுள் என் பதை எல்லா பரமஞானிகளும் ஒப்புக்கொள்கிறார்கள். அதில் சந்தேகமில்லை. நமது கிருஷ்ண உணர்வு ஞானத்தின் தோற்று வாயான பகவத்கீதை கிருஷ்ணரிடமிருந்து நேரடியாகப் பெறப் பட்டுள்ளது. கிருஷ்ணர் உரைத்திருப்பதை விமர்சனம் செய்யாமல் அப்படியே நாம் ஒப்புக்கொள்வதால், பகவத்கீதையை அதன் உண்மை உருவில் வெளியிட்டிருக்கிறோம். அதுவே வேத ஞானம். வேத ஞானம் பரிசுத்தமானதாகையால் அதை நாம் ஏற்றுக் கொள் கிறோம். கிருஷ்ணர் கூறும் எதையும் நாம் ஏற்றுக் கொள்கிறோம். இதுவே கிருஷ்ண உணர்வு. இம்முறை கால விரயத்தைத் தவிர்க் கிறது. முறையான அறிவாளியை, அல்லது, அறிவின் தோற்று வாயை ஏற்றுக் கொள்வதால் கால விரயம் தவிர்க்கப்படுகிறது. உதாரணமாக, பௌதிக உலகில் இரு வகையான அறிவு உள்ளது: அனுமானம், யூகம். மனிதன் மரணத்திற்குட்பட்டவன் என்று ஒப்புக்கொள்கிறோம். மனிதன் மரணத்திற்குட்பட்டவன் என்று உங்கள் தந்தை சொல்கிறார், தங்கை சொல்கிறாள், எல்லாரும் சொல் கிறார்கள்; எனவே நீங்கள் அந்தக் கூற்றை ஆராய்ந்து பார்ப்ப தில்லை. மனிதன் மரணத்திற்குட்பட்டவனென்பது உண்மை என்று நீங்கள் அப்படியே ஒப்புக்கொள்கிறீர்கள். உண்மை இதுதானா என்று நீங்கள் ஆராய முற்பட்டால் ஒருவர் விடாமல் எல்லா மனிதர்களையும் பற்றி நீங்கள் ஆராயவேண்டி வரும். அப்போது, மரணமில்லாத ஒரு மனிதன், நம் கண்ணிற்குத் தென்படாதவன், யாராவது இருக்கக் கூடுமோ என்று நீங்கள் எண்ணமிடலாம். இப்படியாக, உங்கள் ஆராய்ச்சி நிறைவு பெறாமலேயே போகலாம்.

இந்த முறையை சமஸ்கிருதத்தில் "அரோஹ" முறை, அதாவது, ஏறும் முறை என்பார்கள். சொந்த முயற்சியில் நீங்கள் அறிவு பெற முற்பட்டால், உங்கள் புலன்கள் முழுமை பெறாத காரணத்தால், சரியான முடிவிற்கு நீங்கள் ஒருபோதும் வரவியலாது. அது சாத்தியமில்லை.

"ப்ரஹ்ம ஸம்ஹிதை"யில் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது: மனோவேகத்தில் செல்லும் ஒரு விமானத்தில் பறந்து செல்வதாக வைத்துக் கொள்வோம். நமது சாதாரண விமானம் மணிக்கு 2000 மைல்கள் பறக்க முடியும். ஆனால் மனத்தின் வேகமென்ன? நீங்கள் இங்கிருந்தபடி இந்தியாவில் 10,000 மைல்களுக்கப்பால் உள்ள உங்கள் வீட்டைப் பற்றி எண்ணுகிறீர்கள். உடனேயே உங்கள் மனம் அங்கு போய்ச் சேர்ந்து விடுகிறது. மனத்தின் வேகம் அவ்வளவு விரைவானது. "மனோவேகத்தில் கோடிக்கணக்கான ஆண்டுகள் பிரயாணம் செய்தாலும் ஆன்மீக ஆகாயம் அளவற்றது என்பதைக் காண்பீர்கள்," என்று சொல்லப்பட்டுள்ளது. அதை அணுகக்கூட முடியாது. எனவே, ஒருவர் அதிகாரபூர்வமான ஆன்மீக குருவை கட்டாயம் அணுகவேண்டுமென்பது வேதக் கட்டளை. "கட்டாயம்" என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. ஆன்மீக குருவின் தகுதியென்ன? அவர் வேதத்தின் தாத்பர்யத்தை சரியான மூலத்திலிருந்து கேட்டறிந்தவராக இருக்க வேண்டும். இல்லாவிடில் அவர் அதிகாரபூர்வமானவராக விளங்க முடியாது. அவர் பிரஹ்மனில் உறுதியாக நிலைபெற்றவராக இருக்கவேண்டும். இவை இரண்டும் குருவிடம் இருக்க வேண்டிய தகுதிகள். கிருஷ்ண உணர்வு இயக்கம் வேதபூர்வமான அதிகாரம் பெற்றதாகும். "வேத ஆராய்ச்சியின் உண்மையான லட்சியம் கிருஷ்ணரை அறிவது," என்று பகவத்கீதையில் கிருஷ்ணர் கூறுகிறார். ப்ரஹ்ம ஸம்ஹிதையில், "கிருஷ்ணன், கோவிந்தன், எண்ணற்ற வடிவங்களைக் கொண்டவன், ஆனால் அவையெல்லாம் ஒன்றே" என்று சொல்லப்பட்டுள்ளது. அவை நம்மைப் போன்று தவறுகள் இழைப்பவையல்ல. அவருடைய ஸ்வரூபம் தவறுகளுக்கப்பாற்பட்டது. எனது உருவத்திற்கு ஆரம்பம் உண்டு; ஆனால் அவருக்கு ஆரம்பமென்று எதுவுமில்லை. அது அனந்தமானது. அவருடைய வடிவம் - எண்ணற்ற வடிவங்கள் - முடிவற்றது. என் உருவம் தற்போது இந்த இடத்தில் இருக்கிறது, என்னுடைய அறையில் அல்ல. நீங்கள் அங்கே உட்கார்ந்திருக்கிறீர்கள்; உங்கள் அறையிலல்ல. ஆனால் கிருஷ்ணர் ஒரே நேரத்தில் எங்கும் இருக்க முடியும். கோலோக விருந்தாவனத்திலிருந்தபடி அவர் அதே சமயம் எங்கும், எல்லா இடங்களிலும் நிறைந்திருக்கிறார். அவரே முதன்மையானவர், ஆதி பொருள்; ஆனால் கிருஷ்ணரின் படத்தை நீங்கள் காணும்போது பதினைந்து அல்லது இருபது வயது மதிக்கத்தக்க ஒரு இளைஞனைப் பார்ப்பீர்கள். வயதான கிழவனை ஒருபோதும் காண மாட்டீர்கள். பகவத்

கீதையில் வரும் தேரோட்டியான கிருஷ்ணரின் படங்களை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அந்த சந்தர்ப்பத்தில் அவரின் வயது நூற்றுக்குக் குறையாதது. அந்நிலையில் அவரின் பேரக்குழந்தைகளுக்குக் குழந்தைகளிருந்தார்கள், ஆனால் அவர் பார்ப்பதற்கு இளைஞனாகவே தோன்றினார். கிருஷ்ணர், கடவுள், எப்போதுமே முதுமையடைவதில்லை. அது அவரது உயர்வான சக்தி. வேத இலக்கியங்களைக் கற்று கிருஷ்ணரைக் காண முயன்றால் திகைத்துப் போவீர்கள். அந்த முறையில் அவரைக் காண்பது சாத்தியமாகலாம், ஆனால் மிக்க கடினமானது. மாறாக, அவரின் பக்தரிடமிருந்து அவரைப் பற்றி எளிதில் அறிந்து கொள்ளலாம். அவரின் பக்தர் அவரை உங்களுக்குக் காட்டித் தருவார்: "இதோ, அவர், பிடித்துக்கொள்!" என்று சொல்லக் கூடியவர். கிருஷ்ண பக்தர்கள் அவ்வளவு சக்தி வாய்ந்தவர்கள்.

ஆரம்பத்தில் ஒரே ஒரு வேதம் மட்டும் இருந்தது. அதைப் படிக்க வேண்டிய அவசியமும் இருக்கவில்லை. ஒரு முறை குருவிடம் கேட்ட மாத்திரமே புரிந்துகொள்ளக் கூடிய புத்தி கூர்மையும் நினைவாற்றலும் மக்களுக்கு இருந்தன. முழுக்கருத்தையும் நொடியில் புரிந்து கொள்வார்கள். ஆனால், 5,000 ஆண்டுகட்கு முன்னர், கலியுக மக்களின் வசதிக்காக வியாசதேவர் வேதங்களை எழுத்தில் வடித்தார். நாளடைவில் மக்களின் வாழ்நாள் குன்றி, நினைவாற்றல் குறைந்து, புத்தி மழுங்கிப் போய்விடுமென்பதை அறிந்திருந்த வியாசர் வேத ஞானத்தை எழுத்தில் வடித்துவிடுவது நல்லதென்று எண்ணினார். அவர் வேதங்களை நான்காகப் பிரித்தார்: ரிக், சாம, அதர்வ, யஜுர். பின்னர் இந்த வேதங்களைத் தனது பல்வேறு சீடர்களிடம் ஒப்படைத்தார். பிறகு, புத்தியில் குறைந்தவர்களான ஸ்த்ரீ, சூத்திரர், த்விஜாபந்து ஆகியோரைப் பற்றி எண்ணினார். பெண்கள், தொழிலாளிகளான சூத்திரர்கள், உயர் குடியில் பிறந்தும் உரிய தகுதிகளைப் பெறாத த்விஜா பந்துக்களையும் பற்றி அவர் எண்ணினார். பிராமண குலத்தில் பிறந்தும் பிராமணர்களுக்கான தகுதிகளைப் பெற்றிராத ஒருவனை த்விஜா-பந்து என்பார்கள். இவர்களுக்கும் பயன்படும் வகையில், இந்தியாவின் சரித்திரம் என்று கருதப்படும் மகாபாரதத்தையும், பதினெட்டுப் புராணங்களையும் வியாசர் தொகுத்தார். இவையெல்லாம் வேத இலக்கியங்கள் எனப்படும்: புராணங்கள், மகாபாரதம், நான்கு வேதங்கள், உபநிஷத்துக்கள். உபநிஷத் என்பன வேதங்களின் ஒரு பகுதி. பின்னர், பாண்டித்தியம் பெற்றவர்களுக்காகவும், தத்துவ ஞானிகளுக்காகவுமென வேதஞானத்தையெல்லாம் சுருக்கி "வேதாந்த சூத்திரம்" என்ற வடிவில் வழங்கினார். வேதங்களின் இறுதி வடிவம் இது. வேத வியாசர் தாமே வேதாந்த சூத்திரத்தைத் தன் குரு - மகாராஜ் நாரதரின் கட்டளைப்படி எழுதினார். எனினும் அவருக்குத் திருப்தியேற்படவில்லை. ஸ்ரீமத் பாகவதத்தில் இந்த நீண்ட கதை விவரிக்

கப்பட்டுள்ளது. பல புராணங்கள், உபநிஷத்துக்கள் தவிர, வேதாந்த சூத்திரத்தை எழுதியும்கூட வியாசருக்கு அவ்வளவாகத் திருப்தி ஏற்படவில்லை. அப்போது அவரது குருமகாராஜான நாரதர், "நீ வேதாந்தத்திற்கு 'விளக்கம் சொல்" என்று பணித்தார். "வேதாந்தம்" என்றால் முடிவான அறிவு என்று பொருள். முடிவான அறிவு கிருஷ்ணரே. வேதம் முழுமையிலும் கிருஷ்ணரை அறிய வேண்டுமென்று கிருஷ்ணர் சொல்கிறார். "வேதாந்த க்ருத் வேத-வித் ஏவ சாஹம்." கிருஷ்ணர் சொல்கிறார்: நானே வேதத்தைத் தொகுத்தவன்; நானே வேதங்களை அறிந்தவன்." எனவே இறுதி லட்சியம் கிருஷ்ணரே. இது வேதாந்த தத்துவத்திற்கு விரிவுரை வழங்கும் எல்லா வைஷ்ணவ பாஷ்யங்களிலும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. கௌடிய வைஷ்ணவர்களான எங்களுக்கு பலதேவ வித்யாபூஷணர் எழுதிய "கோவிந்த பாஷ்யம்" எனும் நூல் ஏற்பட்டுள்ளது. அதுபோலவே, ராமானுஜாசார்யரும், மாத்வாசார்யரும் பாஷ்யங்கள் எழுதியுள்ளார்கள். சங்கராசார்யரின் விளக்கம் ஒன்று மட்டுமே உண்டென்பதல்ல. வேதாந்த பாஷ்யங்கள் பல உள்ளன. ஆனால், முதன்முதலில் பாஷ்யம் எழுதியவர் வைஷ்ணவரல்லாத காரணத்தால் சங்கராசார்யாரின் விளக்கம் ஒன்று மட்டுமே உள்ளதென்ற தவறான கருத்து மக்களிடையே பரவியிருக்கிறது. தவிர, வேதவியாசர் தாமே மிகச் சிறந்த வேத பாஷ்யத்தை எழுதியுள்ளார். அதுவே ஸ்ரீமத் பாகவதம். வேதாந்த சூத்திரத்தின் முதற்சொற்களோடு ஸ்ரீமத் பாகவதம் தொடங்குகிறது. "ஜன்மாதியஸ்ய யத:" இந்தச் சொற்களுக்கான முழு விளக்கமும் பாகவதத்தில் பெறப்படுகிறது. பூரண உண்மையான பிரஹ்மன் எனப்படுவது யாது என்பதை மட்டும் வேதாந்த சூத்திரம் குறிப்பிடுகிறது. "எல்லாம் எதனின்று வெளிப்படுகிறதோ அது பூரண உண்மை." இது சுருக்கம். இதற்கான விவரமான விளக்கம் ஸ்ரீமத் பாகவதத்தில் காணப்படுகிறது. எல்லாம் பூரண உண்மையினின்று வெளிப்படுகிறதென்றால் பூரண உண்மையின் இயல்பு என்ன? அது ஸ்ரீமத் பாகவதத்தில் விளக்கப்பட்டுள்ளது. பூரண உண்மை உணர்வுள்ளது, ஸ்வயம் பிரகாசமானது. நாம் பிறரிடமிருந்து அறிவைப் பெற்று நம் உணர்வையும் அறிவையும் வளர்த்துக்கொள்கிறோம்; ஆனால் இறைவனான கிருஷ்ணர் ஸ்வயம் பிரகாசர் என்று சொல்லப்படுகிறது. வேத ஞானத்தின் முழுமையான சுருக்கம் வேதாந்த சூத்திரம். அதை எழுதியவரே ஸ்ரீமத் பாகவதத்தில் அதற்கான விரிவுரையையும் வழங்கியுள்ளார். வேத ஞானத்தை அறிய விழைபவர்கள் ஸ்ரீமத் பாகவதத்தையும் கற்று வேத ஞானத்திற்கான விளக்கங்களைப் புரிந்து கொள்ள வேண்டுமென்று இறுதியாகக் கேட்டுக் கொள்கிறோம்.

# பிரார்த்தனை

ஓம் பூர்ணம் அத: பூர்ணம் இதம்
பூர்ணாத் பூர்ணம் உதச்யதே
பூர்ணஸ்ய பூர்ணம் ஆதாய
பூர்ணம் ஏவாவசிஷ்யதே

ஓம் - முழுப் பூரணம்; பூர்ணம் - முற்றிலும் முழுமையானது; அத: - அது; பூர்ணம் - முற்றிலும் முழுமையானது; இதம் - புறவுலகு; பூர்ணாத் - முழுமையிலிருந்து; பூர்ணம் - முழுப் பொருள்; உதச்யதே - உற்பத்தியாகிறது; பூர்ணஸ்ய - முழுமையின்; பூர்ணம் - முழுவதும்; ஆதாய - எடுக்கப்பட்ட பின்; பூர்ணம் - முழுமையான மிகுதி; ஏவ - கூட; அவசிஷ்யதே - எஞ்சி நிற்கிறது.

## மொழி பெயர்ப்பு

முழுமுதற் கடவுள் குறைவற்றவர், முழுமையானவர். அவர் பரிபூரணமானவராகையால் புறவுலகம் போன்று அவரினின்று வெளிப்படுவனவெல்லாம் குறைவற்ற முறையில் முழுப் பொருட்களாக அமைகின்றன. முழுப் பூரணத்திலிருந்து உற்பத்தியாவதெல்லாம் அதனதன் நிலையில் முழுமையானது. அவர் பூரணமான முழுப் பொருளாகையால் அவரினின்று பற்பல முழுமையான பகுதிகள் வெளி வந்தும் அவர் முழுமையான மீதியாகவே எஞ்சி நிற்கிறார்.

## பொருளுரை

முழுப் பூரணம், அதாவது உன்னதமான பூரண சத்தியம் என்பது பூர்ணமான முழுமுதற் கடவுளாகும். அருவமான பிரஹ்மத்தையோ, பரமான ஆத்மாவையோ உணர்ந்தறிவது பூரண முழுமையை முழுவதுமாக உணர்ந்ததாகாது. பரமபுருஷனே முழுமுதற் கடவுள் சச்சிதானந்த விக்ரஹமாவார். அருவ பிரஹ்மத்தை உணர்வதென்பது பரம புருஷனின் 'ஸத்' எனும் தன்மையை, அதாவது, அவரது நித்யமான தன்மையை உணர்ந்தறிவதாகும். பரமாத்மாவெனும் உயர் ஆத்மாவை உணர்வதென்பது பரமபுருஷனின் 'ஸத்' மற்றும் 'சித்', அதாவது, அவரது நித்யமான தன்மையையும் அறிவு மயமான தன்மையையும் அறிவதாகும். ஆனால், முழுமுதற் கடவுளை உணர்ந்தறிவதென்பது அவரது திவ்யமான தன்மைகள், அதாவது 'ஸத்', 'சித்', 'ஆனந்தம்', எல்லாவற்றையும் அறிவதாகும். பரம புருஷனை உணர்ந்தறிபவன் இத்தன்மைகளை ஒருங்கிணைந்த வடிவில் (விக்ரஹம்) காண்கிறான். எனவே பூரண முழுமை அருவமானதல்ல. அவர் உருவற்றவராகவிருந்தால்,

அதாவது, அவர் தனது படைப்புக்களைவிட எந்த வகையிலாவது குறைந்தவராகவிருந்தால், பூரணமானவராகார். பூரண முழுமை பெற்றவர் நமது புலனறிவிற்கு உள்ளும் புறமுமான எல்லாவற்றை யும் தம்முள் அடக்கியவராக இருத்தல் வேண்டும். இல்லையெனில் அவர் முழுமையானவராகமாட்டார்.

பூரண முழுமையான பரம புருஷனின் மாபெரும் சக்திகளெல் லாம் அவரைப் போலவே முழுமை பெற்றவை. ஆகவே, புறவுல கான பௌதிக உலகும் தன் மட்டில் முழுமையானது. இந்தப் பௌதிகப் பிரபஞ்சம் எந்த இருபத்து நான்கு ஆதாரப் பொருட் களின் தாற்காலிகத் தோற்றமாக விளங்குகிறதோ, அவை பிரபஞ் சம் நிலைப்பதற்கான பராமரிப்பிற்குத் தேவையான எல்லாப் பொருட்களையும் உற்பத்தி செய்யக் கூடிய வகையில் அமைந்துள் ளன. பிரபஞ்சத்தின் பராமரிப்பிற்கென்று வேறெந்த அமைப்பும் இப்பிரபஞ்சத்தில் பிரத்யேகமாகச் செயல்படத் தேவையில்லை. முழுப் பூரணத்தின் சக்தியால் நிர்ணயிக்கப்பட்டுள்ள காலகதியில் இப்பிரபஞ்சம் இயங்குகிறது. கால அட்டவணை முற்றுப்பெறும் போது இந்தத் தாற்காலிகத் தோற்றம் முழுமையின் முழுமையான ஏற்பாட்டின்படி அழிக்கப்படுகிறது.

உயிர் வாழிகளான முழுப் பொருட்களுக்கு அவை முழுப் பூர ணத்தை உணர்ந்தறிவதற்கான எல்லா வசதிகளும் அளிக்கப் பட்டுள்ளன. முழுப் பூரணத்தைப் பற்றிய முழுமையான அறிவு இல்லாத காரணத்தால் முழுமையற்ற பல நிலைகள் உணரப்படுகின் றன. உயிர் வாழியின் உணர்வின் முழுமையான வெளிப்பாடே மனிதப்பிறவி. அது, பிறப்பு-இறப்பு எனும் சுழல் வட்டத்தில் 84 லட்சம் உயிரின வகைகளைக் கடந்து இறுதியாக ஏற்பட்டுள்ள நிலை. முழு உணர்வைப் பெறும் பாக்கியத்தை அடைந்துள்ள மனிதப் பிறவியில் உயிர்வாழி முழுப் பூரணத்தில் தான் பெற்றுள்ள முழுமை யான நிலையை உணராவிட்டால், அவன் தன் முழுமையை உணரும் வாய்ப்பை இழந்து, பௌதிக உலகின் நியதியால் மீண்டும் பரிணாமச் சுழற்சியால் ஈடுபடுத்தப்படுகிறான்.

நமது பராமரிப்பிற்குத் தேவையான எல்லா ஏற்பாடுகளும் இயற்கையில், முழுமையான வகையில், அமைந்துள்ளனவென்பதை அறியாத காரணத்தால், முழுமையான வாழ்வு என்று நாம் தவறாகக் கருதும் புலனின்ப வாழ்க்கைக்கு உதவும் வகையில் இயற்கையின் வளங்களைப் பயன்படுத்த நாம் முயற்சிக்கிறோம். உயிர்வாழி முழுப் பூரணத்தோடு இணையாமல் தனித்து நின்று புலனின்பம் துய்ப்பதென்பது இயலாததாகையால், புலனின்பத்தின்பாற்பட்ட வழி தவறிய வாழ்க்கை பொய்யானதென்று கருதப்படுகிறது. முழு உடலோடு இணைந்திருக்கும்பொழுது மட்டுமே உடலின் கை ஒரு முழு உறுப்பாக விளங்குகிறது. உடலிலிருந்து கை துண்டிக்கப்பட்டு

விட்டால், அது கைபோல் தோற்றமளித்தாலும் கையின் செயல் திறன் எதுவும் அதற்கு இல்லாமல் போய்விடுகிறது. அதுபோலவே, உயிர்வாழிகள் முழுப் பூரணத்தின் இணை பிரியா அம்சங்கள். அவை முழுப் பூரணத்தினின்று துண்டிக்கப்பட்டால், அப்போது ஏற்படும் பொய்யான முழுமைத் தோற்றம் அவற்றிற்கு முழுமை யான திருப்தியைத் தராது.

முழுப் பூரணத்தின் தொண்டில் ஈடுபட்டிருக்கும்போதுதான் மனிதப் பிறவியின் முழுமையை உணர்ந்தறியவியலும். இவ்வுலகில் எல்லாத் தொண்டுகளும் - சமுதாயம், அரசியல், சமூகம், அகில உலகம் அல்லது அகில கிரகம் ஆகிய எதைச் சார்ந்த தொண்டா னாலும் - முழுப் பூரணத்தோடு இணைக்கப்படாத வரையில் முழுமை யற்றவையாகவே இருக்கும். எல்லாம் முழுப் பூரணத்தோடு இணைக் கப்படும்போது, இணைக்கப்படும் பகுதிகளும் தம்மில் முழுமைபெற்று விடுகின்றன.

## முதல் மந்திரம்

ஈசாவாஸ்யம் இதம் ஸர்வம்
யத் கிஞ்ச ஜகத்யாம் ஜகத்
தேனே த்யக்தேனே புஞ்ஜீதா
மா க்ருத: கஸ்ய ஸ்வித் தனம்

ஈசா - கடவுளால்; ஆவஸ்யம் - கட்டுப்படுத்தப்பட்ட; இதம் - இது; ஸர்வம் - எல்லாம்; யத் கிஞ்ச - எதுவானாலும்; ஜகத்யாம்-பிரபஞ்சத் தினுள்; ஜகத் - சராசரமெல்லாம்; தேன-அவரால்; த்யக்தேன-ஒதுக் கப்பட்ட பங்கு; புஞ்ஜீதா - ஏற்றுக்கொள்ளவேண்டும்; மா-கூடாது; க்ருத: - பெற முயற்சிக்க; கஸ்ய ஸ்வித் - பிறருடைய; தனம் - செல்வம்.

### மொழிபெயர்ப்பு

பிரபஞ்சத்திலுள்ள சராசரப் பொருட்களெல்லாம் பரம்பொரு ளான பிரபுவின் கட்டுப்பாட்டுக்குட்பட்டவை, அவருக்குச் சொந்த மானவை. எனவே, ஒருவன் தன் தேவைக்கு அவசியமான பொருட் களை, தனக்கென ஒதுக்கப்பட்டுள்ள பங்கை, மட்டுமே ஏற்றுக் கொண்டு, மற்றவை பிறருடையவை என்பதையறிந்து, அவற்றைப் பெற முயற்சிக்கக்கூடாது.

### பொருளுரை

வேத ஞானம் என்பது பரம்பொருளான பிரபுவில் துவங்கி, பக்குவமடைந்த சிஷ்ய பரம்பரையில் வந்த ஆன்மீக குருமார்களின் மூலம் பெறப்படுவதாகையால் பிழையற்றது. வேத ஞானத்தின் முதற்சொல் பரம்பொருளான பிரபுவின் திருவாயிலிருந்து பிறந்தது!

உன்னதமான தோற்றுவாயிலிருந்து பெறப்படுவது. பிரபு திருவாய் மலர்ந்தருளிய சொற்கள் "அபௌருஷேய" என்பன. அதாவது, இம்மண்ணுலகைச் சார்ந்த ஒருவரால் பேசப்பட்டவையல்ல என்பது பொருள். இம்மண்ணுலகில் வசிக்கும் உயிர்வாழியிடம் நான்கு குறைகள் காணப்படுகின்றன : (1) அவன் நிச்சயம் தவறுகள் செய்பவன். (2) மாயையின் பிடியில் அகப்படக் கூடியவன். (3) பிறரை ஏமாற்றும் குணமுள்ளவன். (4) அவனின் அறிவுப் புலன்கள் குறைபாடுகள் கொண்டவை. இந்த நான்கு குறைகளால் கட்டுண்டவனுகையால், சர்வ வியாபகமான ஞானத்தைப் பற்றிய தகவல்களை அவனிடமிருந்து பெறமுடியாது. வேத ஞானம் இத்தகைய குறைபாடுகளுள்ளவர்களால் இயற்றப்படுவதல்ல. முதன் முதலில் உருவாக்கப்பட்ட உயிர்வாழியான பிரஹ்மாவின் இதயத்தில் வேத ஞானம் முதன் முறையாக ஓதப்பட்டது. பின்னர் பிரஹ்மா தன் மக்களுக்கும் சீடர்களுக்கும் அதை வழங்கினுர். அவர்கள் காலங் காலமாக அதைப் பின் வந்தவர்களுக்கு வழங்கினுர்கள்.

பிரபுவான இறைவன் பூரணமானவராகையால் அவர் பௌதிக இயற்கையின் விதிகளுக்குட்படுவதென்பது சாத்தியமில்லை. ஆனுல், உயிர்வாழிகளும் உயிரற்ற பொருட்களும் இயற்கையின் விதிகளாலும் இறுதியில் பிரபுவின் சக்தியாலும் ஆளப்படுகின்றன. "ஈசோபநிஷத்" யஜுர் வேதத்தின் ஒரு பகுதியாகையால் பிரபஞ்சத்திலுள்ள எல்லாப் பொருட்களின் ஆளுநரைப் பற்றிய தகவலையும் தருகிறது.

இதில் சொல்லப்பட்டுள்ள விபரங்களை பகவத் கீதையின் ஏழாவது அத்தியாயத்தில் "பரா", "அபரா" ஆகிய பிரகிருதிகளைப் பற்றிய சர்ச்சை (பகீ. 7-4-5) உறுதி செய்கிறது. இயற்கையின் ஆதாரப் பிரிவுகளான நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம், எல்லாமே பிரபுவின் கீழ்நிலை சக்தி, அதாவது பௌதிக சக்தியாகும். உயிர்வாழ்வன, அதாவது அங்க ஜீவிகளில் காணப்படுவது பிரபுவின் "பராபிரகிருதி" (மேல் நிலை சக்தி) இவ்விரு இயற்கைகளும், அதாவது சக்திகளும், பிரபுவினின்று வெளிப்பட்டுள்ளவை; இறுதியில் அவரே அமைப்பிலுள்ள எல்லாவற்றையும் ஆள்பவர். "பரா", "அபரா" ஆகிய பிரகிருதிகளுக்கு அப்பாற்பட்ட எதுவும் இந்தப் பிரபஞ்சத்தில் இல்லை; எனவே எல்லாம் பரம்பொருளின் உடைமை.

பரம்பொருளான முழுமுதற் கடவுள் முழுமையான வ்யக்தியாவார். அவர் முழுமையான, பக்குவமான அறிவுடையவர்; தன் பல்வகையான சக்திகளின் மூலம் எல்லாவற்றையும் நிலைப்படுத்துபவர். பரம்பொருளை நெருப்புக்கு ஒப்பிடுவது வழக்கம். சராசரங்களையெல்லாம் அந்த நெருப்பின் வெப்பத்திற்கும் ஒளிக்கும் ஒப்பிடுவதுண்டு. நெருப்பானது ஒளி, வெப்பம் ஆகிய தன்மைகளாக சக்தியைப் பறி

மாறுவதுபோல் பிரபுவும் தமது சக்தியைப் பல வகைகளில் வெளிப் படுத்துகிறார். இவ்வாறாக அவர் எல்லாவற்றின் இறுதி ஆளுநராக வும், பராமரிப்பாளராகவும், சர்வாதிகாரியாகவும் விளங்குகிறார். எல் லாவற்றையும் அறிந்தவர், எல்லாரையும் பரிபாலிப்பவர் அவரே./ பிரபு எண்ணவொண்ணாத சக்திகள் நிரம்பியவர்: அதிகாரம், செல்வம், புகழ், அழகு, அறிவு, துறவு ஆகிய எல்லா உயர்வுகளையும் தம்மில் கொண்டவர்.

பிரபுவின்றி வேறெவரும் எதற்கும் உடைமையாளரல்லர் என் பதை அறியும் அறிவை நாம் அடையவேண்டும். நமக்கென்று பிரபு வான இறைவன் ஒதுக்கியுள்ள பங்கையே நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். உதாரணமாக, பசு பால் கொடுக்கிறது; ஆனால் தன் பாலை அது தானே குடிப்பதில்லை. பசு புல்லைத் தின்கிறது; அதன் பால் மக்களுக்கென்று ஏற்பட்டுள்ளது. இதுவே பிரபுவின் ஏற்பாடு. அவர் கருணை கூர்ந்து நமக்கென ஒதுக்கியுள்ளவற்றோடு நாம் திருப்தியுடைய வேண்டும். நம்மிடம் உள்ள பொருட்கள் உண்மை யில் யாரைச் சேர்ந்தவை என்பது பற்றிய எண்ணம் நம் மனதில் எப்போதும் இருக்கவேண்டும்.

உதாரணமாக மரம், மண், கல், இரும்பு, சிமெண்ட், இன்னும் பல பொருட்களைக் கொண்டு வீடு கட்டப்படுகிறது. ஸ்ரீ ஈசோபநிஷத் தின் கோணத்திலிருந்து பார்த்தால், அப்பொருட்களை யெல்லாம் நாமாக உற்பத்தி செய்ய முடியாதென்பதை உணர்கிறோம். நாம் செய்வதெல்லாம், அவற்றை ஒருங்கிணைத்து நம் உழைப்பால் அவற்றிற்குப் பல வகையான வடிவங்களைத் தருவதே. உழைப்பாளி ஒரு பொருளை உண்டாக்குவதற்குத் தன் கடும் உழைப்பைத் தந் தான் என்பதால் மட்டுமே அப்பொருளுக்கு உடைமையாளன் என்று அவன் உரிமை கொண்டாட முடியாது.

நவீன சமுதாயத்தில் உழைப்பாளிகளுக்கும் முதலாளிகளுக்கு மிடையே பெரும் பூசல் ஏற்பட்டுள்ளது. இது அகில உலக அளவில் உருவெடுத்து உலகின் நலனுக்கு இடையூறு விளைவிக்கக்கூடியதாய் உள்ளது. மக்கள் ஒருவருக்கொருவர் பகை கொண்டு நாயும் பூனை யுமாக உறுமுகிறார்கள். ஸ்ரீ ஈசோபநிஷத் பூனைகளுக்கும் நாய்களுக் கும் அறிவுரை வழங்குவதற்காக ஏற்பட்டதல்ல. மனிதப் பிறவி களுக்கு இறைநிலை தரக்கூடிய அறிவுறையைத் தகுதி பெற்ற ஆசார்யர்களின் மூலமாகப் பெறமுடியும். மனித இனம் ஈசோப நிஷத்தில் கண்டுள்ள வேத ஞானத்தைக் கடைப்பிடித்து பௌதிக உடமைகளுக்காகத் தம்முள் சண்டையிடாமலிருக்கவேண்டும். பிரபு வின் கருணையால் கிடைத்துள்ள வசதிகளோடு, உரிமைகளோடு, ஒவ்வொருவரும் திருப்தியடைய வேண்டும். இயற்கை வளங்களைத் தனது என்று உரிமை கொண்டாடிக் கம்யூனிஸ்டுகளும் முதலாளி களும் சண்டையிட்டுக் கொண்டிருந்தால் அமைதி நிலவ முடியாது. உண்மையில் அவை முழுவதும் பிரபுவான இறைவனின் உடைமை.

அரசியல் சாதுர்யத்தினுல் மட்டும் முதலாளிகள் கம்யூனிஸ்டுகளை அடக்கிவிடமுடியாது. அதுபோலவே, கம்யூனிஸ்டுகளும் திருடப் பட்ட ரொட்டிக்காக முதலாளித்துவவாதிகளோடு சண்டையிடு வதால் மட்டும் அவர்களை வெல்லமுடியாது. எல்லாம் முழு முதற் கடவுளின் உடைமை என்பதை இரு சாராரும் உணராதவரை, தமது என்று அவர்கள் உரிமை கொண்டாடும் பொருளெல்லாம் திருட்டுச் சொத்தாகும். அதற்காக இயற்கையின் விதிகளின்படியான தண்ட னைக்கு அவர்கள் உள்ளாக நேரிடும். கம்யூனிஸ்டுகள், முதலாளித் துவவாதிகள், இருவரிடமும் அணுகுண்டுகள் உள்ளன. எல்லாம் முழு முதற் கடவுளின் உடைமையென்பதை அவ்விரு சாராரும் ஒப்புக்கொள்ளாவிடில் அவர்களுடைய அணுகுண்டுகளே அவர்களை முடிவில் அழித்துவிடும். இது நிச்சயம். எனவே அவர்கள் தம்மைத் தாம் காப்பாற்றிக் கொண்டு உலகில் அமைதியை நிலைநாட்ட விரும் பினுல் இரு தரப்பினரும் ஸ்ரீ ஈசோபநிஷத்தின் கொள்கைகளைக் கடைப்பிடிக்க வேண்டும்.

மனித இனம் தம்முள் நாயும் பூனையுமாகச் சண்டையிடுவதற் காக ஏற்பட்டதல்ல. மனித வாழ்வின் முக்கியத்துவத்தையும் குறிக் கோளையும் உணர்வதற்கான அறிவை மனிதர்கள் வளர்த்துக் கொள்ளள வேண்டும். வேத இலக்கியங்கள் மனித இனத்திற்காகத் தொகுக்கப் பட்டவை; நாய், பூனைகளுக்காக அல்ல. நாய்களும் பூனைகளும் பிற விலங்குகளைக் கொன்று தின்பதால் அவற்றிற்குப் பாவமேற்படுவதில்லை. ஆனுல், அடக்கமுடியாத தன் நாவிச்சை யைத் திருப்திப்படுத்துவதற்காக மனிதன் விலங்குகளைக் கொன்ருல் அவன் இயற்கையின் விதியைப் புறக்கணித்த குற்றத்திற்காளா கிருன். அதற்கான தண்டனையை அவன் பெற்றேயாகவேண்டும்.

மனித இனத்திற்கான வாழ்வு நெறியை விலங்குகளிடையே செயல் படுத்த இயலாது. விலங்குகளின் மாமிசத்தைத் தின்று பழக்கப்பட்டிருக்கும் புலி அரிசியையோ கோதுமையையோ உண்ப தில்லை, பசுவின் பாலைக் குடிப்பதில்லை. தாவர உணவையோ மாமிச உணவையோ உண்ணும் பறவைகளும் விலங்குகளும் உள்ளன ஆனுல் அவை தமக்கெனக் கடவுளால் வகுக்கப் பட்டிருக்கும் இயற்கை விதிகளை மீறுவதில்லை. விலங்குகள், பறவைகள், மற்றும் ஊர்வன போன்ற கீழ்நிலை உயிரினங்கள் இயற்கையின் விதிகளைத் தவருமல் கடைப்பிடிப்பதால் அவைகளுக்குப் பாவச்செயல்களென்று எதுவுமில்லை. வேதக் கோட்பாடுகளும் அவைகளுக்காக ஏற்பட்ட வையல்ல. பொறுப்புக்கள் மனித வாழ்விற்கு மட்டுமே ஏற்பட்டவை.

சைவ உணவை மேற்கொள்வதால் மட்டும் இயற்கை விதியைப் புறக்கணிக்கும் குற்றத்திற்கு ஆளாகாமலிருக்கலாமென்று எண்ணு வது தவறு. தாவரங்களுக்கும் உயிர் உண்டு. ஒரு உயிரினம் மற்றொரு உயிரினத்திற்கு உணவாக வேண்டுமென்பது இயற்கை

விதி. எனவே, ''நான் கண்டிப்பான சைவன்'' என்று பெருமைப் பட்டுக்கொள்வதில் பொருளில்லை. மேலான ஆளுநரை உணர்ந்திருப்பதுவே முக்கியம். உன்னதமான பிரபுவை அறிவதற்குத் தேவையான உள்ளுணர்வு விலங்குகளில் வளர்ந்திருக்கவில்லை. ஆனால் வேத இலக்கியங்களிலிருந்து விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்கான ஆற்றல் படைத்த அறிவை மனிதன் பெற்றிருக்கிறான். அதன் மூலம் இயற்கையின் நியதிகள் எவ்வாறு செயல்படுகின்றன என்பதை அறிந்து பயன்பெறும் வாய்ப்பை அவன் அடைந்திருக்கிறான். வேத இலக்கியங்களின் அறிவுரைகளை அவன் அசட்டை செய்யும்போது அவன் வாழ்வு அபாயத்திற்குள்ளாகும் நிலை ஏற்படுகிறது. எனவே, உன்னதமான பிரபுவின் அதிகாரத்தை ஒப்புக்கொள்வது மனிதனுக்கு இன்றியமையாதது. அவன் பிரபுவின் தொண்டனாகித் தன் உடைமைகளையெல்லாம் அவருடைய சேவையில் அர்ப்பணித்து, அவருக்கு அளிக்கப்படும் உணவின் மீதியை மட்டுமே கொள்ளவேண்டும். இவ்வாறு செய்வது அவன் தன் கடமைகளைச் சரிவர நிறைவேற்ற உதவும். பரிசுத்தமான பக்தன் அளிக்கும் சைவ உணவை மட்டுமே தான் ஏற்றுக்கொள்வதாக பகவான் பகவத்கீதையில் திட்டவட்டமாகக் கூறியிருக்கிறார். (பகீ. 9.26). எனவே, மனிதன் சைவ உணவை மேற்கொள்வது மட்டுமல்லாமல் பிரபுவின் பக்தனாகவும் ஆகித் தன் உணவையெல்லாம் அவருக்கு அர்ப்பணிக்க வேண்டும். அதன் பின்னரே, கடவுள் கருணையோடு தரும் பிரசாதத்தை அவன் உட்கொள்ள வேண்டும். இந்த உணர்வில் செயல்படும் பக்தன் மனிதப்பிறவியின் கடமையைச் செலுத்துபவனாகிறான். தம் உணவைக் கடவுளுக்கு அர்ப்பணிக்காதவர்கள் உண்மையில் பாவத்தை உண்பவர்களாகிறார்கள்; அதனால் அவர்கள் பாவத்தால் விளையும் பல துன்பங்களுக்கு உள்ளாகிறார்கள்.

உன்னதமான பிரபுவின் உரிமையைப் புறக்கணித்து, இயற்கையின் விதிகளைத் துணிந்து மீறுவது பாவத்திற்கு அடிகோலுவதாகும். இயற்கையின் நியதிகளை அவமதித்துப் பிரபுவின் கட்டளையை மீறுவதால் மனித இனத்திற்குக் கேடுதான் விளையும். ஒருவன் நிதானத்துடன், இயற்கையின் விதிகளையறிந்து, தேவையற்ற விருப்போ, வெறுப்போ இல்லாமல் நடந்து கொண்டால் அவன் பிரபுவால் அங்கீகரிக்கப்பட்டு, இறைநிலையை, நித்யமான வீட்டை, மீண்டும் அடைவதற்கான தகுதியைப் பெறுவது நிச்சயம்.

# இரண்டாவது மந்திரம்

குர்வன்னேவேஹ கர்மாணி
ஜிஜீவிஷேச்சதம் ஸமா :
ஏவம் த்வயி நான்யதேதோ ஸ்தி
ந கர்ம லிப்யதே நரே.

குர்வன் - தொடர்ந்து செயல்பட்டு; ஏவ - இவ்விதம்; இஹ - இல் வாழ்வில்; கர்மாணி - செயல்; ஜி ஜீ விஷேத் - வாழ விரும்ப வேண்டும்; ஸதம் - நூறு; ஸமா - ஆண்டுகள்; ஏவம் - இப்படி வாழ்ந்து; த்வயி - உனக்கு; ந - இல்லை; அன்யதா - வேறு; இத - இவ்வழியிலிருந்து; அஸ்தி - இருப்பது; ந - இல்லை; கர்ம - செயல்; லிப்யதே - பிணைப்பது; நரே - மனிதனை.

## மொழி பெயர்ப்பு

இக வாழ்வில் ஒருவன் இவ்விதம் தொடர்ந்து செயல்பட்டால் பல நூறு ஆண்டுகள் வாழ விரும்பினாலும் வாழலாம். ஏனெனில், இத்தகைய செயல்களில் கர்ம வினைகள் அவனைப் பிணைப்பதில்லை. மனிதனுக்கு இதைத் தவிர வேறு வழியில்லை.

## பொருளுரை

யாரும் மரணத்தை விரும்புவதில்லை. எவ்வளவு காலம் முடியுமோ, வாழவே விரும்புகிறார்கள். இந்த மனப்பான்மை தனிப்பட்டவர்களில் மட்டுமின்றி, கூட்டாக சமூகங்கள், சமுதாயங்கள், நாடுகள் ஆகியவற்றிலும் காணப்படுகிறது. எல்லா வகையான உயிரினங்களும் உயிர வாழ்வதற்கென கடும் பிரயாசைகளை மேற்கொள்கின்றன. இது முற்றிலும் இயல்பானது என்று வேதங்கள் கூறுகின்றன. உயிர்வாழி தன் இயல்பில் நித்யமானவன். ஆனால், பௌதிக வாழ்வின் பிணைப்புகள் காரணமாக அவன் தன் உடலை மீண்டும் மீண்டும் மாற்றிக் கொள்ள நேரிடுகிறது. இப்படி ஆத்மா தன் இருப்பிடத்தை அடிக்கடி மாற்றிக் கொள்கிறது. இந்த இட மாற்றம் கர்ம வினையால் ஏற்படுவது. உயிர் வாழி தான் உயிர் வாழ்வதற்குத் தேவையான தொழிலில் (செயலில்) ஈடுபட வேண்டியதாயிருக்கிறது. இது பௌதிக வாழ்க்கையின் நியதி. தனக்கு விதிக்கப்பட்டுள்ள பணிகளை நிறைவேற்றாவிட்டால் அவன் இயற்கையின் விதிகளை மீறுபவனாகிறான்; இதனால், பிறப்பு, இறப்பு எனும் சுழலில் மேலும் மேலும் சிக்கிக் கொள்கிறான்.

மற்ற உயிரினங்களும் பிறப்பு, இறப்பு எனும் சுழற்சியில் அகப்பட்டவையே' ஆனால் உயிரினம் மனிதப் பிறவியை அடையும்

போது கர்ம வினையின் விளைவுகளிலிருந்து விடுபடும் வாய்ப்பு அவனுக்குக் கிட்டுகிறது. கர்மா, அகர்மா, விகர்மா ஆகியவை பகவத் கீதையில் மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. வேத நூல்களில் கண்டுள்ளபடி, ஒருவன் தனக்கு விதிக்கப்பட்டுள்ள கடமைகளை நிறைவேற்றுவதற்காக இயற்றப்படும் செயல்கள் "கர்மா" எனப்படும். பிறப்பு, இறப்பு எனும் சுழலிலிருந்து ஒருவனை விடுவிக்கும் செயல் "அகர்மா" எனப்படும். தனக்கு அளிக்கப்பட்டுள்ள சுதந்திரத்தைத் துர்பிரயோகம் செய்வதால் கீழான உயிர் நிலைக்கு ஒருவனை இட்டுச் செல்லும் செயல் "விகர்மா" எனப்படும். இம் மூன்று வகையான செயல்களில், கர்மாவின் பிணைப்பிலிருந்து தன்னை விடுவிக்கும் செயலை அறிவாளிகள் தேர்ந்தெடுக்கிறார்கள். சாதாரண மனிதர்கள் கடவுளின் பாராட்டைப் பெற்று இவ்வுலகில் அல்லது சுவர்க்கத்தில் உயர்ந்த நிலையை அடையவேண்டுமென்பதற்காக நற்செயல்களைப் புரிய விரும்புகிறார்கள். ஆனால், அறிவில் முதிர்ந்தவர்கள் செயல்களின் விளைவுகளினின்று முற்றிலும் விடுபட்டு நிற்க விரும்புகிறார்கள். நல்லவை, தீயவை ஆகிய இரு வகையான செயல்களுமே பௌதிக இன்னல்களில் மனிதனைச் சிக்க வைக்கும் தன்மையுடையவை என்பதை அறிவாளிகள் நன்கறிவார்கள். எனவே அவர்கள் நற்செயல்கள் மற்றும் தீச்செயல்கள் ஆகிய இரு வகையான செயல்களின் விளைவுகளினின்றும் தம்மை விடுவிக்கும் செயலை நாடுகிறார்கள்.

ஸ்ரீ ஈசோபநிஷத்தின் கோட்பாடுகள் பகவத்கீதையில் மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளன. (உபநிஷத்தின் சாரம் என்பதால் பகவத்கீதையை 'கீதோபநிஷத்' என்றும் அழைக்கிறார்கள்). "நைஷ்கர்ம", அதாவது "அகர்ம" நிலையை வேத இலக்கியங்களில் விதிக்கப்பட்டிருக்கும் கடமைகளை நிறைவேற்றாமல் அடைய முடியாதென்று பகவத்கீதையில் பகவான் கூறுகிறார். (ப.கீ. 3-9-16). மனிதன் தன் செயல் சக்தியைப் பரமபுருஷனுடைய பகவானின் அதிகாரத்தை உணரத்தக்க வகையில் நெறிப்படுத்த வேதங்கள் அவனுக்கு உதவுகின்றன. பகவானின் அதிகாரத்தை ஒருவன் உணர்ந்தறியும்போது அவன் உறுதியான அறிவு நிலையை எய்தியுள்ளவனாகிறான். புனிதமடைந்த இந்நிலையில் இயற்கையின் முக்குணங்களான ஸாத்வீக, ராஜஸ, தாமஸ குணங்கள் செயலற்றுப் போவதால் "நைஷ்கர்ம" நிலையில் செயற்படுவது சாத்தியமாகிறது. இத்தகைய செயல் ஒருவரைப் பிறப்பு, இறப்பு எனும் சுழலில் பிணைப்பதில்லை.

உண்மையில், பிரபுவுக்குப் பக்தித் தொண்டாற்றுவதைத் தவிர யாரும் வேறெதுவும் செய்யத் தேவையில்லை. எனினும், வாழ்வின் கீழ் நிலைகளில் பக்தித் தொண்டை உடனடியாக மேற்கொள்ள முடிவதில்லை. பலனை எதிர்நோக்கிய செயலையும் முழுவதுமாக நிறுத்த முடிவதில்லை. கட்டுப்பட்ட ஆத்மா தன் புலன்களின்

திருப்திக்காகவும், உடனடி அல்லது நீண்ட காலத் தேவைகளுக் காகவும் செயல்பட்டுப் பழகியிருக்கிறது. சாதாரண மனிதன் புல னின்பங்களுக்காகச் செயல்படுகிறான். இந்தப் புலனிச்சைகள் சமுதாயம், நாடு, மனித இனம் என்ற அளவில் விரிவடையும்போது அவை பொது சேவை, சமுதாயவாதம், பொதுவுடைமை, நாட்டுப் பற்று, மானுடம் போன்ற கவர்ச்சிகரமான பெயர்களை மேற்கொள் கின்றன. இந்தத் தத்துவங்களெல்லாம் கர்மவினைப் பிணைப்பின் கவர்ச்சி மிக்க வடிவங்கள். ஆனால், இத்தத்துவங்களில் ஏதாவ தொன்றை வாழ்வின் லட்சியமாகக் கொள்ள விரும்புபவர்கள், அதைக் கடவுளை மையமாகக் கொண்டு செயற்படுத்த வேண்டு மென்று ஈசோபநிஷத் பணிக்கிறது. குடும்பஸ்தனாகவோ, பொது நல ஊழியனாகவோ, சமுதாயவாதியாகவோ, பொதுவுடைமைவாதி யாகவோ, தேசியவாதியாகவோ, மானுடவாதியாகவோ இருப்பதில் தவறில்லை. ஆனால், "ஈசாவாஸ்ய", அதாவது, கடவுளை மையமாகக் கொண்டு ஒருவன் தன் செயல்களை வடிவமைக்க வேண்டும்.

கடவுளை மையமாகக் கொண்ட நடவடிக்கைகள் எவ்வளவு மகத்தானவையெனில், மனிதனைப் பேராபத்துக்களினின்றும் காப் பாற்ற அவற்றில் ஒரு சில மட்டுமே போதும். பிறப்பு, இறப்பு எனும் பரிணாமச் சுழற்சியில் மீண்டும் அகப்படுவதே வாழ்வின் மிகப் பெரிய ஆபத்தாகும். ஏதாவது காரணத்தால் ஒருவன் மனிதப் பிறவி நல்கும் ஆன்மீக வாய்ப்புக்களை இழந்து பிறப்பு, இறப்பு ஆகிய பரிணாமச் சுழலில் விழும்போது அவன் நிலை பரிதாபகரமான தாகிறது. அறிவற்ற ஒருவன் தான் அந்நிலைக்கு ஆளாவதைத் தன் புலன்களின் குறைபாடுகள் காரணமாக அறியாமற்போகிறான். எனவே, கடவுளை மையமாகக் கொண்டு செயல்படும் நிலையை ஸ்ரீ ஈசோபநிஷத் பரிந்துரைக்கிறது. அந்நிலையில் செயற்படுபவன் பல்லாண்டு வாழ விரும்பலாம். மற்றபடி, நீண்ட வாழ்வு தன் மட் டில் பயனற்றது. ஒரு மரம் பல நூறு ஆண்டுகள், ஏன், ஆயிரம் ஆண்டுகள்கூட, உயிர் வாழலாம்; ஆனால் மரங்களைப்போல் நீண்ட காலம் உயிர் வாழ்வதால் என்ன பயன்? துருத்தியைப்போல் மூச்சு விட்டுக்கொண்டிருப்பதோ, பன்றிகளையும், நாய்களையும் போல் குழந் தைகள் பெறுவதோ, ஒட்டகத்தைப்போல் தின்பதோ அர்த்தமற்ற காரியங்கள். கடவுளில் மையங்கொண்ட எளிய வாழ்வு, கடவுளு ணர்வற்ற பொதுநல சேவை அல்லது சமுதாயவாதத்தில் செலவிடப் படும் ஏமாற்று வாழ்வைவிட எவ்வளவோ மேலானது.

ஈசோபநிஷத்தின் கோட்பாடுகளை அனுசரித்துப் பொதுசேவை மேற்கொள்ளப்படுமேயானால் அது ஒரு விதமான கர்ம யோகமாகும். இத்தகைய செயல்கள் பகவத்கீதையில் பரிந்துரைக்கப்பட்டுள்ளன. (பகீ. 18.5-9). ஏனென்றால் அவை செயல் புரிபவனைப் பிறப்பு, இறப்பு எனும் சுழலில் விழும் அபாயத்தினின்றும் காப்பாற்று கின்றன. கடவுளில் மையங்கொண்ட காரியங்கள் அரைகுறையாக

விருந்தாலும்கூட செயல் புரிபவனுக்கு அவற்ருல் நன்மையே விளையும். நிச்சயமாக அவை அவனுக்கு மறு பிறவியிலும் மனிதவுருவைப்பெற்றுத் தருவதால், விடுதலை பெறுவதற்கான மற்றுமொரு வாய்ப்பை அவன் அடைகிருன்.

# மூன்றுவது மந்திரம்

அஸுர்யா நாம தே லோகா
அந்தேன தமஸாவ்ருதா:
தாமஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி
யே கே சாத்ம - ஹனோ ஜனா:

அஸுர்யா - அசுரர்களுக்கான; நாம - பெயர் பெற்ற; தே - அவை; லோகா: - கிரஹங்கள்; அந்தேன - அறிவின்மையால்; தமஸா - இருளால்; ஆவ்ருதா - மூடப்பட்ட; தான் - அந்த கிரஹங்கள்; தே - அவர்கள்; ப்ரத்யேய் - மரணத்திற்குப் பின்; அபிகச்சந்தி - சென்றடைகிறார்கள்; யே - யாராயினும்; கே - எல்லாரும்; ஆத்மஹன: - ஆத்மாவை அழிப்பவர்கள்; ஜனா: - மக்கள்.

## மொழி பெயர்ப்பு

ஆத்மாவை அழிப்பவர்கள் யாராயினும் இருளாலும் அறியாமையாலும் சூழப்பட்டவையும், கடவுள் நம்பிக்கையற்ற அசுரர்களின் உலகம் எனப் பெயர்பெற்றவையுமான கிரகங்களைச் சென்றடைகிறார்கள்.

## பொருளுரை

மனித வாழ்க்கை விலங்கு வாழ்க்கையைவிட மேம்பட்டதாகக் கருதப்படுவதற்குக் காரணம் முந்தையது பொறுப்புக்கள் மிக்கதாக அமைந்திருப்பதே. அப்பொறுப்புக்களை உணர்ந்து செயல்படுபவர்கள் சுரர் (தெய்வத்தன்மையுள்ளவர்கள்) என்றும், அவற்றை உதாசீனம் செய்பவர்கள் அசுரர்கள் (துர்குணமுள்ளவர்கள்) என்றும் அழைக்கப்படுவர். இவ்விரு வகையான மனிதர்களை உலகெங்கிலும் காணலாம். சுரர்கள் எப்போதும் பரமபுருஷனை விஷ்ணுவின் பாதகமலங்களை அடைவதை லட்சியமாகக் கொண்டு நடப்பவர்கள் என்று ரிக் வேதத்தில் கூறப்பட்டுள்ளது. அவர்கள் செல்லும் வழி சூரியனின் தடத்தைப் போன்று ஒளிமயமானது.

மனிதவுரு பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளின் பரிணாமத்தின் விளைவாக, பல உடல் மாற்றங்களுக்குப் பின், பெறப்பட்டுள்ளதென்பதை அறிவு படைத்த மக்கள் எப்போதும் நினைவிற்கொள்ள வேண்டும். பௌதிகப் பிரபஞ்சத்தை மாபெரும் சமுத்திரமாகவும், மனித உடலை அதைக் கடப்பதற்கெனப் பிரத்யேகமாக வடிவமைக்கப்பட்ட தோணியென்றும் உருவகமாகச் சொல்வதுண்டு. வேத இலக்கியங்களையும் புண்ணிய புருஷர்களான ஆசார்யர்களையும் திறமைமிக்க மாலுமிகளாகவும், மனிதவுடல் பெற்றிருக்கும் தனிச் சிறப்புக்களை எத்தகைய இன்னல்களுக்கும் உட்படாமல் இலக்கை நோக்கித்

தோணியைச் செலுத்த உதவும் கடற்காற்ருகவும் ஒப்பிட்டுச் சொல்வதுண்டு. இத்தகைய எல்லா வசதிகளும் அடைந்திருந்தும் ஒருவன் தன் வாழ்வை ஆத்மஞானம் பெறுவதற்குப் பயன்படுத்திக் கொள்ளாவிடில் அவனை ஆத்மாவைக் கொன்றவனென்றே கருதவேண்டும். ஆத்மாவை அழிப்பவன் அறியாமையெனும் இருள் சூழ்ந்த உலகில் என்றென்றும் உழல்வானென்று ஸ்ரீ ஈசோபநிஷத் மிகத் தெளிவாக எச்சரிக்கிறது.

பன்றிகள், நாய்கள், ஒட்டகங்கள், கழுதைகள் போன்ற மிருகங்களுக்கும் நம்மைப் போலவே வாழ்வுத் தேவைகள் உள்ளன. அவை தம் தேவைகளை அவலம் மிக்க, அருவருப்பான வழிகளில் நிறைவேற்றிக்கொள்கின்றன. ஆனுல், மனிதன் வசதியாக வாழ்வதற்கான எல்லா வழி வகைகளையும் இயற்கை அமைத்துக் கொடுத்துள்ளது. இதற்குக் காரணம் மனிதப் பிறவி விலங்குப் பிறவியைவிட முக்கியத்துவம் வாய்ந்தது, அரியது, என்பதே. பன்றிகளையும் பிற விலங்குகளையும்விட மேலான வாழ்வு வசதியை மனிதன் எதற்காகப் பெற்றுள்ளான்? ஒரு சாதாரண குமாஸ்தாவைவிட உயர் ப்தவியிலிருக்கும் ஒருவருக்கு ஏன் மேலான வசதிகள் தரப்பட்டுள்ளன? உயர்நிலை அதிகாரிக்கு உயர் நிலையிலான பல பொறுப்புக்கள் தரப்பட்டுள்ளன என்பதே இக்கேள்விக்குப் பதில். தன் வயிற்றுப் பசியைப் போக்கிக் கொள்வதிலேயே எப்போதும் ஈடுபட்டிருக்கும் விலங்குகளைவிட உயர்வான கடமைகளை மனிதன் ஆற்றவேண்டியிருப்பதால் அவனுக்கு அதிகமான வசதிகள தரப்பட்டுள்ளன. என்ருலும், ஆத்மாவை அழிக்கும் தன்மைகளைக் கொண்டுள்ள இன்றைய நாகரிகத்தில் வயிற்றுப் பசியே பெரும் பிரச்னையாகிவிட்டது. மெருகேற்றப்பட்ட மிருகமாகிய நவநாகரிக மனிதனை உன் வாழ்வின் நோக்கமென்னவென்று கேட்டால் வயிற்றை நிரப்புவதே தன் வேலை என்பான். ஆத்ம ஞானத்தைப் பற்றி அவன் அறியான்; அதற்கு அவசியமில்லையென்பான். தன் வயிற்றுக்காக முழு மூச்சோடு உழைக்க அவன் தயாராயிருந்தும் வேலையில்லாப் பிரச்னை அவனைத் தொடர்ந்து மிரட்டுகிறது. இயற்கை விதிகளின் கொடூரம் அப்படிப்பட்டது.

நமக்கு இந்த மனிதப் பிறவி தரப்பட்டிருப்பது வாழ்வில் உயர்ந்த நிலையை அடைவதற்காகவேயல்லாமல் கழுதைகளையும் பன்றிகளையும்போல் கடுமையாக உழைப்பதற்காகவல்ல. ஆத்மஞானம் பெறுவதில் அக்கறையில்லாமலிருந்தால் நாம் விரும்பாவிட்டாலும் கடுமையாக உழைக்கும்படி இயற்கை விதிகள் நம்மை வற்புறுத்தும். இந்த யுகத்தில் மனிதப் பிறவிகள் கழுதைகளையும் வண்டி இழுக்கும் எருதுகளையும்போல் கடுமையாக உழைக்கும் கட்டாயத்திற்கு ஆளாகியுள்ளனர். உழைப்பதற்காக அசுரர்கள் அனுப்பப்படும் சில இடங்கள் எப்படிப்பட்டனவென்பதை ஈசோபநிஷத்தின் இச்செய்யுள் தெரிவிக்கிறது. மனிதப் பிறவியின் கடமை

யைச் செய்யத் தவறும் மனிதன் அசுரர்களுக்கான கிரகங்களுக்கு இடம்பெயர்ந்து செல்லும் கட்டாயத்திற்காளாகி இழிவான உயிரின மாகப் பிறந்து அறியாமையிலும், இருளிலும் உழல நேரிடுகிறான்.

ஆத்ம ஞானம் பெறும் முயற்சியில் உண்மையான அக்கறை யுடன் ஈடுபட்டும் அதை முழுமையாக நிறைவேற்ற இயலாமற் போகும் ஒருவனுக்கு "சுசி" அல்லது "ஸ்ரீமத்" ஆகிய குடும்பத்தில் தோன்றும் வாய்ப்பு அளிக்கப்படுகிறதென்று பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளது. (பகீ. 6.41-43). "சுசி" என்பது ஆன்மீகத்தில் முன்னேற்றமடைந்திருக்கும் பிராஹ்மணனைக் குறிக்கும். "ஸ்ரீமத்" என்றால் வர்த்தக சமூகத்தைச் சேர்ந்த வைசியன் என்றாகும். கடவுளையடையும் முயற்சியில் வெற்றி பெறுமற்போனவன் தன் முற் பிறவியில் மேற்கொண்ட நன்முயற்சிகளின் பயனாக ஆத்மஞானம் பெறுவதற்கான உயர்ந்த வாய்ப்பை மீண்டும் அளிக்கப்படுகிறான் என்பதை இது குறிக்கிறது. முயற்சியில் தோற்றவனுக்குக்கூட மரியாதைக்குரிய உயர் குடும்பத்தில் பிறக்கும் வாய்ப்பு அளிக்கப் படுகிறதென்றால், வெற்றி பெற்றவன் எண்ணிப்பார்க்க முடியாத அளவிலான உயர் நிலையை அடைவானல்லவா? கடவுளை அடையும் முயற்சிக்காக மட்டுமே ஒருவனுக்கு செல்வம் மிக்க குடும்பத்திலோ அல்லது உயர் குடும்பத்திலோ பிறக்கும் வாய்ப்பு உறுதியளிக்கப் படுகிறது. ஆனால், முயற்சித்துக்கூடப் பார்க்க விரும்பாதவன், எப்போதும் மாயையில் மூழ்கியிருப்பவன், பொருளாசை கொண்டுள் ளவன், புலனின்பங்களில் பற்றுள்ளவன், இருள் சூழ்ந்த நரகத்தைச் சென்றடைகிறானென்பதை எல்லா வேத இலக்கியங்களும் உறுதிப் படுத்துகின்றன. பௌதிக இச்சைகள் மிகுந்த இந்த அசுரர்கள் சில வேளைகளில் மதப்பற்று மிக்கவர்களாகப் பாசாங்கு செய்வார் கள், ஆனால் அவர்களின் இறுதி லட்சியம் இகவுலக நன்மைகளைப் பெறுவதாகவே இருக்கும். இத்தகைய மனிதர்களை பகவத்கீதை கண்டனம் செய்கிறது. (பகீ. 16, 17-18). அவர்களின் பொய்யான தோற்றத்திற்காக அவர்கள் மதிக்கப்படுகிறார்கள். அறிவிலிகள் தரும் ஆதரவாலும், தம் பொருட்செல்வத்தாலும் அவர்கள் பலம் பெறுகிறார்கள். ஆத்ம ஞானம் பெற்றிராத இந்த அசுரர்கள் இறை யுணர்வில்லாதவர்கள். அவர்கள் இருள் சூழ்ந்த நிலைக்களங்களைச் சென்றடைவது திண்ணம்.

மனிதர்களாகிய நாம் இம்மண்ணுலக வாழ்வெனும் உறுதியற்ற மேடையில் பொருளாதாரப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்காக மட்டும் பிறவியெடுக்கவில்லை. இயற்கையின் விதிகள் நம்மை ஈடு படுத்தியுள்ள பௌதிக வாழ்வின் எல்லாப் பிரச்னைகளுக்கும் தீர்வு காண்பதற்காகவே நாம் மனிதப் பிறவி எடுத்துள்ளோம் என்பது துணிவு.

# நான்காவது மந்திரம்

அநேஜத் ஏகம் மனஸோ ஜ வீயோ
நைனத் தேவா ஆப்னுவன் பூர்வம், அர்ஷத்
தத் தாவதோன்யான் அத்யேதி திஷ்டத்
தஸ்மின் அபோ மாதரிச்வா ததாதி

அநேஜத் - சலனமற்ற; ஏகம் - ஒன்று; மனஸ: - மனத்தைவிட; ஜ வீய - அதிக வேகமான; ந - இல்லை; ஏனத் - இந்த உன்னதமான பிரபு; தேவா: - இந்திராதி தேவர்கள்; ஆப்னுவன் - அணுகவியல; பூர்வம் - முன்னால்; அர்ஷத் - வேகமாகச் சென்று; தத் - அவர்; தாவத: - ஓடுகின்ற; அன்யான் - மற்றவர்கள்; அத்யேதி - வெல்கிறார்; திஷ்டத் - நிலையாகவிருந்து; தஸ்மின் - அவரின்; அப: - மழை; மாதரிச்வா - காற்றையும், மழையையும் ஆளுகின்ற தேவர்கள்; ததாதி - வழங்குகிறார்கள்.

## மொழிபெயர்ப்பு

பரமபுருஷனை முழுமுதற்கடவுள் தன் இருப்பிடத்தில் நிலைபெற்றவராகவிருந்தாலும் மனத்தைவிட அதிக வேகமாகச் செல்லக்கூடியவர். வேகமாகச் செல்லக்கூடிய எல்லாவற்றையும் வெற்றி காண வல்லவர். வலிமைமிக்க தேவர்களாலும் அவரை அணுக இயலாது. ஒரே இடத்தில் அவர் வீற்றிருந்தாலும், காற்று, மழை ஆகியவற்றை வழங்கும் சக்திகளை அவர் ஆள்கிறார். அவர் ஈடிணையற்ற சிறப்புக்கள் மிக்கவர்.

## பொருளுரை

பரமபுருஷனை முழுமுதற் கடவுளைத் தலைச்சிறந்த தத்துவ ஞானியும்கூட மனோயூகங்களால் கண்டறியவியலாது. அவரின் பக்தர்கள் மட்டுமே அவரின் கருணையால் அவரை அறிய முடியும். பக்தனல்லாத ஒரு தத்துவஞானி நூற்றுக்கணக்கான ஆண்டு காலத்திற்கு மனோ வேகத்தில் பயணம் செய்தாலும் பூரண சத்தியத்திலிருந்து வெகுதூரம் விலகியே நிற்பான் என்று "பிரஹ்ம சம்ஹிதை"யில் கூறப்பட்டுள்ளது. ஈசோபநிஷத்தில் விளக்கப்பட்டுள்ளபடி, பூரணமான முழுமுதற்கடவுள் தன் பரமான இருப்பிடமான கிருஷ்ண லோகத்தில் லீலைகளில் ஈடுபட்டிருக்கிறார். எனினும், அவர் தம் எண்ணற்கரிய வல்லமைகளால் ஒரே சமயத்தில் தன் ஆக்க சக்தியின் எல்லா அம்சங்களிலும் நிறைந்து நிற்கிறார். அவரது திறன்கள் விஷ்ணு புராணத்தில் நெருப்பின் வெப்பம் மற்றும் வெளிச்சத்தோடு ஒப்பிடப்பட்டுள்ளன. ஒரே இடத்திலிருந்தபடி நெருப்பு தன் வெப்பத்தையும், வெளிச்சத்தையும் சுற்றுப்புற

மெங்கும் பரப்பவல்லது. அதுபோலவே பரமபுருஷனை முழுமுதற் கடவுள் பரமான தன் இருப்பிடத்தில் அமர்ந்தபடியே தன் பல்வேறு சக்திகளை எல்லாத் திசைகளிலும் செலுத்துகிறார்.

பரம்பொருளின் சக்திகள் எண்ணற்றவையெனினும் அவற்றை மூன்று முக்கியமான பிரிவுகளாக வகுக்கலாம் : உள்ளுறையும் சக்தி; விளிம்பில் ததும்பும் சக்தி, புற சக்தி. இவ்வகைகளில் ஒவ்வொன் றிற்கும் கோடிக்கணக்கான உபபிரிவுகள் உள்ளன. இயற்கையின் அம்சங்களான காற்று, ஒளி, மழை போன்றவற்றை நிர்வகிக்கும் அதிபதிகளான தேவதைகள் விளிம்பில் ததும்பும் சக்தியைச் சார்ந் தவர்கள். மனித இனம் உட்பட எல்லா உயிரினங்களும் விளிம்பி லான சக்தியால் உண்டாகியவையே. பௌதிக உலகம் பிரபுவின் புற சக்தியின் படைப்பு. ஆன்மீக வெளி எனப்படும் பகவானின் சாம்ராஜ்யம் அவரின் உள்ளுறை சக்தியின் தோற்றம்.

இப்படியாக, பிரபுவின் வெவ்வேறான சக்திகள் அவரின் வெவ் வேறான வல்லமைகள் மூலம் எங்கும் வியாபித்திருக்கின்றன. பிரபு விற்கும் அவரது சக்திகளுக்கும் எவ்விதமான வேறுபாடுகளும் இல்லை. எனினும், உன்னதமான பிரபு அருவமாக எங்கும் பரவி யிருக்கிறாரென்றோ, அவர் தன் வ்யக்தித்துவத்தை இழந்துவிடுகிறா ரென்றோ நாம் தவறான முடிவிற்கு வந்துவிடக் கூடாது. தம் அறிவிற்கெட்டிய அளவிலேயே ஒரு முடிவிற்கு வருவது மக்களின் இயல்பு. ஆனால் உன்னதமான பிரபு நம் சிற்றறிவின் வரம்புகட்கு உட்பட்டவரல்ல. இதன் காரணமாகத்தான் ஒருவன் தன் குறுகிய அறிவின் துணைகொண்டு இறைவனை அணுகுவது இயலாத காரிய மென்று உபநிஷத்துக்கள் எச்சரிக்கின்றன.

யாரெரும் ரிஷிகளும் சுரர்களும் கூட இறைவனை அறிய வொண்ணார்களென்று பகவத்கீதையில் பகவான் கூறுகிறார். (பகீ. 10.2). அப்படியிருக்க, இறைவனின் வழிவகைகளைப் புரிந்துகொள்ளும் திறனற்றவர்களான அசுரர்களை என்னவென்பது! முடிவில் பூரண சத்தியமே முழுப்பூரணமான வ்யக்தியாய் விளங்குகிறார் என்பதை மிகத் தெளிவாக எடுத்துச் சொல்வதே இந்த நான்காவது மந்திரத் தின் உட்கருத்து. இல்லாவிடில், அவரின் தனிச் சிறப்புக்களை இப்படிப் பல்வேறாக வர்ணிக்கத் தேவையில்லை.

இறைவனின் வல்லமைகளின் தனிப் பிரிவுகளில் அவரின் தனித் தன்மையின் எல்லா அறிகுறிகளும் தென்பட்டாலும் அவை ஒரு வரம்பிற்குள் செயற்படுவதால் அவற்றின் திறனும் வரம்பிற்குட் பட்டவையே. பகுதிகள் ஒருபோதும் முழுப்பொருளுக்கு சமமாகா. எனவே அவை இறைவனின் முழுத்திறனின் மேன்மையை அறிய மாட்டா. இறைவனின் அம்சங்களாயிருந்தும், பௌதிக இயற்கை யின் பிரபாவம் காரணமாக அறியாமையின் வசப்பட்ட உயிர்வாழி கள் இறைவனின் பரமான தன்மையை யூகங்களின் மூலம் அறிய முற்படுகிறார்கள். மனத்தின் துணை கொண்டு யூகங்களின் மூலம்

இறைத் தன்மையை இனங்காண முயற்சிப்பது முற்றிலும் பயனற்ற செயலென்று ஸ்ரீ ஈசோபநிஷத் எச்சரிக்கிறது. பரஞானம் பற்றிய விவரங்களைத் தம்மில் ஏற்கனவே கொண்டுள்ள வேதங்களைப் போன்ற மேலான மூலங்களிலிருந்தே அறிய முயலவேண்டும்.

முழுப் பூரணத்தின் ஒவ்வொரு பகுதியும் தனித்து இயங்குவதற்குத் தேவையான ஒரு குறிப்பிட்ட ஆற்றலைப் பெற்றிருக்கிறது. அந்தப் பகுதி தனக்கென வகுக்கப்பட்டுள்ள இயக்கத்தை மறந்துவிடும்போது அது மாயையின் வசப்பட்டதாகக் கருதப்படுகிறது. எனவே, ஒவ்வொருவரும் தனக்கென இறைவனால் நிர்ணயிக்கப்பட்டுள்ள பாத்திரத்திற்கேற்பச் செயல்படுவதில் கவனமாகவிருக்க வேண்டுமென்று ஸ்ரீ ஈசோபநிஷத் ஆரம்பத்திலேயே நம்மை எச்சரிக்கிறது. இதனால், தனிப்பட்ட ஆத்மாவுக்குத் தன் முயற்சிக்கான உரிமையில்லையென்று ஆகிவிடாது. அவன் இறைவனின் ஒரு பகுதியென்பதால் இறைவனின் திருவுளப்படிச் செயல்படவேண்டியவனாகிறான். ஒருவன் தன் செயலுரிமையை, புத்திபூர்வமாக, எல்லாம் இறைவனின் வல்லமையைச் சார்ந்ததென்று உணர்ந்து பயன்படுத்தினால், புற சக்தியான மாயையின் தொடர்பு காரணமாக இழந்துள்ள தன் ஆதியான உணர்வை மீண்டும் பெறலாம்.

எல்லாத் திறன்களும் இறைவனிடமிருந்து பெறப்பட்டவை. எனவே, ஒவ்வொரு குறிப்பிட்ட திறனும் இறைவனின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக மட்டுமே பயன்படுத்தப்படவேண்டும்; வேறெதற்குமல்ல. பணிவான மனப்பாங்குடைய எவரும் இறைவனையறிய இயலும். இறைவனின் எல்லா அம்சங்களையும், அவரின் வல்லமைகளையும், அவரின் திருவுளப்படி அவை எவ்வாறு இயங்குகின்றன என்பதையும் உணர்ந்தறிவதே பக்குவமான அறிவாகும். இவ்விஷயங்களெல்லாம் உபநிஷத்துக்களின் சாரமான பகவத்கீதையில் பகவானால் பிரத்யேகமாக விவரிக்கப்பட்டுள்ளன.

# ஐந்தாவது மந்திரம்

*தத் ஏஜதி தன் நைஜதி*
*தத் தூரே தத் வ அந்திகே*
*தத் அந்தரஸ்ய ஸர்வஸ்ய*
*தத் உ ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத:*

தத் - இந்த உன்னதமான பிரபு; ஏஜதி - நடக்கிறார்; தத் - அவர்; ந - இல்லை; ஏஜதி - நடக்கிறார்; தூரே - வெகு தூரம்; தத் - அவர்; உ - மேலும்; அந்திகே - மிக சமீபம்; தத் - அவர்; அந்த: - உள்ளே; அஸ்ய - இதன்; ஸர்வஸ்ய - எல்லாவற்றின்; தத் - அவர்; அஸ்ய - இதன்; பாஹ்யாத் - வெளியே.

## மொழி பெயர்ப்பு

உன்னதமான பிரபு நடக்கிறார்; நடப்பதுவுமில்லை. அவர் வெகு தூரத்தில் இருக்கிறார்; எனினும் மிக சமீபத்திலும் இருக்கிறார். அவர் எல்லாவற்றிலுள்ளும் இருக்கிறார்; என்றாலும் அவர் எல்லா வற்றிற்கும் வெளியேயும் இருக்கிறார்.

## பொருளுரை

உன்னதமான பிரபு (இறைவன்) தன் எண்ணற்கரிய ஆற்றல் களின் மூலம் எவ்வாறு செயல்படுகிறார் என்பது இங்கு விளக்கப் பட்டிருக்கிறது. பிரபுவின் எண்ணற்கரிய ஆற்றல்களை நிரூபிப்ப தற்காக 'முரண்பாடான நிலைகள் குறிப்பிட்டப்பட்டுள்ளன. அவர் நடக்கிறார்; நடப்பதுமில்லை. இந்த முரண்பாடு அவரின் எண்ணிப் பார்க்க முடியாத ஆற்றல்களைக் குறிக்கப் பயன்படுகிறது. நமது குறுகிய அறிவாற்றல் இத்தகைய முரண்பாடுகளுக்கு இடம் தராது. வரம்பிற்குட்பட்ட நம் அறிவைக் கொண்டு மட்டுமே நம்மால் இறைவனை எண்ணிப்பார்க்க முடிகிறது. மாயாவாதக் கொள்கை யைச் சார்ந்த அருவவாதிகள் பிரபுவின் அவ்யக்த 'இயக்கங்களை மட்டும் ஒப்புக்கொண்டு அவரின் வியக்தித்துவத்தை நிராகரிக்கிறார் கள். ஆனால் பாகவதத்தை நம்புபவர்கள் கடவுளை வியக்தமான வராகவும் அவ்யக்தமானவராகவும் ஏற்றுக்கொள்கிறார்கள். பாக வதிகள் கடவுளின் எண்ணற்கறிய ஆற்றல்களையும் ஒப்புக்கொள் கிறார்கள். ஏனென்றால், அவையின்றி "உன்னதமான பிரபு" என்ற சொற்கள் அர்த்தமற்றவையாகிவிடும்.

நம் கண்களால் நாம் கடவுளைக் காண முடியாது என்பதால் மட்டும் கடவுளுக்கு வியக்தி நிலையிலான அமைப்பு இல்லை என்று நாம் உடனடியாக முடிவு செய்வதற்கில்லை. கடவுள் நமக்கு வெகு தூரத்திலிருந்தாலும் மிக அருகிலும் உள்ளார் என்று எச்சரித்து

இந்த (அருவ) வாதத்தை ஸ்ரீ ஈசோபநிஷத் மறுக்கிறது. கடவுளின் இருப்பிடம் பௌதிக ஆகாயத்திற்கு அப்பாலுள்ளது. இந்த பௌதிக ஆகாயத்தைக்கூட அளந்தறிவதற்கான வழிவகைகள் நமக்கில்லை. பௌதிக ஆகாயம் அவ்வளவு தூரம் வியாபித்திருக்கு மானால், அதற்கு முற்றிலும் அப்பாலுள்ள ஆன்மீக ஆகாயத்தைப் பற்றி என்ன சொல்ல முடியும்? ஆன்மீக ஆகாயம் பௌதிக ஆகாயத்திற்கு வெகு தொலைவிலுள்ளது என்பதை பகவத்கீதையும் உறுதிப்படுத்துகிறது (பகீ. 15.6). ஆனால் இறைவன் அவ்வளவு தூரத்திலிருந்தாலும் அவர் உடனடியாக, கணப் பொழுதிற்கும் குறைவான நேரத்தில், வாயுவேகம், மனோவேகத்தையும்விட விரை வாக நம்முன் இறங்கி வர முடியும். யாரும் வெல்ல முடியாத வேகத்தில் அவரால் நடக்க முடியும். இது முந்தைய மந்திரத்தில் ஏற்கனவே விவரிக்கப்பட்டுள்ளது.

என்றாலும், பரமபுருஷனை முழுமுதற் கடவுள் நம் முன் தோன் றும்போது நாம் அவரை அசட்டை செய்கிறோம். இந்த முட்டாள் தனமான அசட்டையை பகவான் பகவத்கீதையில் கண்டிக்கிறார். அவரை (மனித உருவில் வரும்போது) மரணத்திற்குட்படக்கூடிய மானுடனென்று எண்ணி ஏளனம் செய்பவர்கள் மூடர்களென்று கீதையில் அவர் கூறுகிறார் (பகீ. 9.11). அவர் நிலையற்ற மானுட னல்ல. பௌதிக இயற்கை உருவாக்கிய உடலைப் பெற்று அவர் நம் முன் வரவில்லை. சாதாரண மனிதர்களைப் போல் மனித உடலைத் தாங்கி இறைவன் இவ்வுலகிற்கு இறங்கி வருகிறார், என்று வாதாடும் அறிஞரெனப்படுபவர்களும் இருக்கிறார்கள். இறைவனின் எண்ணற் கரிய ஆற்றலை அறியாத காரணத்தால் இப்படிப்பட்ட மூட மனிதர் கள் இறைவனை சாதாரண மனிதனின் நிலையில் வைத்துப் பேசுகிறார் கள்.

இறைவன் எண்ணற்கரிய ஆற்றல்கள் நிரம்பியவராகையால் அவர் நமது சேவையை எவ்வழியிலும் ஏற்றுக் கொள்ளலாம். தமது பல்வேறான ஆற்றல்களைத் தம் திருவுளப்படி மாற்றிக்கொள்ள அவ ரால் முடியும். கடவுள் இவ்வுலகில் அவதரிப்பது சாத்தியமில்லை யென்றும், அப்படி அவர் தோன்றினால் ஒரு பௌதிக சக்தியாகவே தோன்ற முடியுமென்றும் கடவுள் நம்பிக்கையற்றவர்கள் வாதாடு கிறார்கள். இறைவனின் எண்ணற்ற ஆற்றல்கள் உண்மையானவை யென்று நாம் ஒப்புக்கொள்ளும்போது இந்த வாதம் தகர்க்கப்படு கிறது. பௌதிக சக்தியின் வடிவிலேயே கடவுள் நம் முன் தோன்றி னாலும் அந்த பௌதிக சக்தியை ஆன்மிக சக்தியாக மாற்றிக் கொள்ள அவரால் முடியும். அந்த சக்திகளின் தோற்றுவாய் ஒன் றேயாகையால் மூல சக்தியின் விருப்பப்படி அவை பயன்படுத்தப் படுவது சாத்தியமே. உதாரணமாக, கடவுள் அர்ச்சா-விக்ரகமாக - அதாவது, மண், கல் அல்லது மரத்தாலான தெய்வங்களாக - தோன்றலாம். இவ்வடிவங்கள் மரம், கல் அல்லது வேறு பொருட்

களில் செலுத்தப்பட்டிருந்தாலும், அவை விக்ரக விரோதிகள் கருதும் விக்ரகங்கள் அல்ல. குறைபாடுகள் கொண்ட ஜட வாழ்வின் நிலையிலிருக்கும் நாம் நமது பார்வைக் கோளாறு காரணமாக உன்னதமான பிரபுவை நேரடியாகக் காணமுடியாமலிருக்கிறோம். எனினும், பௌதிகக் கண்கொண்டு அவரைக் காண விரும்பும் பக்தர்களைத் திருப்திபடுத்துவதற்காக இறைவன் பௌதிகமாகக் கருதப்படும் வடிவைத் தாங்கித் தன் பக்தனின் சேவையை ஏற்றுக் கொள்கிறார். பக்தித் தொண்டின் அடித்தளத்திலிருக்கும் இந்த பக்தர்கள் விக்ரகத்தை வணங்குவதாக நாம் எண்ணக் கூடாது. உண்மையில் அவர்கள் தங்களால் அணுகக்கூடிய உருவில் வந்துள்ள பிரபுவையே வணங்குகிறார்கள். அர்ச்சனைக்கான விக்ரகம் வழிபடுபவரின் விருப்பப்படி உண்டாக்கப்பட்டதாகவும் கருதக் கூடாது. அதுவும் அதற்கான வழிபாட்டுச் சின்னங்களும் நிலையாகக் காலங்காலமாக இருப்பவை என்றே எண்ணப்பட வேண்டும். இப்படிப்பட்ட உணர்வு சிரத்தையுள்ள பக்தனுக்கு மட்டுமே சாத்தியமாகும்; நாத்திகனுக்கல்ல.

தம்மைச் சரணடையும் பக்தர்களோடு மட்டுமே தாம் தொடர்பு கொள்வதாக பகவத்கீதையில் பகவான் கூறுகிறார் (பகீ. 4.11). தம்மிடம் சரணடைந்துள்ள ஆத்மாக்களுக்கல்லாது மற்ற எவருக்கும் தன்னை வெளிப்படுத்துவதில்லையென அவர் தீர்மானித்துள்ளார். எனவே, தன்னிடம் சரணடைந்துள்ள ஆத்மாக்களுக்கு மிக அருகிலும், சரணடையாத ஆத்மாக்களுக்கு அவர்கள் அணுக முடியாத தொலை தூரத்திலும் அவர் அமர்ந்திருக்கிறார்.

இந்த சந்தர்பத்தில், "சகுண" (தன்மைகள் கொண்ட), "நிர்குண" (தன்மைகளற்ற) ஆகிய சொற்களை அறிந்து கொள்ள வேண்டியது மிகவும் முக்கியம். இச் சொற்கள் வெளிப்படுத்தப்பட்டுள்ள வேதங்களில் அடிக்கடி வருகின்றன. "சகுண" என்ற சொல் இறைவன் புலன்களால் அறியப்படக்கூடிய தன்மைகளை ஏற்று பௌதிக வடிவில் தோன்றுவதால் அவர் பௌதிக இயற்கையின் நியதிகளுக்குட்பட்டவர் என்ற பொருளில் வருவதல்ல. அவரே எல்லா சக்திகளின் தோற்றுவாயாகையால் அவரைப் பொறுத்தவரை பௌதிக சக்திகளுக்கும் ஆன்மிக சக்திகளுக்குமிடையே எந்த வேறுபாடுகளும் இல்லை. எல்லா சக்திகளையும் ஆள்பவர் அவரேயாகையால் அவை நம்மைப் பாதிப்பதுபோல் அவரைப் பாதிப்பதில்லை. பௌதிக சக்திகளெல்லாம் அவரது ஆணைப்படி இயங்குகின்றன. எனவே, அவைகளின் தன்மைகளுக்குத் தாம் உட்படாமல் அவற்றைத் தம் நோக்கங்களுக்காகப் பயன்படுத்தும் ஆற்றல் அவருக்கு உண்டு. அவர் எந்தச் சமயத்திலும் வடிவற்ற அமைப்பாக விளங்குவதுமில்லை. ஏனென்றால் என்றும் நிலைத்திருக்கும் ஆதி வடிவம் அவரே. சூரிய கிரணங்கள் சூரிய தேவனின் பிரகாசமாக விளங்குவதுபோல் இறைவனின் அருவ நிலை

யான பிரஹ்ம ஜோதியும் அவரது வ்யக்தித்துவத்திலிருந்து தோன்றும் ஒளிப்பிழம்பேயாகும்.

குழந்தை ஞானியான பிரஹ்லாத மகாராஜா நாத்திகனான தன் தந்தையின் முன்னிலையில் நின்றிருந்தபோது, "உன் கடவுள் எங்கிருக்கிறார்?" என்று அவர் தந்தை கேட்டார். "கடவுள் எங்குமிருக்கிறார்" என்று பிரஹ்லாதர் பதில் சொன்னபோது, தந்தை கோபமுற்று, "கடவுள் அரண்மனையின் தூணிலிருக்கிறாரா?" என்று கேட்டதற்கு "ஆம்" என்று குழந்தை பதில் கூறியது. நாத்திகனான தந்தை உடனே குழந்தையின் முன்னால் தூணைத் துண்டு துண்டாக உடைத்தெறிந்தார். அப்போது பகவான் பாதி மனிதனும் பாதி சிம்மமுமான நரசிம்ம வடிவில் தோன்றி நாத்திக மன்னனைக் கொன்றார். இவ்வாறாக, இறைவன் எல்லாவற்றிலும் உறைகிறார்; தன் எண்ணற்கரிய ஆற்றல்களால் எல்லாவற்றையும் படைக்கிறார். தனது பல்வேறான ஆற்றல்களால் தன் உண்மையான பக்தர்களுக்கு அருள்புரிவதற்காக அவர் எந்த இடத்திலும் தோன்றுவார். நரசிம்ம மூர்த்தி தூணில் தோன்றியது நாத்திக அரசனின் கட்டளைப்படியல்ல; தன் பக்தனான பிரஹ்லாதனின் விருப்பத்திற்கிணங்கி அவர் வெளிப்பட்டார். நாத்திகனால் கடவுளைத் தோன்றும்படி கட்டளையிட முடியாது. ஆனால் பக்தனிடம் கருணை காட்டுவதற்காக இறைவன் எங்கு வேண்டுமானாலும், எல்லாவிடங்களிலும் காட்சி தருவார். தம்மிடம் நம்பிக்கையற்றவர்களை அழித்து நம்புபவர்களைக் காப்பதற்காகத் தாம் அவதரிப்பதாக பகவான் பகவத்கீதையில் கூறுகிறார் (பகீ. 4,8). நாத்திகர்களை ஒழிப்பதற்கான சக்திகளும் ஏவலர்களும் அவரிடம் அபரிமிதமாக இருந்தாலும் பக்தர்களுக்கு அருள்வதற்காகத் தாமே நேரில் தோன்றுவதை அவர் மிகவும் விரும்புகிறார். எனவே அவர் அவதாரமெடுக்கிறார். அவர் அவதரிப்பதெல்லாம் தன் பக்தர்களுக்கு அருள்வதற்காகவேயன்றி வேறு எதற்காகவுமல்ல.

ஆதிமூலமான கோவிந்தன் தனது வரம்பற்ற சக்தியில் எல்லாவற்றிலும் நிறைந்து நிற்கிறாரென்று பிரஹ்மஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. அவர் இந்தப் பிரபஞ்சத்திலும் அதன் அணுக்களிலும் புகுந்து விளங்குகிறார். தமது "விராட" உருவில் எல்லாவற்றிற்கும் வெளியிலும், "அந்தர்யாமி"யாக எல்லாவற்றினுள்ளும் அமைகிறார். அந்தர்யாமியாக அவர் எல்லா நடப்புக்களுக்கும் சாட்சியாக அமர்ந்து நம் வினைகளுக்கான கர்ம பலனை நமக்கு வழங்குகிறார். நம் முந்தைய பிறவிகளில் நாம் செய்த வினைகளை நாம் மறந்திருக்கலாம். ஆனால் நம் செயல்களுக்கு இறைவனே சாட்சியாக அமைந்திருப்பதால் நம் வினைகளின் பலன்களை நாம் அனுபவித்தேயாக வேண்டும்.

உள்ளும் புறமும் கடவுளைத் தவிர வேறெதுவுமில்லையென்பதே உண்மை நிலை. நெருப்பிலிருந்து வெப்பமும் ஒளியும் வெளிப்படு

வதுபோல் எல்லாம் அவரது பல்வேறு ஆற்றல்களின் வெளியீடுகளே. இப்படியாக வெவ்வேறான சக்திகளிலும் ஒருமை காணப்படுகிறது. ஒருமை காணப்படினும், வெவ்வேறான சின்னஞ்சிறு உயிர்வாழ் பகுதிகளின் உணர்வுகளில் இறைவன் தன்னுருவில் நிறைந்து நின்று அனுபவிப்பாளராக விளங்குகிறார்.

# ஆறாவது மந்திரம்

யஸ் து ஸர்வாணி பூதானி
ஆத்மனி ஏவானுபச்யதி
ஸர்வ பூதேஷு சாத்மானம்
ததோ ந விஜுகுப்ஸதே

ய: - எவனொருவன்; து - ஆனாலும்; ஸர்வாணி - எல்லா; பூதானி - உயிர்வாழிகளையும்; ஆத்மானி - பரம புருஷனோடு இணைத்து; யேவ-மாத்திரம்; அனுபச்யதி - முறையாகக் காண்பவன்; ஸர்வ பூதேஷு - எல்லா உயிர்வாழிகளிலும்; ச - கூட; ஆத்மானம் - உயராத்மாவை; தத: - பின்னர்; ந - இல்லை; விஜுகுப்ஸதே - யாரையும் வெறுப்பதில்லை.

## மொழி பெயர்ப்பு

எல்லாவற்றையும் பரமபுருஷனோடு இணைத்துப் பார்ப்பவன், எல்லா உயிர்வாழிகளையும் அவரின் இணைபிரியா அம்சங்களாகக் காண்பவன், எல்லாவற்றிலும் உன்னதமான பிரபுவாகிய இறைவனை உணர்பவன், எப்பொருளையும் எந்த உயிரினத்தையும் வெறுப்பதில்லை.

## பொருளுரை

எல்லாவற்றையும் பரம புருஷனான முழுமுதற்கடவுளோடு இணைத்துப் பார்க்கும் மகானான மகாபாகவதனை இந்த மந்திரம் வர்ணிக்கிறது. உன்னதமான பிரபுவாகிய இறைவனின் சாந்நித்யத்தை உணர்வதற்கான மூன்று நிலைகள் உள்ளன. "கனிஷ்ட அதிகாரி" எனப்படுபவன் இறையுணர்வைப் பெறும் முயற்சியில் கடைநிலையில் நிற்பவன். அவன் ஆலயம், சர்ச், மசூதி போன்ற ஒரு வழிபாட்டுத் தலத்துக்குச் சென்று தன் மதக்கோட்பாட்டின்படி இறைவனை வணங்குகிறான். இப்படிப்பட்ட பக்தன் இறைவன் தான் வணங்கும் தலத்தில் மட்டும் இருப்பதாகவும் வேறெங்கும் இல்லையென்றும் கருதுகிறான். யார் பக்தித் தொண்டின் எந்த நிலையில் இருக்கிறாரென்றோ, இறைநிலையை உணர்ந்திருப்பவர் யாரென்றோ அவன் அறிய இயலாதவன். இப்படிப்பட்ட பக்தர்கள்

வழக்கமான நியமங்களை அனுசரிப்பதோடு சரி. பக்தி முறைகளில் ஒன்றைவிட மற்றொன்று மேலானதென்று இவர்கள் தமக்குள் சண்டையிட்டுக் கொள்வதுமுண்டு. உண்மையில் இந்தக் கனிஷ்ட அதிகாரிகள் ஜட எல்லைகளைக் கடந்து ஆன்மீகத் தளத்தை அடையும் முயற்சியில் ஈடுபட்டிருந்தும் ஜடவுணர்வு கொண்ட பக்தர்களாகவேயிருக்கிறார்கள்.

இறையுணர்வைப் பெறும் முயற்சியில் இரண்டாவது படியில் நிற்பவர்கள் மத்யம அதிகாரிகள் எனப்படுகிறார்கள். இவர்கள் நான்கு நியமங்களை அனுசரிக்கிறார்கள்: (1) முதலில், அவர்கள் உன்னதமான பிரபுவிடம் நாட்டம் கொண்டவர்கள். (2) பின்னர், பிரபுவின் பக்தர்களிடம் அக்கறை காட்டுகிறார்கள். (3) அடுத்து, இறைவனைப் பற்றிய அறிவில்லாத அப்பாவிகளிடம் கவனம் செலுத்துகிறார்கள். (4) பின்பு, கடவுள் நம்பிக்கையற்றவர்களும், கடவுளிடம் பக்தி கொண்டிருப்பவர்களை வெறுப்பவர்களுமான நாத்திகர்களைக் காண்கிறார்கள். மத்யம அதிகாரி சூழ்நிலைக்குத் தகுந்தவாறு நடந்து கொள்கிறான். அவன் இறைவனை அன்பிற்குரியவராகக் கருதிப் போற்றுகிறான். பக்தித் தொண்டில் ஈடுபட்டிருப்பவர்களோடு நட்புறவு கொள்கிறான். அறிவற்றவர்களின் உள்ளங்களில் உறங்கிக் கிடக்கும் இறையுணர்வைத் தட்டி எழுப்ப முயற்சிக்கிறான். ஆனால் இறைவனின் நாமத்தை இகழ்ந்துரைக்கும் நாத்திகர்களை அவன் அணுகுவதில்லை.

ஞானம் பெறும் மூன்றாவது நிலையில் நிற்பவன் உத்தம அதிகாரி எனப்படுகிறான. அவன் எல்லாவற்றையும் இறைவனோடு இணைத்துக் காண்கிறான். இப்படிப்பட்ட பக்தன் ஆஸ்திகன், நாத்திகன் என்று பேதம் பார்ப்பதில்லை. எல்லாரையும் கடவுளின் இணைபிரியாத அம்சமாகவே காண்கிறான். மகா பண்டிதனான பிராம்மணனும் ஒரு தெரு நாயும் பௌதிக இயற்கையின் குணங்களுக்கேற்ப வேறுபாடான உடல்களைப் பெற்றிருந்தாலும், இரண்டுமே இறைவனின் அம்சங்கள் என்பதால் அவற்றிற்கிடையே எவ்விதமான வித்யாசமுமில்லை என்பதை உத்தம அதிகாரி அறிந்திருக்கிறான். இறைவனின் ஒரு சிறு துளியான அந்தப் பிராம்மணன் இறைவனால் அளிக்கப்பட்ட சிறு இயக்க சுதந்திரத்தை துர்பிரயோகம் செய்யாமலிருந்திருக்கிறான் என்பதையும், இறைவன் மற்றுமொரு சிறு துளியான அந்த நாய் தனக்களிக்கப்பட்டிருந்த சுதந்திரத்தை துர்பிரயோகம் செய்த காரணத்தால் இயற்கையின் விதிகளின்படித் தண்டிக்கப்பட்டு அறிவு சூன்யமான உருவைப் பெற்றிருக்கிறது என்பதையும் அவன் தெரிந்திருக்கிறான். பிராம்மணன், நாய் ஆகிய இரு சாராரின் செயல்களைப் பற்றிக் கவலைப்படாமல் இரு சாராருக்கும் நன்மை செய்வதையே உத்தம அதிகாரி விரும்புகிறான். அவன் கற்றறிந்த பக்தனாகையால் ஜடவுடலின் இயல்புகளைப் புறக்கணித்து உயிரினங்களில் காணப்படும் ஆன்மீகப் பொறியால் கவரப்படுகிறான்.

உத்தம அதிகாரியைப் போல் ஒருமையுணர்வு அல்லது நட்புறவு கொண்டிருப்பதாகப் பாவனை செய்யும் பொய்யான கொடை வள்ளல்களெல்லாம் உண்மையில் உடலைச் சார்ந்த தளத்தில் தன்னலத்திற்காகச் செயல்படுபவர்களே. "யாவரும் கேளிர்" என்ற தத்துவம் உத்தம அதிகாரியிடமிருந்து கற்கப்படவேண்டியதொன்றாகும்; தனிப்பட்ட ஆத்மாவையும் எங்கும் நிறைந்த உன்னதமான இறைவனின் விரிவாற்றலான உயர் ஆத்மாவையும் சரிவரப் புரிந்து கொள்ளாத ஒரு மூடனிடமிருந்தல்ல.

எதையும் நன்றாகக் கவனிக்க வேண்டும் அல்லது பார்க்கவேண்டுமென்று இந்த மந்திரத்தில் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளது. அதாவது, ஒருவன் பக்குவமடைந்த குருவான ஆச்சார்யரைப் பின்பற்ற வேண்டுமென்பது கருத்து. இதை எடுத்துச் சொல்வதற்காகப் பயன்படுத்தப்பட்டுள்ள பொருத்தமான சம்ஸ்கிருதச் சொல் "அனுபச்யதி" என்பது. "பச்யதி" என்றால் கவனித்தல் அல்லது பார்த்தல். இதன் பொருள் ஒருவன் தன் சாதாரணக் கண்கொண்டு எதையும் பார்க்க முயல வேண்டும் என்பதல்ல. உயர்வான மூலத்திலிருந்து அறிவைப் பெற்றிருந்தாலொழிய சரியாகப் பார்க்க, கவனிக்க முடியாது. மிக உயர்ந்த மூலம் இறைவனின் திருவாயிலிருந்து பிறந்துள்ள வேதஞானமே. வேத உண்மைகள் சிஷ்ய பரம்பரை முறையில் இறைவனிடமிருந்து பிரம்மாவுக்கும், பிரம்மாவிடமிருந்து நாரதருக்கும், நாரதரிடமிருந்து வியாசருக்கும், வியாசரிடமிருந்து பற்பல சிஷ்யர்களுக்கும் வந்துள்ளன. முந்திய யுகங்களில் வாழ்ந்தவர்கள் நல்ல அறிவாளிகளாகவும் கூர்மையான ஞாபகசக்தியுள்ளவர்களாகவும் விளங்கியதால் வேதங்களின் கருத்துக்களை எழுதிவைக்கத் தேவையில்லாமலிருந்தது. அதிகாரம் பெற்ற ஆன்மீக குருவிடமிருந்து ஒரு முறை கேட்டறிந்த மாத்திரத்திலேயே வேதக்கட்டளைகளை மனத்தில் ஏற்று நடக்க அவர்களால் முடிந்தது.

வெளிப்படுத்தப்பட்டுள்ள வேதங்களுக்கு இக்காலத்தில் பல பாஷ்யங்கள் உள்ளன. ஆனால் இவற்றில் பெரும்பாலானவை வேத ஞானத்தை முதன்முதலாக வழங்கிய ஸ்ரீல வியாச தேவரின் சிஷ்ய பரம்பரையில் வந்தவையல்ல. ஸ்ரீல வேதவியாசரின் முடிவான, நிறைவு மிக்க, உயர்வுமிக்க நூல் ஸ்ரீமத் பாகவதமாகும். அதுவே வேதாந்த சூத்திரத்தின் அதிகாரபூர்வமான பாஷ்யம். உன்னதமான பிரபு தாமே திருவாய் மலர்ந்தருளி, வியாச தேவரால் பதிவு செய்யப்பட்ட பகவத்கீதை மற்றுமொரு விளக்கவுரை. இவை வெளிப்படுத்தப்பட்டுள்ள வேத நூல்களில் மிக முக்கியமானவை. கீதை அல்லது ஸ்ரீமத் பாகவதத்தில் கண்டுள்ள கொள்கைகளுக்கு முரணான எந்த விளக்கவுரையும் அதிகாரபூர்வமானதாகாது. உபநிஷத்துக்கள், வேதாந்தம், வேதங்கள், பகவத்கீதை, ஸ்ரீமத் பாகவதம் ஆகியவற்றின் கருத்துக்களில் முழு ஒற்றுமை காணப்படுகிறது. வியாச

தேவரின் வழிவந்த சிஷ்யர்களிடமிருந்தாவது, அல்லது குறைந்த பட்சம் புருஷோத்தமனை முழுமுதற்கடவுளிடமும் அவரின் பற்பல சக்திகளிலும் நம்பிக்கை கொண்டிருப்பவர்களிடமாவது சிட்சை பெருமல் வேதங்களைப் பற்றிய எந்த முடிவிற்கும் வர யாரும் முயற்சிக்கக் கூடாது.

பகவத்கீதையில் கண்டுள்ளபடி முக்தியடைந்த நிலையிலுள்ள ஒருவனே உத்தம அதிகாரியான பக்தனுக விளங்கமுடியும். ஒவ்வொரு உயிரினத்தையும் தன் சகோதரனுக அவன் காண்கிருன். இவ்வுலக லாபத்தைக் கருதும் அரசியல்வாதிகளிடம் இந்த நோக்கு இருக்காது. உத்தம அதிகாரியின் தன்மைகளைக் கொண்டவனுக பாவனை செய்பவன் புகழுக்காகவும் இகவுலக லாபங்களுக்காகவும் புறவுடலுக்கு சேவை செய்யலாம். ஆனுல் உள்ளிருக்கும் ஆன்மாவுக்கு சேவை செய்தவனுகான். இப்படி போலியாக நடப்பவனுக்கு ஆன்மீக உலகம் பற்றிய அறிவு என்றும் கிட்டாது. உத்தம அதிகாரி உயிர்வாழியின் ஆத்மாவை இனங்கண்டு ஆத்மார்த்தமாக சேவை செய்கிருன். இதனுல் இகவுலக நலன்களும் தாமே கவனிக்கப்படுகின்றன.

# ஏழாவது மந்திரம்

யஸ்மின் ஸர்வாணி பூதானி
ஆத்மைவாபூத் விஜானத:
தத்ர கோ மோஹ: க: சோக
ஏகத்வம் அனுபச்யத:

யஸ்மின் - எப்போது; ஸர்வாணி - எல்லா; பூதானி - உயிரினங்கள்; ஆத்மா - ஆன்மப்பொறி; ஏவ - மாத்திரம்; ஆபூத் - ஆக அமைந்திருக்கின்றன; விஜானத: அறிபவனுக்கு; தத்ர - அதில் (அப்போது); க: - என்ன; மோஹ: - மாயை; க: - என்ன; சோக: - கவலை; ஏகத்வம் - ஒருமை; அனுபச்யத: - காண்பவன் (அதிகார பூர்வமாக அல்லது நிலையாக)

## மொழி பெயர்ப்பு

எல்லா உயிரினங்களையும் ஆன்மப் பொறிகளாகவும் தன்மையில் இறைவனோடு ஒன்றியவையாகவும் காண்பவன் வஸ்துக்களின் உண்மை நிலையை அறிந்தவனாகிறான். அப்போது அவனுக்குக் கவலையோ மாயையோ ஏது?

## பொருளுரை

முன் விவரிக்கப்பட்ட மத்யம அதிகாரி மற்றும் உத்தம அதிகாரிகளைத் தவிர வேறு எவராலும் ஒரு உயிர் வாழியின் உண்மையான ஆன்மீக நிலையை சரிவரக் காண முடியாது. நெருப்பின் பொறிகள் நெருப்பின் தன்மையைக் கொண்டிருப்பதுபோல், உயிர்வாழிகள் தம் தன்மையில் இறைவனோடு ஒன்றானவர்களெனினும், தீப்பொறிகளிலுள்ள வெப்பத்தின் அளவு எரியும் நெருப்பிலுள்ள வெப்பத்தின் அளவுக்கு சமமானதாகாதாகையால், அளவைப் பொறுத்த வரையில் பொறிகள் நெருப்பாகா. மகா பக்தனான மகா பாகவதன் எல்லாவற்றிலும் ஒருமையைக் காண்கிறானென்றால், எல்லாவற்றையும் உன்னதமான பிரபுவாகிய இறைவனின் சக்தியாகக் காண்கிறான். சக்திக்கும் சக்தியை உள்ளடக்கிய ஒன்றிற்கும் வேறுபாடில்லையாகையால் அவற்றில் ஒருமையை உணர முடிகிறது. ஆய்ந்து பார்த்தால் வெப்பமும் ஒளியும் வெவ்வேறானவையானாலும், வெப்பமும் ஒளியுமில்லாமல் "நெருப்பு" என்ற சொல்லுக்குப் பொருளில்லை. ஆனால், ஒருசேரப் பார்த்தால் வெப்பம், ஒளி, நெருப்பு எல்லாம் ஒன்றே.

"ஏகத்வம் அனுபச்யத:" எனும் சம்ஸ்கிருதச் சொற்கள் உயிர் வாழிகள் எல்லாவற்றிலுமுள்ள ஒருமையை, வெளிப்படுத்தப்பட்டுள்ள வேத நூல்களின் கண்ணோட்டத்தில் காணவேண்டுமென்

பதைக் குறிக்கின்றன. உன்னதமான முழுப் பொருளின் அறியப் பட்ட தன்மைகளில் எண்பது சதவிகிதம் அதன் தனியான பொறிகளிலும் காணக்கிடைக்கின்றன. ஆனால் அவை தம்மளவில் முழு முதற் கடவுளுக்குச் சமமாகா. உயிர்வாழி முழுமுதற் பொருளின் ஒரு சின்னஞ்சிறு பகுதியே, ஆகையால் அவரின் (கடவுளின்) தன்மைகள் அவற்றில் நுண்ணிய அளவிலேயே இடம் பெறுகின்றன. இதற்கான மற்றொரு உவமை: கடல் நீர் முழுமையிலுமுள்ள மொத்த உப்பின் அளவு அதன் துளியிலுள்ள உப்பின் அளவிற்கு ஒப்பாகாது. ஆனால், ஒவ்வொரு துளியிலுமுள்ள உப்பின் தன்மையும் ரசாயன அமைப்பும் கடல்நீர் முழுவதிலுமுள்ள உப்புக்கு சமமானதாகும். தனிப்பட்ட உயிர்வாழி தன் தன்மையிலும் அளவிலும் இறைவனுக்கு ஈடானவனாகவிருந்தால் அவன் பௌதிக இயற்கையின் பிரபாவத்தில் கட்டுண்டிருக்கும் பிரச்னையே இருக்காது. எந்த உயிர்வாழியும், வல்லமையுள்ள தேவர்களும் கூட, உன்னதமான பரம்பொருளை எவ்வகையிலும் மிஞ்சமுடியாதென்று முந்தைய மந்திரங்களில் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. எனவே, "ஏகத்வம்" என்றால், உயிர்வாழி எல்லா வகைகளிலும் உன்னதமான பிரபுவுக்கு இணையானவனென்று பொருளல்ல. ஆனால், பரவலான கருத்தில் ஒருமை இருக்கிறது என்பதை அது குறிக்கத்தான் செய்கிறது. இது, ஒரு குடும்பத்தினரிடையே பொதுவான கருத்தொற்றுமை இருப்பதைப் போலவும், ஒரு தேசத்தின் பல்வேறான குடி மக்களில் தேசிய நலன்களைப் பற்றிய கருத்தொருமை இருப்பதைப் போலவுமாகும். உயிர்வாழிகளெல்லாம் ஒரே தெய்வீகக் குடும்பத்தின் அங்கங்களாகையால் உன்னதமான பரம்பொருளுக்கும் உயிர்வாழிகளுக்குமிடையே கருத்து வேற்றுமை இருக்காது. ஒவ்வொரு உயிர்வாழியும் உன்னதமான பரம்பொருளின் குழந்தை. பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளது போல் (பகீ. 14.3-4), பறவைகள், ஊரும் ஜந்துக்கள், எறும்புகள், நீர்வாழினங்கள், மரங்கள் போன்ற, பிரபஞ்சம் முழுவதிலுமுள்ள எல்லா உயிர் வகைகளும் உன்னதமான பிரபுவின் சக்தியின் விளிம்பில் ததும்பும் ஆற்றலிலிருந்து வெளிப்பட்டவையே. ஆகையால் அவையெல்லாமே உன்னதமான பரம்பொருளின் குடும்பத்தைச் சேர்ந்தவை. ஆன்மீக வாழ்வில் கருத்துப் போராட்டங்களுக்கு இடமில்லை.

ஆன்மீக அமைப்புக்கள் இன்ப நிலைசளை அனுபவிப்பதற்காக ஏற்பட்டவை. இயல்பாலும் அமைப்பாலும் ஒவ்வொரு உயிர்வாழியும் - அதாவது உன்னதமான பிரபுவும் அவரின் ஒவ்வொரு அம்சமும் - (ஆன்மீக அமைப்பில்) நித்யமான இன்பத்தை அனுபவிப்பதற்காக ஏற்பட்டதாகும். பௌதிக தளத்தில் இயங்குகின்ற உயிர்வாழிகளும் இடைவிடாது இன்பத்தையே தேடுகிறார்கள், ஆனால் அதை அவர்கள் தவறான தளத்தில் நாடுகிறார்கள். இந்த பௌதிக உலகத்தைத் தவிர ஆன்மீகத் தளமும் இருக்கின்றது. அங்கு

உன்னதமான பரம்பொருள் தன் எண்ணற்ற கூட்டாளிகளோடு தன்னுனந்த நிலையை அனுபவித்துக் கொண்டிருக்கிறுர். அந்தத் தளத்தில் பௌதிக உலகின் ஜடத்தன்மைகள் எதுவுமில்லை. எனவே அந்த தளம் "நிர்குணம்" எனப்படும். "நிர்குண" தளத்தில் அனுபவிக்கப்படும் பொருளுக்காகப் போராட்டங்களெதும் நடப்பதில்லை. இங்கே, இவ்வுலகில், வெவ்வேருன உயிரினங்களிடையே எப்போதும் போராட்டங்கள் நிகழ்ந்தவண்ணமிருக்கின்றன. ஏனென்ருல் இங்கே இன்பத்தின் சரியான மையத்தைப் பற்றிய அறியாமை நிலவுகிறது. இன்பத்தின் உண்மையான மையம் உன்னதமான பரம்பொருளே. அவரே மேன்மையானதும் ஆன்மீகமானதுமான "ராஸ" நடனத்தின் மையமாவார். நாமெல்லோரும் அவரோடிணைந்து, எவ்விதப் போராட்டமுமின்றி உன்னதமான ஒரே குறிக்கோளோடு வாழ்க்கையை அனுபவிப்பதற்காக ஏற்பட்டுள்ளோம். அதுவே ஆன்மீகக் குறிக்கோளோடு கூடிய உயர்ந்த தளமாகும். ஒருமையின் அடிப்படையிலான பக்குவம் மிக்க இத்தளத்தை உணர்ந்தவுடனேயே மாயையும் புலம்பல்களும் மறைந்து விடுமென்பதில் ஐயமில்லை.

கடவுளற்ற நாகரிகம் மாயையிலிருந்து பிறக்கிறது. இத்தகைய நாகரிகத்தின் விளைவு புலம்பல். இன்றைய அரசியல்வாதிகள் ஏற்படுத்தியுள்ள கடவுளற்ற சமுதாயத்தில் வியாகூலங்கள் எப்போதும் மிகுந்து காணப்படுகின்றன. இதுவே இயற்கையின் நியதி. பகவத்கீதையில் சொல்லப்பட்டிருப்பதுபோல் (பகீ. 7.14) உன்னதமான பிரபுவின் பாதகமலங்களில் சரணடைந்தவர்களுக்கல்லாது மற்றவர்களுக்கு இயற்கையின் கடுமையான நியதிகளைப் புறங்காண்பது சாத்தியமல்ல. எனவே, எல்லா வகையான மாயைகளையும் மனக்கவலைகளையும் அகற்றி வேறுபட்ட நோக்கங்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்த வேண்டுமானுல் நம் செயல்களிலெல்லாம் இறைவனை இணைப்பது மிகவும் அவசியம்.

உன்னதமான இறைவனின் நோக்கங்களுக்காகச் செயல்படுவதே நமது லட்சியமாகவிருக்க வேண்டும்; வேறு எந்தக் காரியங்களுக்காகவுமல்ல. இறைவனின் நோக்கங்களுக்காகச் செயலாற்றும் போது மட்டும் இச் செய்யுளில் குறிப்பிட்டுள்ள "ஆத்ம-பூத்" நோக்கத்தை இனங்காணவியலும். இந்த மந்திரத்தில் சொல்லப்பட்டுள்ள "ஆத்ம-பூத்" நோக்கமும் பகவத்கீதையில் (பகீ. 18.54) கூறப்பட்டுள்ள "பிரஹ்ம-பூத" நோக்கமும் ஒன்றுனதுவேயாகும். பரமாத்மா எனப்படுவது உன்னதமான பிரபுவாகிய இறைவனே. நுண்ணிய ஆத்மா உயிர்வாழியாகிறுன். தனியாய் எல்லா உயிரினங்களையும் பரிபாலிப்பது உன்னதமான ஆத்மாவான பரமாத்மாவே. ஏனெனில், உன்னதமான பிரபு அவை காட்டும் அன்பில் மகிழ்ச்சியடைகிறுர். மக்கள் பணிவுடையவர்களாகவிருந்தால் குடும்ப விவகாரங்களை ஒருமித்த நோக்கோடு மகிழ்ச்சியான சூழ்நிலை

யில் நடத்திச் செல்வது ஒரு தந்தைக்கு எளிதாகவிருக்கும். பரபிரஹ்மத்தின் குடும்பத்திலும் இதே நிலை திவ்யமான வகையில் அமைந்துள்ளது.

பரபிரம்மமும் உயிர்வாழியைப் போலவே ஒரு நபராவார். பரமனோ, உயிர்வாழியோ, அருவமானவரல்ல. இத்தகைய பரநிலையிலானவர்கள் பரமானந்த நிலையில், பரமான ஞான நிலையில், நித்யமான வாழ்வு நிலையில், நிறைவுடன் விளங்குகிறார்கள் ஆன்மீக இருப்பின் உண்மை நிலை இதுவே. இந்த உன்னதமான நிலையை முழுவதுமாக உணர்ந்தவன் உடனேயே பரம்பொருளான ஸ்ரீ கிருஷ்ணரின் பாதாரவிந்தங்களில் சரணடைகிறான். ஆனால், இத்தகைய மகாத்மா அரிதாகவே தென்படுகிறான். ஏனெனில், இப்படிப்பட்ட திவ்யமான உணர்வு பற்பல பிறவிகள் எடுத்த பின்னரே சித்தியாகிறது (பகீ. 7.19). ஆனால், சித்தியடைந்துவிட்டால் பின்பு இகவுலக வாழ்வில் நம்மைப் பீடிக்கும் எத்தகைய மாயையும், இன்னலும், ஜடவாழ்வு அல்லது பிறப்பு காரணமாக எழும் துன்பமும் இத்தகைய மகானை அணுகுவதில்லை. ஈசோபநிஷத்தின் இந்த மந்திரத்தில் நாம் இச்செய்தியைப் பெறுகிறோம்.

# எட்டாவது மந்திரம்

ஸ பர்யகாச் சுக்ரம் அகாயம் அவர்ணம்
அஸ்நாவிரம் சுத்தம் அபாப வித்தம்
கவிர் மனீஷீ பரிபூ: ஸ்வ்யம்பூர்
யாதா தத்யதோர் தான் வ்ய த தாச்
சாச்வதீப்ய: ஸமாப்ய:

ஸ: - இப்படிப்பட்ட ஒருவர்; பர்யகாச் - உண்மையில் அறியவேண்டும்; சுக்ரம் - சர்வ வல்லமையுள்ளவர்; அகாயம் - சரீரமற்றவர்; அவர்ணம் - குறையற்றவர்; அஸ்நாவிரம் - நரம்பற்றவர்; சுத்தம் - பரிசுத்தமானவர்; அபாப வித்தம் - களங்கமற்றவர்; கவி: - எல்லாமறிந்தவர்; மனீஷீ - ஞானி; பரிபூ: - மகத்தானவர்; ஸ்வயம்பூ: - தன்னிறைவு பெற்றவர்; யாதா தத்ய த: - முறைப்படி; அர்த்தான் - விருப்பங்கள்; வ்யதாத் - வழங்குகிறார்; சாச்வதப்ய: - தொன்று தொட்டு; ஸமாப்ய: - காலம்.

## மொழி பெயர்ப்பு

இப்படிப்பட்ட ஒருவர், மகத்தானவரும், சரீரமற்றவரும், எல்லாமறிந்தவரும், குறையற்றவரும், நரம்பற்றவரும், பரிசுத்தமானவரும், மாசுபடாதவரும், எல்லாருடைய விருப்பங்களையும் தொன்று தொட்டு நிறைவேற்றி வருபவரும், தன்னிறைவு பெற்ற தத்வஞானியுமான இறைவனை அவரது உண்மை நிலையில் உணர்ந்தவராக இருத்தல் வேண்டும்.

## பொருளுரை

முழுப்பூர்ணமான முழுமுதற்கடவுளின் பரமானதும் நித்யமானதுமான வடிவத்தை விளக்கும் இந்த வர்ணனை உன்னதமான பிரபு வடிவமற்றவரல்ல என்பதைக் குறிக்கிறது. அவரது தன்னிகரற்ற பரமரூபம் இம்மையுலகத்தின் எந்த வடிவத்தோடும் ஒப்பிட முடியாதது. இவ்வுலகிலுள்ள உயிர்வாழியின் ரூபங்கள் பௌதிக இயற்கையில் உருப்பெற்றவை; ஜடமான யந்திரத்தைப் போல் இயங்குபவை. பூதவுடல் நரம்புகள் போன்ற பொருட்களாலான யந்திரமாக அமைந்துள்ளது. ஆனால் உன்னதமான பிரபுவின் திவ்ய சரீரத்தில் நரம்புகள் போன்ற எதுவுமில்லை. அவர் சரீரமில்லாதவரென்று இங்கு தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. அவரின் உடலுக்கும் ஆன்மாவுக்கும் எந்த வித்தியாசமுமில்லையென்பது இதன் பொருள். நம்மைப் போல் இயற்கையின் விதிகளுக்குட்பட்ட உடலை அவர் ஏற்றவரல்லர். பௌதிக உடல் பற்றிய கருத்துக்களின்படி ஆத்மாவானது ஜடவுடல், நுண்மனம் ஆகியவற்றிலிருந்து வேறுபட்ட

தன்மையுடையதாகும். ஆனால், உன்னதமான இறைவன் இத்தகைய பாகுபடுத்தப்பட்ட ஏற்பாடுகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர். அவரது உடலுக்கும் மனத்திற்கும் எவ்விதமான வேறுபாடுமில்லை. அவர் முழுப் பூரணமானவர். அவரது மனமும், உடலும், அவரும் எல்லாம் ஒன்றே.

பிரஹ்மஸம்ஹிதையில் இறைவனைப் பற்றிய இதே போன்ற வர்ணனை காணப்படுகிறது. அதில் அவர் சத்-சித்-ஆனந்த விக்ரகமாக வர்ணிக்கப்பட்டுள்ளார். பரமான இருப்பு, ஞானம், ஆனந்தம் ஆகியவற்றை அவரது நித்யமான வடிவம் உணர்த்துகிறதென்பது இதன் பொருள். அவர் முற்றிலும் வேறுபட்ட தன்மையதான சரீரத்தைக் கொண்டவரென்பதை வேத இலக்கியங்கள் மிகத் தெளிவாகக் கூறுகின்றன. இதனால் சில சமயங்களில் அவர் உருவிலியென்றும் வர்ணிக்கப்படுகிறார். அவர் நம்மைப் போன்று புறக் கண்களால் காணக்கூடிய சரீரத்தைக் கொண்டவரல்ல என்பதே இதன் தாத்பர்யம். இறைவன் தன் சரீரத்தின் எந்தவொரு பகுதியையும் எவ்வகையிலும் பயன்படுத்தக் கூடியவரென்றும் பிரஹ்ம ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. தன் சரீரத்தின் ஒரு பகுதியால் மற்றப் புலன்களின் பணிகளையும் மேற்கொள்ளச் செய்யக்கூடியவரென்று அதில் சொல்லப்பட்டுள்ளது. அதாவது, இறைவன் தன் கைகளால் நடக்கக் கூடியவர், கால்களால் (கையைப்போல்) எதையும் பெற்றுக் கொள்ளக் கூடியவர், கைகளாலும், கால்களாலும் பார்க்கக் கூடியவர், கண்களால் உண்ணக் கூடியவர் என்றெல்லாம் பொருள். இறைவன் நம்மைப்போல் கைகளும், கால்களும் கொண்டவரல்லவென்றாலும் அவருக்கு வேறுவகையான கைகளும் கால்களுமிருப்பதால் அவர் நமது காணிக்கைகளையெல்லாம் ஏற்றுக்கொள்ள முடியும், நம் எல்லாரையும்விட வேகமாக ஓட முடியும் என்றும் ஸ்ருதி மந்திரங்களில் கூறப்பட்டுள்ளது. இந்த எட்டாவது மந்திரத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள "சுக்ரம்" போன்ற சொற்கள் இக் கருத்துக்களை உறுதிப்படுத்துகின்றன.

பிரபுவின் வணக்கத்திற்கான வடிவம் (அர்ச்சா விக்ரகம்) ஆலயங்களில் ஏழாவது மந்திரத்தில் கூறப்பட்டுள்ள முறைப்படி இறைவனை உணர்ந்தவர்களான அதிகாரம் பெற்ற ஆசார்யர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டவை. அந்த வடிவம் பிரபுவின் ஆதி வடிவத்திலிருந்து மாறுபட்டதல்ல. பிரபுவின் ஆதி வடிவம் ஸ்ரீ கிருஷ்ணரதாகும். ஸ்ரீ கிருஷ்ணர், பலதேவர், ராமன், நரசிம்மம், வராகம் ஆகிய எண்ணற்ற வடிவங்களில் விரிந்தவர். இவ்வடிவங்கள் எல்லாம் முழுமுதற் கடவுளின் சாந்நித்யமே.

அதுபோலவே, ஆலயங்களில் வழிபாட்டிற்குரியதாகிய அர்ச்சா விக்ரகமும் பிரபுவின் வியாபகமான வடிவமே. சர்வ வல்லமை படைத்த சக்தியால் பக்தனின் சேவையை ஏற்றுக் கொள்ளும் பிரபுவை, அர்ச்சா விக்ரகத்தை வணங்குவதன் மூலம் உடனடியாக

அணுகவியலும். தெய்வீகமான ஆசார்யர்களின் வேண்டுதலுக் கிணங்கி பிரபு தன் உயர் நிலையிலிருந்து இறங்கி வந்து தன் சர்வ வல்லமை கொண்ட சக்தியால் தனது பூர்வ நிலையிலேயே இயங்கு கிறார். ஸ்ரீ ஈசோபநிஷத் அல்லது மற்ற ஸ்ருதி மந்திரங்களை அறி யாத மூடர்கள் பரிசுத்தமான பக்தர்கள் வணங்கும் அர்ச்சா விக்ர கத்தை ஜடப் பொருட்களாலானதென்று கருதுகிறார்கள். கனிஷ்ட அதிகாரிகளைப் போன்று அறிவிற்குறைந்தவர்களின் ஊனக் கண் களுக்கு அர்ச்சா வடிவம் ஜடப் பொருளாகத் தோன்றலாம்; ஆனால், பிரபு எல்லா வல்லமையும் எல்லா அறிவும் பெற்றவராகையால் ஜடப் பொருளை ஆன்மீகப் பொருளாகவும், ஆன்மீகப் பொருளை ஜடப் பொருளாகவும் தன்னிச்சைப்படி மாற்ற வல்லவர் என்பதை அவர் கள் அறியாதவர்கள்.

பகவான் மனிதனைப் போன்ற வடிவில் இவ்வுலகிற்கு இறங்கி வருவதால் அவரின் சரீரம் பௌதிகமானது என்று சில அறிவற்ற மனிதர்கள் எண்ணுகிறார்கள். இவர்களின் இழி நிலைக்காக பகவான் பகவத்கீதையில் வருத்தம் தெரிவித்திருக்கிறார் (பகீ. 9.11-12). இவர்களைப் போன்ற அறிவிலிகள் பிரபுவின் சர்வ வல்லமையை உணரமாட்டாதவர்கள். மனத்தால் யூகித்துக் காண முயல்பவர் களுக்கு அவர் தோன்றுவதில்லை. உயிர் வாழிகளின் இந்த இழி நிலைக்கு, அவர்கள் இறைவனோடான தம் உறவை மறந்திருப்பதுவே காரணம்.

காலங்காலமாக இறைவன் உயிர்வாழிகளுக்குத் தேவையான பொருட்களை வழங்கிவருகிறாரென்று இந்த மந்திரமும் மற்றும்பல வேத மந்திரங்களும் தெளிவாக எடுத்துரைக்கின்றன. உயிர்வாழி ஏதாவதொன்றைப் பெற விழையும்போது அவரவரின் தகுதிக்கேற்ப இறைவன் அவரவர் விரும்பும் பொருளை வழங்குகிறான். ஒருவர் உயர்நீதி மன்ற நீதிபதியாக விரும்பினால் அவர் அதற்குத் தேவை யான தகுதிகளைப் பெறுவதுடன் அவருக்கு அப்பதவியை அளிக்கும் அதிகாரம் பெற்றவரின் ஒப்புதலையும் பெற வேண்டும். அப்பதவியில் அமர்வதற்கான தகுதிகள் அவருக்கு இருப்பது மட்டும் போதாது. அப்பதவி உயர் அதிகாரத்திலுள்ள ஒருவரால் அவருக்கு வழங்கப் பட வேண்டும். அதுபோலவே இறைவன் உயிர்வாழிகளுக்கு அவ ரவரின் தகுதிக்கேற்ப நலன்களை அளிக்கிறார். வேறு வகையாகச் சொன்னால், கர்ம விதிகளின்படி நலன்கள் வழங்கப்படுகின்றன. தகுதிகள் மட்டுமே ஒருவருக்கு வெகுமதிகளைப் பெறும் உரிமையை வழங்குவதில்லை. இறைவனின் கருணையும் தேவை.

பொதுவாக, இறைவனிடம் என்ன கேட்க வேண்டும், எந்தப் பதவிக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டுமென்பது உயிர்வாழிக்குத் தெரிவதில்லை. அவன் தன் அமைப்பின் உண்மை நிலையை அறியும் போது அவன் வேண்டுவதெல்லாம் இறைவனோடு பரமான நிலையில் இணைந்து அவருக்கு உன்னதமான பக்தித் தொண்டாற்றும்

வாய்ப்புப் பெற வேண்டுமென்பதே. துரதிஷ்டவசமாக உயிர் வாழிகள் பௌதிக இயற்கையின் பிரபாவத்தால் வேறுவகையான வசதிகளை வேண்டுகிறார்கள். இப்படிப்பட்டவர்களின் மனப்பாங்கு பிளவுபட்டது, விரிசல் கண்டது, என்று பகவத்கீதை வர்ணிக்கிறது. (பகீ. 2.41). ஆன்மீக அறிவு ஒரு முகமானது. ஆனால் மண்ணுலக அறிவு பல முனைகளாகப் பிளவுபட்டது. புரச் சக்தியின் தாற்காலிக சௌந்தர்யங்களால் கவரப்பட்டு, வாழ்வின் உண்மையான நோக்கம் இன்றநிலையை மீண்டும் சென்றடைவதென்பதை மறந்துவிடுகிறோமென்று ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்பட்டுள்ளது. இதை மறந்துவிட்டு வேறு பல திட்டங்களையும் ஏற்பாடுகளையும் வகுத்துக்கொண்டு வாழ்வைச் சரிக்கட்ட முற்படுகிறோம். ஆனால் இது மென்றதையே மீண்டும் மெல்வது போலாகும். எனினும், இறைவன் தம் கருணையால் மறதிகுணம் படைத்த உயிர் வாழி தன் போக்கில் செல்வதை தடை செய்யாமல் அனுமதிக்கிறார். அவன் நரகத்துக்குச் செல்ல விரும்பினால் குறுக்கிடாமல் அவனைப்போக விடுகிறார். ஆனால், மீண்டும் அவன் வீடு திரும்ப, அதாவது, இறைவனையடைய விரும்பினால் கை கொடுத்து உதவுகிறார்.

இறைவன் இம்மந்திரத்தில் "பரிபூ:" அதாவது மகோன்னதமானவன் (எல்லாரிலும் உயர்ந்தவன்) என்று வர்ணிக்கப்படுகிறார். அவருக்கு இணையானவரோ அவரைவிட உயர்ந்தவரோ யாருமில்லை. மற்றவர்களெல்லாம் அவரிடம் யாசிப்பவர்களென்று சொல்லப்பட்டுள்ளது. உயிரினங்கள் விரும்புவனவற்றை இறைவன் அளிக்கிறார். உயிர் வாழிகள் வல்லமையில் இறைவனுக்கு சமமானவர்களாகவோ, அல்லது வல்லமை படைத்தவர்களாகவோ இருந்தால் அவர்கள் முக்தி பெறுவதற்காகக் கூட இறைவனிடம் யாசிக்கும் தேவையிருக்காது. உண்மையான முக்தி நிலை மீண்டும் இறைவனைச் சென்றடைவதே. அருவவாதிகள் கருதும் முக்தி நிலை ஒரு கட்டுக்கதை. ஆன்மீகப் புலன்களைப் பெற்று ஆதார நிலையை உணரும் வரை பௌதிக நலன்களுக்காக யாசிக்கும் நிலை தொடர்ந்து கொண்டேயிருக்கும்.

உன்னதமான பிரபுவான இறைவன் ஒருவரே தன்னிறைவு பெற்றவர். கிருஷ்ண பரமாத்மா இவ்வுலகில் 5,000 ஆண்டுகட்கு முன்பு தோன்றியபோது தனது பல்வேறான லீலைகள் மூலம் புருஷோத்தமனான கடவுளாகத் தம் பூரண வியக்தித்துவத்தை வெளிப்படுத்தினார். தம் குழந்தைப் பருவத்தில் பலம் பொருந்திய பல அரக்கர்களைக் கொன்றார். இதற்கான வல்லமையை அவர் எவ்விதமான புறமுயற்சிகளாலும் அடையவில்லை. கோவர்த்தன கிரியைத் தூக்கிப் பிடிப்பதற்காக அவர் பளுத் தூக்கும் பயிற்சியை மேற்கொள்ளவில்லை. சமூக எதிர்ப்புக்கள், கட்டுப்பாடுகள் எதுவுமின்றி அவர் கோபிகளோடு நடனம் புரிந்தார். கோபிகள் காம

உணர்வோடு அவரைச் சென்றடைந்தார்களென்றாலும் அவருக்கும் கோபியருக்குமிடையேயான உறவை, தீவிர சன்யாசியும் தன்னடக்க நியமங்களைக் கண்டிப்புடன் அனுசரித்த சைதன்ய மகாப்பிரபு கூட, வணக்கத்திற்குறிய தாகக் கொண்டாடுகிறார். ஸ்ரீ ஈசோபநிஷத்தும் பிரபுவை "சுத்தம்" (பரிசுத்தமானவர்) "அபாபவித்தம்" (மாசறுப் பவர்) என்று விவரிக்கிறது. அவரைத் தொட்ட மாத்திரத்திலேயே அசுத்தமானதும் சுத்தமாகிவிடும். அவரைப் பாவங்கள் அணுகா தாகையால் அவர் "அபாபவித்தம்" ஆகிறார். எப்போதாவது பாவமாகக் கருதப்படும் செயலில் அவர் ஈடுபட்டிருப்பதாகத் தோன் றினாலும் அச்செயல்களெல்லாம் நன்மை பயப்பவையாகவே இருக் கும்; ஏனென்றால் பாவங்கள் அவரைப் பாதிப்பதில்லை. எல்லா சூழ்நிலையிலும் அவர் "சுத்தம்", அதாவது பரிசுத்தமானவர். அவரை அடிக்கடி சூரியனோடு ஒப்பிடுவதுண்டு. தீண்டத் தகாத இடங்களை யும் தீண்டி ஈரத்தை அகற்றினாலும் சூரியன் தூய்மையானதாகவே விளங்குகிறது. அது தன் மாசகற்றும் சக்தியினால் வெறுக்கத்தக்க பொருட்களையும் சுத்தப்படுத்துகிறது. பௌதிகப் பொருளான சூரியனுக்கே இவ்வளவு ஆற்றலிருக்குமானால், எல்லாம் வல்ல இறை வனின் பரிசுத்தத்தையும் வல்லமையையும் நம்மால் எண்ணிப் பார்க்கவியலாது.

# ஒன்பதாவது மந்திரம்

அந்தம் தம: ப்ரவிசந்தி
யே' வித்யாம் உபாஸதே
ததோ பூய இவ தே தமோ
ய உ வித்யாயாம் ரதா:

அந்தம் - கடும் அறியாமையெனும்; தம: - இருளில்; ப்ரவிசந்தி - பிரவேசிக்கிறார்கள்; யே - யார்; அவித்யாம் - அறியாமையை; உபாஸதே - உபாஸிக்கிறவர்கள்; தத: - அதைவிட; பூய: - இன்னும் அதிகமான; இவ - போன்ற; தே - அவர்கள்; தம: - இருளில்; யே - யார்; உ - கூட; வித்யாயாம் - வித்தையில்; ரதா: - ஈடுபட்டிருப்பார்கள்.

## மொழிபெயர்ப்பு

அறியாமையைச் சார்ந்த செயல்களின்பாற்பட்ட கலாசாரத்தை மேற்கொள்பவர்கள் அறியாமையெனும் இருள் மிக்க உலகிற்குள் பிரவேசிக்கிறார்கள். போலியான அறிவைச் சார்ந்த கலாசாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் இன்னும் மோசமான நிலையை அடைகிறார்கள்.

## பொருளுரை

இந்தச் செய்யுள் "வித்யா", "அவித்யா" ஆகியவற்றை ஒப்பிட்டு ஆராய்கிறது. "அவித்யா", அதாவது, அறியாமை, சந்தேகத்திற்கிடமின்றி அபாயகரமானதே, ஆனால் "வித்யா", அதாவது அறிவு, தவறாக புரிந்து கொள்ளப்படும்போது அல்லது தவறான வழியில் செல்லும்போது மேலும் அபாயகரமானதாகிறது. ஈசோபநிஷத்தின் இம்மந்திரம் முன்னெப்போதையும்விட இக்காலத்திற்கு மிகவும் பொருத்தமானது. இன்றைய நாகரிகத்தில் பொது மக்களுக்குக் கல்வியளிப்பதில் மிகுந்த முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. என்றாலும் மக்கள் முன்னெப்போதையும்விட மகிழ்ச்சியற்றிருக்கிறார்கள். வாழ்வின் மிக முக்கியமான பகுதியான ஆன்மீக அம்சத்தைத் தவிர்த்துப் பொருள் சார்ந்த முன்னேற்றத்திற்கு முக்யத்துவம் தரப்பட்டிருப்பதுவே இதற்குக் காரணம்.

"வித்யா"வைப் பொருத்தவரை, உன்னதமான பிரபுவான இறைவனே எல்லாவற்றிற்கும் உடைமையாளர் என்பதும், இந்த உண்மையை மறப்பது அறியாமையென்பதும் முதல் மந்திரத்தில் மிகத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. வாழ்வின் இவ்வுண்மையை மறக்க மறக்க மனிதன் மேலும் மேலும் இருளில் மூழ்கிப் போகிறான். இதனால், கல்வியில் முன்னேற்றம் காண்பதை மட்டும் குறிக்கோளாகக் கொண்டுள்ள கடவுளற்ற நாகரிகம், பொதுமக்கள் பொருள் சார்ந்த முன்னேற்றங்களைச் சிறிது குறைவாகப் பெற்றிருக்கும் நாகரிகத்தைவிட மேலும் அபாயகரமானது.

கர்மிகள், ஞானிகள், யோகிகள் ஆகிய மூவகையான மனிதர்களில், கர்மிகள் புலன்களை திருப்திப்படுத்தும் செயல்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். இன்றைய நாகரிகத்தில் தொழில் வளம், பொருளாதார முன்னேற்றம், பொது நலம், அரசியல் தீவிரம் போன்ற பெயர்களில் 99.9 சதவிகிதம் மக்கள் புலனிச்சைகளின் திருப்திக்கான காரியங்களிலேயே கவனமாயிருக்கிறார்கள். இந்நடவடிக்கைகளெல்லாம் ஏறக்குறைய புலன் திருப்தியின் அடிப்படையிலானவை. முதல் மந்திரத்தில் விவரிக்கப்பட்டுள்ள இறையுணர்விற்கு இதில் இடமில்லை.

பகவத்கீதையின் பாஷையில் (பகீ. 7.15) புலன் திருப்தியில் முழுவதுமாக ஈடுபட்டிருப்பவர்கள் "மூடர்கள்" அதாவது கழுதைகள். கழுதை மூடத்தனத்தின் சின்னம். பயனற்ற புலனின்பத்தில் நாட்டங்கொண்டிருப்பவர்கள் அவித்யையெனும் அறியாமையைக் கொண்டாடுபவர்கள் என்பது ஈசோபநிஷத்தின் கருத்து. கல்வி அபிவிருத்தி என்ற பெயரில் இப்படிப்பட்ட நாகரிகத்திற்குத் துணை செய்பவர்கள் வெறும் புலனின்பங்களில் திளைத்திருப்பவர்களைவிட உண்மையில் அதிகக் கேடு விளைவிப்பவர்கள். கடவுள் நம்பிக்கையற்றவர்கள் கல்வியைப் பரப்புவதென்பது நாகத்தின் தலையில் ஆபரணத்தை வைத்து அலங்கரிப்பது போலாகும். விலையுயர்ந்த ஆபரணத்தால் அலங்கரிக்கப்பட்ட நாகம் அவ்வாறு அலங்கரிக்கப்படாத நாகத்தைவிட அதிக அபாயகரமானது. கடவுள் நம்பிக்கையற்றவர்களின் கல்வியைப் பிணத்திற்குச் செய்யும் அலங்காரங்களுக்கொப்பாக, "ஹரிபக்தி சுபோதயா" எனும் நூலில் கூறப்பட்டுள்ளது. இந்தியாவிலும் மற்றும் பல நாடுகளிலும் மரணமடைந்தவர்களின் உறவினரின் துக்கத்தை ஓரளவு குறைப்பதற்காகப் பிணத்தை நன்றாக அலங்கரித்து ஊர்வலமாக எடுத்துச் செல்வது வழக்கத்திலுள்ளது. அதே கருத்தில், நவீன நாகரீகமென்பது ஜட வாழ்வின் நிரந்தரமான துயர நிலையை மூடி மறைக்கும் நகாசு வேலைப்பாடாகும். இந்த நடவடிக்கைகள் புலனின்பம் துய்ப்பதற்காக ஏற்பட்டவை. ஆனால், புலன்களுக்கு மேலாக மனமும், மனத்திற்கும் மேலாக புத்தியும், புத்திக்கும் மேலாக ஆத்மாவும் உள்ளன. எனவே, உண்மையான கல்வியின் லட்சியம் ஆத்மஞானம் பெறுவதாக, ஆத்மாவின் ஆன்மீகத் தன்மைகளை அறிந்துணர்வதற்கு உதவுவதாக அமைய வேண்டும். இத்தகைய லட்சியத்திற்கு இட்டுச் செல்லாத எந்தக் கல்வியையும் "அவித்யா" அல்லது அறியாமை என்றுதான் கருத வேண்டும். அறியாமையின்பாற்பட்ட எந்த கலாசாரமும் அறியாமையெனும் இருள் சூழ்ந்த கீழான திசைக்கே நம்மை இழுத்துச் செல்லும்.

வேதங்களின்படி, இம்மண்ணுலகில் தவறான கல்வியைப்பரப்புபவர்கள், (1) வேத-வாத-ரதர்கள், (2) மாயயாபஹ்ருத ஞானிகள், (3) ஆஸுரம் பாவம் ஆச்ரிதர்கள், (4) நராதமர்கள், என்ற பிரிவு

களில் அடங்குவர். "வேத-வாத-ரதர்கள்" எனப்படுபவர்கள் வேத இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர்களெனத் தம்மைக் கூறிக் கொள்வார்கள்; ஆனால் அவர்கள் வேதங்களின் உண்மையான நெறியிலிருந்து தடம்புரண்டவர்கள். வேதங்களின் லட்சியம் முழு முதற்பொருளான இறைவனை அறிவதென்று பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளது (பகீ.15.18-20). ஆனால் இந்த வேத-வாத-ரதர்கள் இறைப் பொருளில் எள்ளளவும் சிரத்தை கொண்டவர்களல்லர். அவர்கள் சுவர்கத்தை அடைவது போன்ற பலன்களால் மட்டுமே கவரப்பட்டவர்கள்.

முதலாவது மந்திரத்தில் கூறப்பட்டுள்ளபடி புருஷோத்தமனான கடவுள் எல்லாவற்றின் உடைமையாளர் என்பதை உணர்ந்து, நம் வாழ்க்கைத் தேவைகளுக்கென நமக்களிக்கப்பட்டிருக்கும் நலன்களின் அளவோடு நாம் திருப்தியடைய வேண்டும். வேதங்களின் நோக்கமெல்லாம் மறதியுள்ள உயிர்வாழிகளின் உள்ளத்தில் இறையுணர்வைத் தூண்டுவதே. மூட மனிதர்கள் இதை அறியும் பொருட்டு உலகின் பல்வேறான மத நூல்களில் வெவ்வேறு முறைகளில் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. இப்படியாக, மனிதனை மீண்டும் இறைவனிடம் கொண்டு சேர்ப்பதே எல்லா மதங்களின் நோக்கம்.

ஆனால், வேத-வாத-ரதர்கள் வேதங்களின் கருத்துக்களைச் சரிவர அறியாமல் புலன் திருப்திக்காக, சுவர்க்கத்தையடைவது போன்ற இதர விஷயங்களே வேதங்களின் இறுதியான நோக்கமென்று உறுதியாக எண்ணுகிறார்கள். இப்படிப்பட்டவர்கள் வேத இலக்கியங்களுக்குத் தவறான அர்த்தங்களைக் கற்பித்து மற்றவர்களையும் தவறான வழியில் இட்டுச் செல்கிறார்கள். சில வேளைகளில் அவர்கள் சாதாரணமானவர்களுக்கு வேதக் கருத்துக்களை விளக்குவதற்காக ஏற்பட்ட புராணங்களைக்கூடக் கண்டனம் செய்கிறார்கள். வேத-வாத-ரதர்கள் மகான்களான ஆசார்யர்களின் அதிகாரத்தையும் புறக்கணித்துவிட்டு தமக்குத் தோன்றும் முறையில் வேதங்களுக்கு விளக்கம் தருகிறார்கள். தங்களுள் கொள்கையற்ற ஒருவனை தேர்ந்தெடுத்து அவனை வேத ஞானத்தின் தலைசிறந்த விவரண கர்த்தாவென்று பிரகடனம் செய்கிறார்கள். இப்படிப்பட்ட மனிதர்களை இந்த மந்திரம் மிகப் பொருத்தமாக, "வித்யாா-ரத" எனும் சம்ஸ்கிருதச் சொல்லால் கண்டிக்கிறது. "வித்யா" என்றால் வேதம் என்று பொருள். அறிவின் தோற்றுவாய் வேதம், "வித்யா-ரத" என்றால் "வேதத்தை அத்யயனம் செய்பவன்" என்று பொருள். ஆனால், வித்யா-ரதர்கள் ஆசார்யர்களுக்குக் கீழ்ப்படியாத காரணத்தால் வேதங்களின் உண்மை நோக்கத்தை அறியமாட்டாதவர்களெனக் கண்டனம் செய்யப்படுகிறார்கள். இந்த வேத-வாத-ரதர்கள் வேதத்தின் ஒவ்வொரு சொல்லுக்கும் தம் சொந்த நோக்கத்திற்குத் தகுந்தவாறு அர்த்தம் கண்டு பழக்கப்பட்டவர்கள். வேத

இலக்கியங்கள் சாதாரணமான புத்தகங்களின் தொகுப்புக்களல்ல, தகுந்த சிஷ்ய பரம்பரையில் வந்தவர்களல்லாத பிறரின் மூலம் அவை அறியப்படமாட்டா என்பதை அவர்கள் அறியார்.

வேதங்களின் உன்னதமான செய்தியை அறிவதற்கு அதிகாரம் பெற்ற ஆன்மீக குருவை அணுக வேண்டும். கடோபநிஷத் இவ்வாறு வழிகாட்டுகிறது. ஆனால் இந்த வேத-வாத-ரதர்களுக்கென ஏற்பட்டுள்ள ஆசார்யர்கள் உன்னதமான சிஷ்ய பரம்பரையில் வராதவர்கள். இதனால் அவர்கள், வேத, இலக்கியங்களைத் தப்பர்த்தம் செய்து அறியாமையெனும் இருளை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள். வேதங்களை முற்றிலும் அறியாதவர்களைவிட இவர்களே அறியாமையில் மிக ஆழமாக மூழ்கிப் போகிறார்கள்.

மாயயாபஹ்ருத ஞான வகையைச் சேர்ந்தவர்கள் தம்மைத் தாமே கடவுளெனக் கூறிக்கொள்கிறார்கள். தாமே கடவுள் என எண்ணிக் கொண்டு அவர்கள் வேறெந்தக் கடவுளையும் வணங்க வேண்டிய அவசியமில்லை என்கிறார்கள். செல்வந்தனை ஒரு சாதாரண மனிதனை வணங்க அவர்கள் சம்மதிப்பார்கள், ஆனால் புருஷோத்தமனை முழுமுதற்கடவுளை வணங்கார். தம் மடமையை அறியாத இம்மனிதர்கள் கடவுளை எப்படி மாயையால் சிறைப்படுத்த முடியுமென்று எண்ணிப்பார்க்க மாட்டார்கள். மாயையின் சிறையில் கடவுள் எப்போதாவது அகப்படுவாரேயானால் மாயை கடவுளைவிட வலிமைமிக்கது என்றாகும். இவர்கள் கடவுள் எல்லாம் வல்லவரென்று சொல்கிறார்கள். ஆனால், கடவுள் எல்லாம் வல்லவரானால் அவரை மாயை வெல்வது சாத்தியமில்லையென்பதைப் பற்றி ஆலோசிப்பதில்லை. தம்மைத் தாமே கடவுளாக்கிக் கொண்ட இம்மனிதர்கள் கேள்விகளுக்குத் தெளிவான விடை கூறத் தெரியாதவர்கள். தாம் கடவுளாக ஆகிவிட்டதாக எண்ணித் திருப்திப்பட்டுக் கொள்கிறார்கள்.

# பத்தாவது மந்திரம்

அன்யத் ஏவாஹுர் வித்யயா
அன்யத் ஆஹுர் அவித்யயா
இதி சுச்ரும தீராணும்
யே நஸ் தத் விசசக்ஷிரே

அன்யத் - வேறான; ஏவ - நிச்சயம்; ஆஹு - சொல்லப்பட்டிருக்கிறது; வித்யா - அறிவைப் பேணுதலால்; அன்யத் - வேறான; ஆஹு - சொல்லப்பட்டிருக்கிறது; அவித்யா - அறியாமையைப் பேணுதலால்; இதி - இப்படி; சுச்ரும - கேட்டிருக்கிறேன்; தீராணும் - தீரர்களிடமிருந்து; யே - யார்; நஹ - நமக்கு; தத் - அது; விசசக்ஷிரே - விளக்கப்பட்டிருக்கிறது.

## மொழி பெயர்ப்பு

அறிவைப் பேணுதலால் ஒரு விளைவும் அறியாமையைப் பேணுதலால் வேறான விளைவும் ஏற்படுகிறதென்று ஞானிகள் விளக்கியுள்ளனர்.

## பொருளுரை

பகவத்கீதையின பதிமூன்றுவது அத்யாயத்தில் பரிந்துரைக்கப்பட்டுள்ளதுபோல் (பகீ. 13.8-12) ஒருவர் கீழ்க்கண்ட முறையில் அறிவை வளர்க்க வேண்டும்:

(1) ஒருவர் தன் மட்டில் பண்புடையவராக விளங்குவது மட்டுமின்றி பிறருக்கும் உரிய மரியாதையைத் தரப் பழக வேண்டும்.

(2) பெயருக்காகவும், புகழுக்காகவும் தன்னைப் பக்திமானுகக் காட்டிக் கொள்ளக் கூடாது.

(3) தன் மனம், வாக்கு, காயத்தின் செயல்களால் ஒருவர் மற்றவர்களுக்கு இடைஞ்சலாக இருக்கக் கூடாது.

(4) பிறரால் இன்னல்கள் ஏற்பட்டாலும் பொறுத்துப் போகப் பழக வேண்டும்.

(5) பிறரை வஞ்சித்தல் கூடாது.

(6) ஆன்மீகத்தை நோக்கி நம்மைப் படிப்படியாக இட்டுச் செல்ல வல்லவரான குருவை நாடி, அவருக்குப் பணிந்து, பணிவிடை செய்து, பொருத்தமான கேள்விகளைக் கேட்டு அறிவு பெற வேண்டும்.

(7) ஆத்ம ஞானம் பெறுவதற்கான நிலையை அடையும் பொருட்டு வெளிபபடுத்தப்பட்டுள்ள வேத நூல்களில் பரிந்துரைக்கப்பட்டுள்ள தன்னடக்க நியமங்களைக் கடைப்பிடிக்க வேண்டும்.

(8) வெளிப்படுத்தப்பட்டுள்ள வேத நூல்களில் கண்டுள்ள கொள்கைகளை உறுதியாகப் பற்றிநிற்றல் வேண்டும்.

(9) ஆத்ம ஞானம் பெறுவதற்குத் தடையாயிருக்கும் பழக்க வழக்கங்களை அறவே விலக்க வேண்டும்.

(10) உடலைக் காப்பதற்குத் தேவையானதைவிட அதிகமாக எதையும் ஏற்றுக் கொள்ளக் கூடாது.

(11) மட்டமான ஜடவுடலாகத் தன்னை இனங்காணுமலும், தன் உடலோடு சம்பந்தப்பட்டவர்களைத் தனது என்று கருதாமலும் இருத்தல் வேண்டும்.

(12) ஜடவுடலைப் பெற்றிருக்கும் வரை மறுபிறவி, முதுமை, பிணி, மரணம் ஆகிய துன்பங்களை எதிர் நோக்க வேண்டி வரும் என்பதை எப்போதும் நினைவிற்கொள்ள வேண்டும்.

(13) ஆன்மீக வளர்ச்சிக்கு அவசியமான வாழ்வுத் தேவைகளுக்கதிகமான பற்றுதல்கள் கூடாது.

(14) மனைவி, குழந்தைகள், குடும்பம் ஆகியவற்றிடம் வேத நூல்களில் கூறப்பட்டுள்ளதற்கதிகமாகப் பற்றுதல் இருக்கக் கூடாது.

(15) மனம் உருவாக்கும் விருப்பு, வெறுப்பு காரணமாக ஏற்படும் இன்ப துன்பங்களுக்கு இடந்தரலாகாது.

(16) புருஷோத்தமனை இறைவனாகிய ஸ்ரீ கிருஷ்ணரின் தூய்மையான பக்தனாக, முழுக் கவனத்தோடு அவருக்குத் தொண்டு செய்ய வேண்டும்.

(17) ஆன்மீக வளர்ச்சிக்கு உகந்த அமைதியான இருப்பிடத்தில் நாட்டங்கொண்டு, பக்தர்களல்லாதவர்கள் கூடும் நெருக்கடி மிகுந்த இடங்களைத் தவிர்க்க வேண்டும்.

(18) விஞ்ஞானியாகவோ, தத்வஞானியாகவோ ஆகி, ஆன்மீக ஞானமே நித்தியமானது, ஜடவாழ்வின் பாற்பட்ட அறிவு உடல் மறைவதோடு முடிந்துவிடும் என்பதை உணர்ந்து ஆத்ம ஞானம் பற்றிய ஆராய்ச்சிகளை நடத்த வேண்டும்.

இந்தப் பதினெட்டுக் குறிப்புக்களும் இணைந்து, படிப்படியாக, உண்மையான அறிவை வளர்க்க உதவும். இவையல்லாத மற்ற எல்லா முறைகளும் அறியாமையின் வகையைச் சார்ந்தவை. இகவுலக அறிவெல்லாம் மாயா சக்தியின் புற அம்சங்களென்றும், அவற்றை வளர்ப்பதால் ஒருவன் கழுதைக்குச் சமமாகிறானென்றும் மகா ஆசார்யரான ஸ்ரீல பக்தி விநோத டாகூரை கருத்துத் தெரிவித்திருக்கிறார். இதே கருத்தை ஸ்ரீ ஈசோபநிஷத்தும் கூறுகிறது. இகவுலக அறிவை வளர்த்துக் கொள்வதால் இன்றைய மனிதன் கழுதையாகவே மாறுகிறான். ஆன்மீக வேடம் பூண்டுள்ள சில

அரசியல்வாதிகள் இன்றைய நாகரிகத்தை சைத்தானின் நாகரிக மெனத் தாக்கிப் பேசினாலும் பகவத்கீதையில் விவரிக்கப்பட்டுள்ள உண்மையான அறிவை வளர்ப்பதில் அவர்கள் அக்கறை கொண்ட வர்களல்லர். ஆகையால் சைத்தானின் வசப்பட்ட இன்றைய நிலையை அவர்களால் மாற்ற முடியாது.

இன்றைய நவநாகரிக அமைப்பில் ஒரு சிறுவனும்கூடத் தன்னைத் தன்னிறைவு பெற்றவனெனக் கருதிக் கொண்டு பெரிய வர்களை மதிப்பதில்லை. நமது பல்கலைக் கழகங்களில் அளிக்கப்படும் தவறான கல்வியின் காரணமாக உலகம் முழுவதும் இளைஞர்கள் பெரியவர்களுக்குப் பல தொல்லைகளைத் தருகிறார்கள். இப்படியாக, அறியாமையின்பாற்பட்ட கலாசாரம் அறிவின்பாற்பட்ட கலாசாரத் திலிருந்து வேறுபட்டதென்று ஸ்ரீ ஈசோபநிஷத் கடுமையாக எச்சரிக் கிறது. பல்கலைக்கழகங்களெல்லாம் அவித்யையின் மையங்களென்று சொல்வதில் தவறில்லை. இதன் விளைவாக விஞ்ஞானிகளெல்லாம் பிற நாடுகளைப் பூண்டோடு அழிப்பதற்கான பயங்கர ஆயுதங்களைக் கண்டுபிடிப்பதில் சுறுசுறுப்பாக இருக்கிறார்கள். இன்றைய பல்கலைக் கழக மாணவர்களுக்கு பிரம்மசரிய நியமங்களோ, ஆன்மீக முறை சார்ந்த வாழ்வு பற்றியோ கற்பிக்கப்படுவதில்லை. ஆன்மீகக் கட்டளை களில் அவர்களுக்கு நம்பிக்கையுமில்லை. பெயரளவில், புகழுக்காக மட்டுமே மதக்கல்வி அளிக்கப்படுகிறது; செயல் முறையில் கடைப் பிடிப்பதற்காக அல்ல. இதனால் சமூக மற்றும் அரசியல் களங்களில் மட்டுமின்றி மத சம்பந்தமாகவும் விரோதங்கள் மலிந்து காணப்படு கின்றன.

பொது மக்கள் அறியாமையை வளர்த்துக் கொண்டிருப்பதால் கண்மூடித்தனமான தேசிய உணர்வு உலகின் பல பகுதிகளில் பரவி யுள்ளது. இந்தச் சின்னஞ்சிறு பூவுலகம் அளவு கடந்த பரந்த வெளியில் பிற துண்டங்களோடு மிதக்கும் ஒரு சிறு ஜடத் துண்டம் என்பதை யாரும் எண்ணிப் பார்ப்பதில்லை; பிரபஞ்ச வெளியின் விரிந்த பரப்போடு ஒப்பிடும்போது இந்த ஜடத் துண்டங்களெல்லாம் ஆகாயத்தில் காணப்படும் தூசித் துகள்களுக்குச் சமமானவை. இறைவன் தன் கருணையால் இந்த ஜடத் துண்டங்களைத் தம்மில் நிறைவு பெற்ற முழுமைகளாகப் படைத்திருப்பதால் பிரபஞ்ச வெளி யில் பறப்பதற்குத் தேவையான எல்லா வசதிகளையும் அவை குறை வின்றிப் பெற்றிருக்கின்றன. இன்றைய விண்வெளிக் கலன்களை நடத்திச் செல்பவர்கள் தமது சாதனைகளைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனால், கிரகங்களென்று சொலலப்படும் மாபெரும் விண்வெளிக் கலன்களை நடத்திச் செல்லும் உன்னதமான ஓட்டுன ரைப் பற்றி அவர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை.

எண்ணற்ற சூரியன்களும் எண்ணற்ற கிரக அமைப்புக்களும் உள்ளன. உன்னதமான பிரபுவான இறைவனின் நுண்ணிய அம்ச மாகிய நாம் சின்னஞ்சிறு ஜந்துக்களாக இருந்தாலும் வரம்பற்ற

எண்ணிக்கையிலான இந்த கிரகங்களை ஆக்ரமிக்க முயல்கிறோம். இதனால் நாம் மாறி மாறிப் பிறவியெடுத்து, மடிந்து, பிணியாலும் மூப்பாலும் துன்புருகிறோம். மனித வாழ்வின் ஆயுட்காலம் நூறு ஆண்டுகளென்று வரையறுக்கப்பட்டுள்ளது; என்றாலும் படிப்படியாக இருபது அல்லது முப்பது ஆண்டுகளென்று குறைந்து வருகிறது. அவித்யையின்பாற்பட்ட கலாசாரத்தால் முட்டாள்களாக்கப்பட்ட மனிதர்கள் இந்தக் குறுகிய காலத்திற்குள் புலனின்பங்களைத் திறம்படத் துய்க்கும் இச்சையால் இக்கிரகங்களுக்குள் தத்தம் தனி நாடுகள் என்று ஏற்படுத்திக் கொண்டுள்ளார்கள். இம்மூட மனிதர்கள் தத்தம் நாட்டின் எல்லைகளைச் சரிவர நிலைப்படுத்திக் கொள்வதற்காகப் பற்பல திட்டங்களை வகுக்கிறார்கள். இது நகைப்பிற்குரியதாகும். இந்த நோக்கத்தை நிறைவேற்றும்போது ஒவ்வொரு நாடும் மற்ற நாடுகளுக்குக் கவலையை விளைவிக்கிறது. நாட்டின ஐம்பது சதவிகிதம் சக்தி பாதுகாப்பிற்கான ஏற்பாடுகளில் செலவழிக்கப்பட்டு வீணாகிறது. அறிவை வளர்க்க யாரும் அக்கறை எடுத்துக் கொள்வதில்லை; என்றாலும், இகவுலக அறிவு மற்றும் ஆன்மீக அறிவில் மேம்பட்டிருப்பதாகப் பொய்யாய் பெருமைபட்டுக் கொள்கிறார்கள்.

இத்தகைய தவறான கல்வி முறையைப் பற்றி ஸ்ரீ ஈசோபநிஷத் நம்மை எச்சரிக்கிறது. உண்மையான கலவியை (அறிவை) வளர்த்துக் கொள்வதற்கான வழி முறைகளை பகவத்கீதை நமக்கு உபதேசிக்கிறது. "தீரர்" ஒருவரிடமிருந்து வித்யயைப் (அறிவை) பெறவேண்டுமென்று இந்த மந்திரம் நமக்குக் குறிப்பிடுகிறது. ஜட மாயையால் அல்லலுறாதவன் தீரன். முழுமையான ஆன்மீக ஞானம் பெற்றவரல்லாத எவரும் ஸ்திரமாக நிற்க முடியாது. ஸ்திர நிலையிலுள்ளவன் எதற்காகவும் ஆசைப்பட்டு ஏங்குவதோ எண்ணிப் புலம்புவதோ இல்லை. பௌதிகத் தொடர்பால் அகஸ்மாத்தாகப் பெற நேர்ந்த பௌதிக உடலும் மனமும் தன் உண்மை நிலைக்குப் புறம்பான பொருட்களென்பதை தீரன் உணர்ந்திருக்கிறான். எனவே, அவன் இக்கட்டான எந்தச் சூழ்நிலையிலும் தன் ஆதார நிலையிலிருந்து பிறழாமல் பார்த்துக் கொள்கிறான்.

பௌதிகவுடலும் மனமும் உயிர்வாழியான ஆன்மா பெற்றுள்ள இடர்ப்பாடுகள் உயிர்த்துடிப்புள்ள ஆன்மீக உலகில் உயிர் வாழிக்கான செயற்பாடுகள் உள்ளன; ஆனால் ஜடவுல்கம் உயிரற்றது. உயிரற்ற ஜடப் பிண்டங்களை உயிர்த் தத்துவமான ஆன்மீகப் பொறிகள் இயக்கிக்கொண்டிருக்கும் வரை உயிரற்ற ஜடவுலகம் உயிருள்ளதாகத் தோன்றுகிறது, உண்மையில் உன்னதமான உயிர்வாழியான இறைவனின் அம்சங்களான உயிருள்ள ஆன்மாக்களே இவ்வுலகை இயக்குகின்றன. இவ்வுண்மைகளையெல்லாம் உயரதிகாரிகளிடமிருந்து தீரர்கள் அறிந்திருக்கிறார்கள். கட்டுப்

பாட்டுக்கான நியமங்களை அனுஷ்டிப்பதன் மூலம் இவ்வறிவை தீரர்கள் அடையப் பெறுகிறார்கள்.

கட்டுப்பாட்டிற்கான நியமங்களைக் கடைபிடிக்க விரும்புபவன் அதிகாரம் பெற்ற குருவின் குடையின் கீழ் வரவேண்டும். பரமான கல்வியும் கட்டுப்பாட்டு நியமங்களும் ஆன்மீக குருவிடமிருந்து சிஷ்யனுக்கு வருகின்றன. அவித்யையின்பாற்பட்ட அபாயகரமான கல்வியின் மூலம் இப்படிப்பட்ட அறிவு பெறப்படுவதில்லை. புருஷோத்தமனான இறைவனின் அடிபணிந்து கேட்டறியும் கல்வி மட்டுமே ஒருவனை தீரனாக்கவல்லது. பக்குவமான சிஷ்யன் அர்ஜுனனைப்போல் இருக்க வேண்டும். ஆன்மீக குருவும் உன்னதமான பிரபுவைப் போன்று சிறந்து விளங்க வேண்டும். இதுவே சலனமற்ற தீரனிடமிருந்து வித்யை (அறிவு) பெறும் முறை.

அதீரனானவன் (தீரனின் பயிற்சியைப் பெற்றிராதவன்) பிறருக்குப் போதிக்கக் கூடிய தலைவனாக விளங்க முடியாது. தீரர்களாகப் பாவனை செய்யும் இன்றைய அரசியல்வாதிகள் உண்மையில் அதீரர்களே. அவர்களிடமிருந்து பக்குவமான அறிவை எதிர்பார்க்கவியலாது. தம்து வருவாயில் ரூபாய், பைசா, கணக்குப் பார்ப்பதிலேயே அவர்கள் கண்ணும் கருத்துமாயிருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்கள் மக்கள் கூட்டத்தை ஆத்மஞானத்திற்கான சரியான பாதையில் எப்படி வழி நடத்திச் செல்ல முடியும்? உண்மையான கல்வி பெறுவதற்கு தீரரிடம் பணிவுடன் கேட்டறிவது ஒன்றே வழி.

# பதினொன்ருவது மந்திரம்

வித்யாம் சாவித்யாம் ச யஸ்
தத் வேதோப்யம் ஸஹ
அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா
வித்யயாம் ருதம் அச்னுதே

வித்யாம் - உண்மையான அறிவையும்; அவித்யாம் - அறிவின்மையையும்; யஹ: - யாரொருவன்; தத் - அதை; வேத - அறிகின்ற; உபயம் - இரு; ஸஹ - ஒரே சமயத்தில்; அவித்யயா - அறியாமையின் மூலம்; ம்ருத்யும் - இறப்பை; தீர்த்வா - கடந்து; வித்யயா - அறிவின் செயல் முறையால்; அம்ருதம் - இறப்பின்மையை; அச்னுதே - அனுபவிக்கிருன்.

## மொழி பெயர்ப்பு

அறியாமையின் செயல் முறையையும், உன்னதமான அறிவின் செயற்பாட்டையும் ஒரே சமயத்தில் அறியத்தக்கவன் மீண்டும் மீண்டும் பிறந்து இறத்தலான நிலையைக் கடந்து நித்ய நிலையின் நலன்களை முழுவதுமாக அனுபவிக்கிருன்.

## பொருளுரை

பௌதிக உலகு சிருஷ்டிக்கப்பட்டது முதல் ஒவ்வொருவரும் நித்யமான வாழ்வு பெற முயற்சித்து வந்திருக்கிருர்கள். ஆனல் இயற்கையின் கொடிய நியதியின் காரணமாக யாரும் இறப்பின் பிடியிலிருந்து தப்ப முடியவில்லை. யாரும் இறக்க விரும்புவதில்லையென்பது உண்மை. யாரும் மூப்படையவோ, நோய்வாய்ப்படவோ விரும்புவதில்லை. ஆனல் இயற்கையின் நியதி யாருக்கும் இறப்பு, முதுமை, பிணி ஆகியவற்றிலிருந்து விதி விலக்கு அளிப்பதில்லை. பௌதிக அறிவின் வளர்ச்சியும் இப்பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதில் உதவவில்லை. மரணத்தை துரிதப்படுத்த உதவும் அணுகுண்டைக் கண்டுபிடிப்பதற்கு பௌதிக விஞ்ஞானம் துணை செய்யும். ஆனல், பிணி, மூப்பு, மரணம் இவற்றிலிருந்து மனிதனைக் காப்பாற்ற அதால் இயலாது.

இவ்வுலகில் பல சாதனைகள் புரிந்த அரசனை ஹிரண்யகசிபுவைப் பற்றி நாம் புராணங்களிலிருந்து அறிகிரேம். அவன் தன் இகவுலக சாதனைகள் மற்றும் அறியாமையின் விளைவால் ஏற்பட்ட பலம் ஆகியவற்றின் துணையால் மரணத்தை வெற்றி காண எண்ணிக் கடும் தவத்தை மேற்கொண்டான். அவனின் தவ மகிமையால் எல்லா கிரகங்களிலுமுள்ள உயிர் ராசிகளும் தொல்லைக்குள்ளாயின. பிரபஞ்சத்தின் சிருஷ்டி கர்த்தாவான பிரம்ம தேவனை

வற்புறுத்தி வரவழைத்துத் தனக்கு அமரத்துவம் வழங்கும்படி வேண்டினன். ஆனால் பிரம்மாவோ, தான் எல்லா உலகங்களையும் பௌதிக அளவில் சிருஷ்டித்து ஆட்சி புரிந்தாலும் தானே அமரத்துவம் பெறாதவராகையால் அந்நிலையைப் பிறருக்கு வழங்க இயலாதென்று கூறிவிட்டார். பகவத்கீதையில் உறுதி செய்யப்பட்டுள்ளது போல் (பகீ. 8.17) பிரம்மன் நீண்ட காலம் வாழ்ந்தாலும் அவருக்கு மரணமில்லையென்பதில்லை.

ஹிரண்ய என்றால் தங்கம். கசிபு என்றால் மென்மையான படுக்கை. இவருக்குப் பிரியமான இரண்டு செல்வமும் செல்வியரும். இவ்விரண்டையும் மரணத்தைச் சந்திக்காமல் என்றென்றும் அனுபவிக்க விரும்பினன். அமரனாக வேண்டுமென்ற தன் விருப்பத்தை பூர்த்தி செய்து கொள்ளும் நம்பிக்கையோடு அவன் பிரம்மாவை மறைமுகமாகப் பல கேள்விகள் கேட்டான். அமர-வரம் தரமுடியாதென்று பிரம்மா கூறிவிட்டபடியால் ஹிரண்யகசிபு தான் எந்த மனிதனாலும், கடவுளாலும், 84 லட்சம் ஜீவ ராசிகளில் எவற்றாலும் கொல்லப்படலாகாது என்று வரம் கேட்டான். இப்படிப்பட்ட உறுதிகள் தன்னை மரணத்தினின்றும் காப்பாற்றுமென்று ஹிரண்யகசிபு மூடத்தனமாக எண்ணினன். ஆனால் இறுதியில் பிரம்மா இந்த உறுதிகளையெல்லாம் வழங்கினாலும், இறைவன் பாதி சிம்மம், பாதி மனிதனான நரசிம்ம வடிவம் தாங்கி ஹிரண்ய கசிபுவைக் கொன்றார். அவனைக் கொல்ல அவர் எந்த ஆயுதத்தையும் உபயோகிக்கவில்லை; பிரபுவின் நகங்களாலேயே அவன் கொல்லப்பட்டான். அவன் நிலத்திலோ, நீரிலோ, ஆகாயத்திலோ கொல்லப்படாமல், எண்ணிப் பார்க்க முடியாத விசித்திர உயிரினத்தால் மரணமடைந்தான்.

இதன் தாத்பரியமெல்லாம், இகவுலக வல்லமைகளில் மிக்கவனான ஹிரண்யகசிபு வால் கூடத் தன் திட்டங்களின்படி மரணத்தை வெல்ல முடியவில்லை. அப்படியிருக்க இன்றைய சின்னஞ்சிறு ஹிரண்யகசிபுகளின் திட்டங்கள் கணத்துக்குக் கணம் தகர்க்கப்படும்போது அவர்கள் என்ன சாதித்துவிட முடியும்?

வாழ்வுப் போராட்டத்தில் ஒரு தலை முயற்சியால் வெற்றி காண முற்படவேண்டாமென ஈசோபநிஷத் நமக்கு அறிவுரை வழங்குகிறது. உயிர்வாழ்வதற்கான கடினமான போராட்டத்தில் இயற்கை தனது கடுமையான நியதிகளை மீற யாரையும் அனுமதிப்பதில்லை. அதனால், நித்யமான வாழ்வு பெற விரும்புபவர்கள் மீண்டும் இறைவனிடம் சென்றடையத் தயாராகவிருக்க வேண்டும்.

இறைவனை மீண்டும் சென்றடைவதற்கான வழிமுறை வேறு வகையான அறிவைச் சார்ந்ததாகும். அதை, உபநிஷத்துக்கள், வேதாந்த சூத்திரம், பகவத்கீதை, ஸ்ரீமத் பாகவதம் போன்ற வெளிப்படுத்தப்பட்டுள்ள வேத நூல்களிலிருந்து கற்க வேண்டும். இவ்வாழ்வில் மகிழ்ச்சி பெற்றும், பின்னர் பூதவுடலை நீத்து நிலை

யான இன்ப வாழ்வை அடைய விரும்புபவர்கள் இந்தப் புண்ணிய மான இலக்கியங்களை நாடி உன்னதமான ஞானத்தைப் பெற வேண்டும். கட்டுப்பட்டுள்ள உயிர்வாழி இறைவனோடான தன் நித்ய உறவை மறந்திருப்பதால் தாற்காலிகமான தன் பிறப்பிடத்தையே எல்லாமாகத் தவறாக ஏற்றுக் கொண்டிருக்கிறான். மறதிக் குணம் படைத்த மனிதனுக்கு, அவனின் சாச்வதமான வீடு இந்தப் பௌதிகவுலகிலல்லவென்பதை நினைவூட்டுவதற்காக இறைவன் கருணை கூர்ந்து இந்தியாவில் மேற்குறிப்பிட்ட வேத இலக்கியங்களையும், பிற நாடுகளில் பிற மத நூல்களையும் வழங்கியுள்ளார். உயிர்வாழி ஆன்மீகமானவன்; தன் ஆன்மீக வீட்டிற்குத் திரும்பிச் செல்வதிலேயே அவனது மகிழ்ச்சி அடங்கியுள்ளது.

புருஷோத்தமனான இறைவன் உயிர்வாழிகள் தம்மிடம் மீண்டும் வந்தடைவதற்கான வழிமுறை பற்றிய செய்தியைப் பரப்புவதற்கெனத் தனது அதிகாரம் பெற்றுள்ள ஊழியர்களை அனுப்பி வைக்கிறார். சில வேளைகளில் அவ்ரே இப்பணியைச் செய்வதற்கென இவ்வுலகில் அவதரிக்கிறார். எல்லா உயிர் வாழிகளும் அவரது அன்பிற்குரிய மக்களாகையால், அவரின் இணைபிரியா அம்சங்களாகையால், ஜட நிலையில் நாம் தொடர்ந்து அனுபவிக்க நேரிட்டுள்ள துயரங்களுக்காக நம்மைவிட அவர் மிகவும் அதிகமாக வருந்துகிறார். உயிரற்ற ஜடநிலை நமது உண்மையான இயல்புக்கு ஒவ்வாதது என்பதை பௌதிக உலகில் நாம் அனுபவிக்கும் துன்பங்கள் நமக்கு நினைவூட்ட உதவுகின்றன. புத்திசாலிகளான உயிர்வாழிகள் இதை எப்போதும் நினைவிற் கொண்டு, "வித்யா" எனப்படும் பரமான அறிவை வளர்த்துக் கொள்வதில் முனைந்திருக்கிறார்கள். மனிதப் பிறவி ஆன்மீக அறிவை வளர்த்துக் கொள்வதற்கு நமக்குக் கிடைத்துள்ள அரியதொரு வாய்ப்பு. இவ்வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறும் மானுடன் "நராதமன்" எனப்படுகிறான், (அதாவது, மனிதருள் இழிந்தவன்.)

புலனின்பத்திற்கு உதவும் பௌதிக அறிவு "அவித்யா" எனப்படும். இது மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பதற்கான வழியாகும். ஆன்மாவாக விளங்கும் உயிர்வாழிக்குப் பிறப்பு, இறப்பு என்பதில்லை. பிறப்பு, இறப்பு என்பது ஆத்மாவின் வெளியுறையான உடலைச் சார்ந்தது. ஒருவர் தான் அணிந்துள்ள ஆடையைக் களைவது இறப்பிற்கும், ஆடையை அணிவது பிறப்பிற்கும் ஒப்பிடப்படுகிறது. "அவித்யா" எனும் அறியாமையில் மூழ்கியிருப்பவர்கள் இக் கொடிய ஏற்பாட்டைப் பொருட்படுத்துவதில்லை. மாயையின் அழகில் மயங்கி, பழகிய பாதையிலேயே மீண்டும் மீண்டும் சென்று இயற்கையின் நியதிகளிலிருந்து எவ்விதப் பாடமும் கற்றுக் கொள்ளாமலேயே இருந்துவிடுகிறார்கள்.

"வித்யா" எனும் பரமான ஞானத்தை வளர்த்துக் கொள்வது மானுடர்களுக்கு இன்றியமையாதது. நோயுற்ற ஜடநிலையில்

புலனின்பம் காண்பதை இயன்ற அளவு குறைத்துக் கொள்ள வேண்டும். கட்டுப்பாடற்ற உடலின்பம் அறியாமைக்கும் மரணத்துக்கும் நம்மை இட்டுச் செல்லும். உயிர்வாழிக்கு ஆன்மீகப் புலன்கள் இல்லாமலில்லை. ஒவ்வொரு உயிர் வாழியும் தன் ஆதியான ஆன்மீக வடிவிற் பெற்றுள்ள புலன்களே இப்போது உடல், மனம் ஆகியவற்றால் மூடப்பட்டுப் பௌதிகப் புலன்களாகத் தோன்றுகின்றன. பௌதிகப் புலன்களின் செயற்பாடுகளெல்லாம் ஆன்மீக லீலைகளின் திரிபடைந்த பிம்பங்கள். மலின நிலையிலான ஆத்மா தான் பெற்றுள்ள பௌதிகப் பூச்சின் காரணமாக ஜடவுலக நடவடிக்கைகளை மேற்கொள்கிறது. ஜடநிலையெனும் நோய் தெளியப் பெற்றால்தான் உண்மையான புலனின்பம் பெறுவது சாத்தியம். பௌதிக மாசுகள் எதுவுமற்ற உண்மையான ஆன்மீக வடிவில் மட்டுமே உண்மையான புலனின்பம் கிட்டும். மனித வாழ்வின் இலட்சியம் திரிந்த புலனின்பமாக இருத்தல் கூடாது. ஜடவாழ்வெனும் நோயிலிருந்து குணம் பெற நாம் ஆவல் கொண்டிருக்க வேண்டும். இகவுலகப்பற்றெனும் நோய் அதிகரிப்பது அறிவின அறிகுறியாகாது, "அவித்யா" எனும் அறியாமையின் அடையாளமாகும். 105 டிக்ரி, 107 டிக்ரி என்று உடல் வெப்பம் அதிகரிப்பது ஆரோக்யத்திற்கு உகந்ததல்ல. அது 98.6 ஆக சமநிலைக்குக் கொண்டுவரப்பட வேண்டும். அதுவே மனித வாழ்வின் நோக்கமாகவிருக்க வேண்டும். இன்றைய நவநாகரிகத்தில் ஏற்கனவே ஜுரம் கண்டிருக்கும் ஜடவாழ்வு அணுசக்தியின் உதவியால் 108 டிக்ரிக்குக் கொண்டு செல்லப்பட்டிருக்கிறது. அறிவற்ற அரசியல்வாதிகள் இவ்வுலகம் எந்நேரமும் நரகமாகலாமெனக் கூக்குரலிடுகிறார்கள். இது மிக முக்கியமான ஆன்மீக வாழ்வெனும் நெறியைப் புறக்கணித்து ஜட அறிவில் முன்னேற முனைவதின் விளைவாகும். மரணத்திற்கு நம்மை இட்டுச் செல்லும் இந்த அபாயகரமான பாதையில் நாம் செல்லக்கூடாதென ஈசோபநிஷத் நம்மை எச்சரிக்கிறது. மாறாக, மரணத்தின் கொடிய கைகளிலிருந்து முற்றிலுமாக விடுபட ஆன்மீக அறிவெனும் பண்பை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

இதனால், உடலைச் சரிவர வைத்துக் கொள்வதற்கான நடவடிக்கைகளைக் கைவிட வேண்டுமென்பதல்ல. வியாதியிலிருந்து விடுபட நம் உடலிலுள்ள வெப்பம் அனைத்தையும் நீக்கிவிட வேண்டுமென்பதில்லாது போல், நம் நடவடிக்கைகளை முற்றிலுமாக நிறுத்திவிட வேண்டியதில்லை. இக்கட்டிலும் இயன்றவரை ஆதாயம் பெறுவது என்று இந்நிலையை விவரிப்பது பொருந்தும். ஆன்மீக அறிவெனும் பண்பை வளர்ப்பதற்கு உடல், மனம் ஆகியவற்றின் நல்லுதவி தேவை. எனவே நமது இலக்கையடைய உடலையும் மனத்தையும் பேணுதல் அவசியம். உடல் வெப்பத்தை சமநிலையான 98.64 டிக்ரியாக நிலைத்திருக்கச் செய்ய வேண்டும். இதற்கென நமது மகான்களான ஞானிகள் ஆன்மீக ஞானம் மற்றும் பௌதிக அறிவு

இரண்டையும் சமன்வயப்படுத்தும் திட்டத்தை வகுத்துள்ளனர். மனிதன் தன் அறிவைக் கீழான புலனிச்சைகளைத் திருப்தி செய்வதில் விரயம் செய்வதை அவர்கள் ஒருபோதும் அனுமதித்ததில்லை.

புலனின்பத்தைத் தேடிக் களைத்திருக்கும் மனித வாழ்வின் செயற்பாடுகளை ஒழுங்குப்படுத்தி விடுதலை பெறுவதற்கான விதி முறைகள் வேதங்களில் காணக் கிடைக்கின்றன. இம்முறைகள் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கின் அடிப்படையில் அமைந்துள்ளன. ஆனால் தற்போது பெரும்பாலானவர்களுக்கு தர்மத்திலோ, முக்தியிலோ அக்கறையில்லை. வாழ்வில் அவர்களுக்குண்டான ஒரே நோக்கம் புலனின்பம். இதை அடைவதற்கென அவர்கள் பொருளாதார முன்னேற்றத்திற்கான திட்டங்களைத் தீட்டுகிறார்கள். மதம் பொருளாதார முன்னேற்றத்திற்கு உதவுவதால் மதத்தை ஆதரிக்க வேண்டுமென்று நல்வழியினின்று தவறிய சில மக்கள் கருதுகிறார்கள். மரணத்திற்குப் பின்பு சுவர்க்கத்திலும் புலனின்பத்தை தொடர்ந்து அனுபவிக்கும் வாய்ப்பை உறுதிப்படுத்திக் கொள்வதற்காக இவர்கள் தர்ம நிஷ்டைகளை அனுஷ்டிக்கிறார்கள். ஆனால் முக்தியின் நோக்கம் இதுவல்ல. மதம் ஆதம ஞானம் பெறுவதற்காக ஏற்பட்டது. பொருளாதார முன்னேற்றம் உடலை ஆரோக்யமான நிலையில் வைத்திருப்பதற்குத் தேவை. மனித வாழ்வின் லட்சியம் "வித்யா" எனும் உண்மை அறிவைப் பெறுவது. இதற்கு உடலை ஆரோக்கியமாகவும் மனத்தைச் செம்மையாகவும் வைத்திருக்க வேண்டியது மிக அவசியம். மனித வாழ்வு கழுதையைப்போல் உழைக்கவோ, புலன் திருப்திக்காக அவித்யையைப் பேணுவதற்கோ ஏற்பட்டதல்ல.

"வித்யா" எனும் அறிவுப் பாதை பற்றி ஸ்ரீமத் பாகவதத்தில் மிகப் பக்குவமாக கூறப்பட்டுள்ள விளக்கங்கள் மனிதன் தன் வாழ்வைப் பூரண சத்தியத்தை அறியும் பணிக்கு அர்ப்பணித்துக் கொள்வதற்கு வழி காட்டுகின்றன. பூரண சத்தியம் படிப்படியாக பிரம்மன், பரமாத்மா (முடிவில்) முழுமுதற்கடவுளான பகவான் என்று அறியப்படுவதாகும். பகவத்கீதையின் பதினெட்டு நியமங்கள் பத்தாவது மந்திரத்தின் பொருளுரையில் விவரிக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கடைப்பிடித்து அறிவு நிலையில் நிற்கும் பரந்த மனப் பான்மையுள்ள மனிதன் பூரண சத்தியத்தைக் கண்டறிகிறான். புருஷோத்தமனை முழுமுதற் கடவுளுக்குப் பரமான தொண்டு செய்யும் நிலையை அடைவதே இந்தப் பதினெட்டு நியமங்களின் புமையக் கருத்து. எனவே, எல்லா வகையான மனிதர்களும் பிரவுக்குத் தொண்டு செய்யும் கலையைக் கற்கும்படி ஊக்குவிக்கப்படுகிறார்கள். "வித்யா" எனும் அறிவுப் பாதையின் குறிக்கோளை அடைவதற்கான உறுதிமிக்க வழியை ஸ்ரீ ரூப கோஸ்வாமி தமது "பக்தி ரஸாம்ருத ஸிந்து" எனும் நூலில் விளக்கியிருக்கிறார். அந்நூலை நாம் ஆங்கிலத்தில் "The Nectar of Devotion"

என்ற பெயரில் தந்திருக்கிறோம். "வித்யா" எனும் பண்பை ஸ்ரீமத் பாகவதம் பின் வரும் சொற்களில் சுருக்கமாகக் கூறியுள்ளது:

"தஸ்மாத் ஏகேன மனஸா
பகவான் ஸாத்வதாம் பதி: ।
சரோதவ்ய: கீர்த்திதவ்யச் ச
த்யேய: பூஜ்யச் ச நித்யதா"

"எனவே பக்தர்கள் புருஷோத்தமனெனும் முழுமுதற் கடவுளான பகவானைப் பற்றிய செய்திகளைக் கேட்பதிலும், அவர் புகழ் பாடுவதிலும், அவரை நினைந்து வழிபடுவதிலும் இடைவிடாது ஈடுபட்டிருத்தல் வேண்டும்.

தர்மம், அர்த்தம், காமம் (அறம், பொருள், இன்பம்) ஆகியவை பிரபுவான இறைவனுக்குப் பக்தித் தொண்டு செய்வதற்குப் பயன் படுத்தப்படாத வரை அவையெல்லாம் அறியாமையின் (அவித்யையின்) பல்வேறு பிரயோகங்களேயாகுமென்பது பின் வரும் மந்திரங்களில் விளக்கப்பட்டிருக்கிறது. இந்த யுகத்தில் "வித்யா" எனும் அறிவை வளர்ப்பதற்கு ஒருவர் எந்நேரமும் சிரவணம், கீர்த்தனம் ஆகியவற்றில் ஈடுபட்டுப் பரம ஞானிகளின் பிரபுவான புருஷோத்தமனை சிரத்தையோடு வழிபட வேண்டும்.



# பன்னிரண்டாவது மந்திரம்

*அந்தம் தம: ப்ரவிசந்தி*
*யே' ஸம்பூதிம் உபாஸதே*
*ததோ பூய இவ தே தமோ*
*ய உ ஸம்பூத்யாம் ரதா:*

அந்தம் - அறியாமை; தம: - இருளில்; ப்ரவிசந்தி - பிரவேசிக்கிறார்கள்; யே - யார்; அஸம்பூதிம் - தேவர்களை; உபாஸதே - வணங்குகிறார்களோ; தத: - அதைவிட; பூய: - அதிகம்; இவ - போன்று; தே - அவர்கள்; தம: - இருளில்; யே - யார்; ஸம்பூத்யாம் - பூரணத்தில்; ரதா: - ஈடுபட்டுள்ளவர்கள்.

## மொழி பெயர்ப்பு

தேவர்களைப் பூஜிப்பதில் ஈடுபட்டிருப்பவர்கள் அறியாமையெனும் இருள் மிகுந்த இடங்களில் பிரவேசிக்கிறார்கள். அருவமான பூரணத்தைப் பூஜிப்பவர்கள் மேலும் இருளான இடங்களைச் சென்றடைகிறார்கள்.

## பொருளுரை

"அஸம்பூதி" எனும் சம்ஸ்கிருதச் சொல் தனித்தன்மையற்றிருப்பவர்களைக் குறிக்கிறது. "ஸம்பூதி" என்றால் எல்லாவற்றினின்றும் தனித்து நிற்கும் பரமபுருஷனை முழு முதற் கடவுளைக் குறிக்கும். பகவத்கீதையில் புருஷோத்தமனை முழுமுதற் கடவுளான ஸ்ரீ கிருஷ்ணர் கூறுகிறார்.

*"ந மே விது: ஸுர கணா:*
*ப்ரபவம் ந மஹர்ஷய:*
*அஹம் ஆதிர் ஹி தேவானாம்*
*மஹர்ஷீணாம் ச ஸர்வச:"*

"தேவர்களோ மகா முனிவர்களோ கூட என் வைபவங்களை அறிய மாட்டார்கள். ஏனெனில் எல்லா விதங்களிலும் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் முதலானவன் நானே." (பகீ. 10.2).

இப்படியாக, தேவர்களுக்கும் மகா முனிவர்களுக்கும் ஞானிகளுக்கும் ஒப்படைக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களுக்கெல்லாம் மூலகர்த்தா கிருஷ்ணரே. அவர்களுக்கெல்லாம் உயர்ந்த சக்திகள் தரப்பட்டுள்ளனவென்றாலும், அவர்களுக்கும் கூட ஸ்ரீ கிருஷ்ணர் தம்முள் உறையும் சக்தியின் பலத்தால் மானுட உருவில் எவ்வாறு தோன்றுகிறார் என்பதை புரிந்து கொள்வது மிகவும் கடினமான காரியம்.

எல்லா தத்வ ஞானிகளும், மகான்களான ரிஷிகளும், ஞானிகளும் தமது சிறிய மூளையின் துணை கொண்டு, ஒன்றோடொன்று உறவு கொண்டுள்ள நிலையிலானவற்றையும் தனித்து நிற்கும் பூரணத்தையும் பிரித்து இனங்காண முயல்கிறார்கள். இம் முயற்சி, உறவு நிலை இல்லையென்ற எதிர்மறையான முடிவிற்கு வருவதற்கு மட்டுமே அவர்களுக்கு உதவுமேயல்லாது முழுமையெனும் உறுதியான நிலையை ஒரு சிறிதுகூட அவர்கள் உணர்வது சாத்தியமில்லை. எதிர்மறையாக முழுமையை விவரிப்பது அப்பழுக்கற்ற விளக்கமாகாது. இத்தகைய எதிர்மறையான விளக்கங்கள் ஒவ்வொருவரையும் அவரவர்க்கான தனித்தனி முடிவுகளை மேற்கொள்ளத் தூண்டும். இப்படியாக, முழுப் பூரணம் அருவமானது, நிர்குணமானது என்று ஒருவர் கற்பனையான முடிவிற்கு வரலாம். எதிர்மறையான தன்மைகள் உடன்பாடான தன்மைகளின் மறுபக்கங்களேயாகையால் அவை சார்புடையவை. முழுமையை இவ்வாறாகக் கருதுபவர்கள் மிஞ்சிப் போனால் இறைவனின் அருவ நிலையான பிரம்ம ஜோதியை மட்டுமே அறிய முடியும். ஆனால் இவர்கள் மேலும் முன்னேறி பகவானைச் சென்றடைய இயலார்கள்.

இப்படி மனத்தின் துணை கொண்டு யூகித்தறிய முயல்பவர்கள், க்ருஷ்ணரே முழு முதற் கடவுள், அவரின் பரமான சரீரத்திலிருந்து வெளிப்படும் ஜோதியின் பிரகாசமே அருவப் பிரம்மம், உயிர் நிலையிலான ஆத்மாவான பரமாத்மாவே கிருஷ்ணரின் எங்கும் நிறைந்த வெளிப்பாடு, என்பதையெல்லாம் அறிய மாட்டார்கள். ஸ்ரீ கிருஷ்ணரின் நித்யமான திருவுருவம் நித்யானந்த ஞான நிலையிலான திவ்ய குணங்களைக் கொண்டதென்பதையும் அவர்கள் அறியார். அவரிடமிருந்து தம் ஆற்றல்களைப் பெறும் தேவர்களும் மகான்களும் அவரையும் ஒரு சக்தி வாய்ந்த தேவன் என்றும், பிரம்ம ஜோதியைப் பூரண சத்தியமென்றும் தவறாகக் கருதுகிறார்கள். ஆனால் கிருஷ்ணரிடம் அப்பழுக்கற்ற பக்தி கொண்டு அவரிடம் சரணடைந்திருப்பவர்களான கிருஷ்ண பக்தர்கள் அவரே பூரணமான புருஷன், அவரிடமிருந்தே எல்லாம் வெளிப்படுகின்றன என்பதை அறிந்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட பக்தர்கள், எல்லாவற்றிற்கும் தோற்றுவாயான கிருஷ்ணருக்கு அன்புடன் கூடிய பக்தித் தொண்டாற்றும் பணியில் தொடர்ந்து ஈடுபடுகிறார்கள்.

புலனின்பம் துய்ப்பதில் தீவிர இச்சை கொண்டு மனம் குழம்பிப் போயிருப்பவர்களே தமது தாற்காலிகப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்காக சில்லரை தேவர்களை வணங்குகிறார்களென்று பகவத்கீதையில் சொல்லப்பட்டுள்ளது (பகீ. 7.20). அறிவிற் குறைந்தவர்களே தமது தாற்காலிக சிரமங்களைச் சமாளிப்பதற்காக வல்லமை கொண்ட ஏதாவதொரு தெய்வத்தின் துணையை நாடுவார்கள். உயிர்வாழி ஜடப் பிணைப்பிலிருப்பதால் அவன் நித்யமான ஆனந்தம், வாழ்வு, ஞானம், ஆகியவை நிலவும் ஆன்மீ

கத் தளத்தையடைந்து நிரந்தரமான விடுதலை பெறுவதற்கு ஜட நிலையின் பிடியிலிருந்து அவன் விடுவிக்கப்பட வேண்டும். சில்லரை தேவர்களை வழிபடுபவர்கள் அந்தந்த தெய்வம் உறையும் கிரகத்தை அடைகிறார்களென்றும் பகவத்கீதை கூறுகிறது. (பகீ. 7.23). சந்திரனை வழிபடுபவர்கள் சந்திரனுக்கும், சூரியனை வழிபடுபவர்கள் சூரியனுக்கும் செல்லலாம். நவீன விஞ்ஞானிகள் இப்போது ராக்கெட்டுகளின் உதவியால் சந்திரனுக்குச் செல்கிறார்கள். ஆனால் உண்மையில் இது ஒன்றும் புதுமையான முயற்சியல்ல. தன்னுணர்வில் முன்னேற்றம் கொண்டுள்ள மனிதர்கள் விண்வெளியில் பயணம் செய்து மற்ற கிரகங்களை அடைய விரும்புவது இயல்பு. இதை அவர்கள் விண்வெளிக் கலன்களின் உதவியாலோ, ஞான பலத்தாலோ, சில்லரை தெய்வங்களை வழிபடுவதாலோ சாதிக்க இயலும். இந்த மூன்று வழிகளில் ஏதாவதொன்றின் பலத்தால் மற்ற கிரகங்களைச் சென்றடைய முடியுமென்று வேத நூல்களில் கூறப்பட்டுள்ளது. ஆனால், ஒரு குறிப்பிட்ட கிரகத்தின் அதி தேவதையை வழிபடுவதன் மூலம் அங்கு போய்ச் சேர்வது பொதுவாக எல்லாரும் கையாளும் உக்தி. எனினும், பௌதிகப் பிரபஞ்சத்திலுள்ள எல்லா கிரகங்களும் தாற்காலிக இருப்பிடங்களே. வைகுண்ட லோகங்கள் மட்டுமே நிலையான இருப்பிடங்களாகும். இவை ஆன்மீக ஆகாயங்களில் உள்ளன. புருஷோத்தமனான முழுமுதற் கடவுள் அங்கு பரிபூர்ணமாக ஆட்சி செலுத்துகிறார். பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளது போல்:

"ஆப்ரஹ்ம புவனால் லோகா:
புனராவர்தினோ'ர்ஜுன
மாம் உபேத்ய து கௌந்தேய
புனர் ஜன்ம ந வித்யதே"

"ஜட உலகின் மிக உயர்ந்த கிரகத்திலிருந்து மிகத் தாழ்ந்தது வரை எல்லாம் பிறப்பும் இறப்பும் தொடருமாகிய துன்பங்கள் தொடருமிடங்களே. ஆனால், குந்தியின் மகனே, என் இடத்தை அடைபவனோ மீண்டும் பிறப்பதேயில்லை" (பகீ. 8.16). ஏதாவதொன்றைப் பற்றிக் கொண்டு பௌதிகக் கிரகங்களையே வட்டமிட்டுக் கொண்டிருப்பவன் பிரபஞ்சத்தின் இருண்ட பகுதியிலேயே தங்கிவிடுகிறானென்று ஸ்ரீ ஈசோபநிஷத் குறிப்பிடுகிறது. தேங்காயை நார் சுற்றியிருப்பது போல் இந்தப் பிரபஞ்சம் முழுவதும் மாபெரும் பௌதிக வஸ்துக்களால் மூடப்பட்டிருக்கிறது. இந்த மூடி மிக இறுக்கமாகவிருப்பதால் உள்ளே கனவிருள் நிலவுகிறது. எனவே அங்கு வெளிச்சம் தருவதற்கு சூரியன்களும் சந்திரன்களும் தேவைப்படுகின்றன. பிரபஞ்சத்திற்கு வெளியே வைகுண்ட லோகங்கள் நிறைந்த பிரம்ம ஜோதி விரிந்து, பரந்து, எல்லையற்று

விளங்குகிறது. பிரம்ம ஜோதியின் மிகவுயர்ந்த கிரகம் கிருஷ்ண லோகம் எனப்படும் கோலோக பிருந்தாவனம். அங்குதான் ஸ்ரீ கிருஷ்ணர் வசிக்கிறார். கிருஷ்ண பரமாத்மா இந்தக் கிருஷ்ண லோகத்தை என்றும் விட்டு அகலுபவரல்லர். அவர் தம் நித்யமான சகவாசிகளுடன் அங்கு வசிப்பவராகவிருந்தாலும் பௌதிக மற்றும் ஆன்மீகப் பிரபஞ்சங்கள் முழுவதிலுமாக வியாபித்திருக்கிறார். இந்த உண்மை ஏற்கனவே நான்காவது மந்திரத்தில் விளக்கப்பட்டுள்ளது. பிரபுவான இறைவன் சூரியனின் ஒளியைப் போல் எங்கும் நிறைந்திருக்கிறார். என்றாலும், சூரியன் என்றும் மாறாத தன் வட்டத்தில் நிலைத்திருப்பது போல் அவரும் ஒரே இடத்தில் அமர்ந்திருக்கிறார்.

வாழ்வின் பிரச்னைகளைச் சந்திரனுக்குப் போவதால் தீர்த்துவிட முடியாது. புகழுக்காகவும் பெயருக்காகவும் மாத்திரம் பக்திமான்களாகப் பாவனை செய்பவர்கள் பலர் இருக்கிறார்கள். இந்தப் போலி பக்தர்கள் இப்பிரபஞ்சத்திலிருந்து விடுபட்டு ஆன்மீக வெளியை அடைய விரும்புபவர்களல்லர். கடவுளிடம் பக்தி செலுத்தும் போர்வையில் தம் இகவுலக நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளவே விரும்புகிறார்கள். நாத்திகர்களும் அருவவாதிகளும் இந்த அறைகுறை பக்தர்களுக்கு நாத்திகத்தைப் போதித்து இருளுக்குள் இட்டுச் செல்கிறார்கள். நாத்திகன் நேரடியாக புருஷோத்தமனை இறைவனை மறுதலிக்கிறான். அருவவாதி இறைவனின் அருவ அம்சத்தை வற்புறுத்தி நாத்திகவாதத்திற்குத் துணை செய்கிறான். புருஷோத்தமனை இறைவனை இல்லையென மறுக்கும் எந்த மந்திரத்தையும் நாம் இதுவரை கண்டதில்லை. அவர் எல்லாரையும்விட அதிவேகமாக ஓடக்கூடியவரென்று சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற கிரகங்களை நோக்கி ஓடிக்கொண்டிருக்கும் பலரும் வியக்திகளேயானால், அவர்களைவிட வேகமாக ஓடக் கூடிய உன்னதமான பிரபு எப்படி அவ்யக்தமாகவிருக்க முடியும்? உன்னதமான பிரபுவை அருவமாகக் கருதுவது பூர்ண சத்தியத்தைப் பற்றிய தவறான கருத்தினால் விளைந்துள்ள ஒரு வகை அறியாமையாகும்.

அறிவற்ற அரைகுறை சமயவாதிகளும் போலியான அவதாரங்களை உருவாக்குபவர்களும் வேதக் கட்டளைகளை மீறுவதுடன், தம்மைப் பின்பற்றுபவர்களைத் தவறான பாதையில் இட்டுச் செல்வதால் பிரபஞ்சத்தின் இருள் நிறைந்த பகுதியை அடைவார்கள். இந்த அருவவாதிகள் வேத அறிவற்ற மூடர்களிடம் தாம் கடவுளின் அவதாரம் என்று கூறி நடித்துத் திரிகிறார்கள். இந்த மூடர்களின் சிறிதளவு அறிவு அறியாமையைவிட அபாயகரமானது. இந்த அருவவாதிகள் சமய நூல்கள் பரிந்துரைக்கும் விதிகளின்படி தேவர்களை வழிபடுவதுமில்லை. சில குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் சுல்லரை தேவர்களை வழிபடுவதற்கான முறைகள் சமய நூல்களில் சிபாரிசு செய்யப்பட்டுள்ளன. ஆனால், சாதாரணமாக இதற்குத்

தேவையிருக்காதென்றும் மத நூல்கள் கூறுகின்றன. தேவர்களைப் பிரார்த்தித்துப் பெறும் நன்மைகள் நீடித்திருக்காவென்று பகவத் கீதையில் கூறப்பட்டுள்ளது (பகீ. 7.23). பௌதிகப் பிரபஞ்சம் முழுமையுமே நித்யமல்லாததாகவிருக்கும்போது பௌதிக நிலையின் இருளில் பெறப்படும் எதுவும் நிலையற்றதாகவே இருக்கும். உண்மையான நித்ய வாழ்வைப் பெறுவது எப்படி என்பது கேள்வி.

புருஷோத்தமனுன கடவுளை அடையும் ஒரே வழியான பக்தித் தொண்டின் மூலம் தம்மை வந்தடைபவர்கள் பிறப்பு, இறப்பு எனும் பிணைப்பிலிருந்து முற்றிலும் விடுதலை பெறுகிருர்கள் என்று பகவானே கூறியிருக்கிருர். அதாவது, ஜடப் பிடியிலிருந்து விடுதலை பெறுவதென்பது ஒருவரின் உண்மையான அறிவையும் பற்றற்ற நிலையையும் பொறுத்திருக்கிறது. அரைகுறை பக்திமான்களிடம் உண்மையான அறிவும், பற்றின்மையும் காணப்படுவதில்லை. ஏனெனில், அவர்களில் பெரும்பாலார் மதத்தின் பெயரில் பொது சேவை, தான தருமங்கள் ஆகியவற்றின் நிழலில், ஜடச்சிக்கல் எனும் பொன் விலங்குகளால் கட்டுண்டு வாழ்வதையே விரும்புகிருர்கள். மத உணர்ச்சியுடையவர்கள் எனப் பொய்யாக நடித்து, பக்தித் தொண்டாற்றுபவர்களாகக் காட்டிக் கொண்டு, எல்லா வகையான ஒழுங்கீனங்களிலும் அவர்கள் ஈடுபடுகிருர்கள். இப்படியாக அவர்கள் ஆன்மீக குருக்களாகவும், கடவுளின் பக்தர்களாகவும் பெயர் பெற்று விடுகிருர்கள். தார்மீகக் கொள்கைகளை இவ்வாறு மீறுபவர்கள் அதிகாரபூர்வமான சிஷ்ய பரம்பரையில் வந்துள்ள ஆசார்யர்களை மதிப்பதில்லை. பாமர மக்களை திசை திருப்பும் நோக்கங்கொண்ட இவர்கள் தம்மை ஆசார்யர்களென்று சொல்லிக் கொள்கிருர்கள்; ஆனுல் ஆசார்யர்களின் கொள்கைகளை அவர்கள் கடைபிடிப்பதில்லை.

இந்த அயோக்கியர்கள் மனித சமூகத்தின் மிக அபாயகரமான சக்திகள். மத சார்புள்ள அரசாங்கங்கள் இல்லாததால் இவர்கள் தண்டனை பெருமல் தப்ப முடிகிறது. ஆனுல், பரம்பொருளின் நியதிகளிலிருந்து அவர்கள் தப்பவியலாது. மதப் பிரசாரகர்களின் உருவில் வட்டமிடும் அசூயைமிக்க அசுரர்கள் இருள் சூழ்ந்த நரகத்தில் தள்ளப்படுவார்களென்று பகவான் பகவத்கீதையில் தெளிவாகக் கூறியுள்ளார் (பகீ. 16,19-20). இந்தப் போலியான மதப் பிரசாரகர்கள் தம் புலன்களைத் திருப்தி செய்வதற்காக ஆன்மீக குருமார்களின் வேஷத்தில் நடித்து முடித்த பின்னர் பிரபஞ்சத்தின் மிக வெறுக்கத்தக்க பகுதிகளைச் சென்றடைகிருர்களென்று ஸ்ரீ ஈசோபநிஷத் உறுதி செய்கிறது.

# பதிமூன்றுவது மந்திரம்

*அன்யத் ஏவாஹுஃ ஸம்பவாத்*
*அன்யத் ஆஹுர் அஸம்பவாத்*
*இதி சுச்ரும தீராணாம்*
*யே நஸ் தத் விசசக்ஷிரே*

அன்யத் - ஒரு வகையான; ஏவ - நிச்சயம்; ஆஹுஃஹ் - என்று சொல்லப்படுகிறது; ஸம்பவாத் - காரணங்களுக்கெல்லாம் காரண மான பிரபுவை வணங்குவதால்; அன்யத் - பிற; ஆக்ஷுஃஹ் - என்று சொல்லப்படுகிறது; அஸம்பவாத் - உன்னதமல்லாததை வணங்கு வதால்; இதி - இவ்வாறு; சுச்ரும - நாம் கேள்விப்பட்டிருக்கிறோம்; தீராணாம் - தீரர்களான ஞானிகளிடமிருந்து; யே - யார்; நஃ - நமக்கு; தத் - அந்த விஷயத்தைப் பற்றி; விசசக்ஷிரே - பக்குவ மாக விளக்கப்பட்டுள்ளது.

## மொழிபெயர்ப்பு

எல்லா காரணங்களுக்கும் ஆதிகாரணமானதை வழிபடுவ்தால் ஒரு வகையான முடிவும், உன்னதமல்லாததை வழிபடுவதால் வேறு வகையான முடிவும் பெறப்படுகிறதென்று சொல்லப்படுகிறது. இவ்வாறு நாம் இந்த விஷயத்தைப் பற்றிப் பக்குவமாக விளக்கி யுள்ள தீரர்களான ஞானிகளிடமிருந்து கேள்விப்பட்டிருக்கிறோம்.

## பொருளுரை

சலனமற்ற ஞானிகளிடமிருந்து விஷயங்களைக் கேட்டறியும் முறையை இந்த மந்திரம் அங்கீகரிக்கிறது. பௌதிகவுலகில் ஏற்படும் மாற்றங்களால் சலனமடையாதவரும், அதிகாரம் பெற்ற வருமான ஆசார்யரிடமிருந்து கேட்டறிந்தாலன்றி பரமான ஞானத் திற்கான உண்மையான திறவுகோலை ஒருவர் அடைய முடியாது. ச்ருதி மந்திரங்களான வேத ஞானத்தை நிச்சலனமான தனது ஆசார்யரிடமிருந்து ஏற்கனவே கேட்டறிந்துள்ள ஆன்மீக குரு வேத இலக்கியங்களில் கூறப்பட்டிராத எந்தக் கருத்தையும் ஒரு போதும் போதிப்பதோ, உருவாக்குவதோ இல்லை. பித்ருக்களான முதாதையர்களை வணங்குபவர்கள் பித்ரு லோகங்களைச் சென்ற டைவார்களென்று பகவத்கீதையில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது (பகீ. 9.25). அதுபோலவே, எப்போதும் பூவுலகிலேயே இருப்பதற் கான திட்டங்களைத் தீட்டும் தீவிர பௌதிகவாதிகள் மீண்டும் மீண்டும் பூவுலகிற்கே வருகிறார்கள். அதேபோல், காரணங்களுக் கெல்லாம் ஆதி காரணமான கிருஷ்ணபரமாத்மாவை வழிபடும் பக்தர்கள் ஆன்மீக வெளியிலுள்ள அவரது பரம்தாமத்துக்குச் சென்று அவரை அடைகிறார்கள்.

பல்வேறுன வழிபாட்டு முறைகள் பல்வேறுன முடிவுகளை விளை விக்கின்றனவென்று ஸ்ரீ ஈசோபநிஷத்தும் இங்கு தெளிவுபடுத்து கிறது. உன்னதமான பிரபுவை வணங்கிஞல் அவரது நித்யமான இருப்பிடத்திற்குச் சென்று அவரை அடைவது நிச்சயம். சந்திர சூரியர்களைப் போன்ற தேவர்களை வழிபட்டால் அவர்களின் கிரகங் களைச் சென்றடைவோமென்பதில் ஐயமில்லை. நமது திட்டக் குழுக் கள், தாற்காலிகமான அரசியல் உடன்பாடுகள் ஆகியவற்றின் துணை கொண்டு இந்த சீர்கெட்ட உலகமான கிரகத்திலேயே எப்போதும் இருக்க நாம் விரும்பிஞல் நிச்சயம் அவ்வாறு இருக்க முடியும்.

எதையும் செய்து, எவரையும் வழிபட்டு ஒரே இலக்கை நாம் சென்றடைய முடியுமென்று எந்த உண்மையான வேதமும் கூற வில்லை. அதிகாரபூர்வமான சிஷ்ய பரம்பரையோடு எவ்விதத் தொடர்புமில்லாத தான்தோன்றிகளான குருமார்களே இப்படிப் பட்ட மூடக் கொள்கைகளையெல்லாம் வகுத்திருக்கிறுர்கள். எல்லாப் பாதைகளும் ஒரே இலக்குக்கு நம்மை இட்டுச் செல்கின்றனவென் றும், சில்லறை தெய்வங்களையோ, பரமனையோ, வேறெதையோ தனக்குத் தோன்றும் முறையில் வழிபட்டு ஒருவர் இந்த இலக்கை அடையமுடியுமென்றும் அதிகாரபூர்வமான எந்த குருவும் கூற மாட்டார். ஒரு குறிப்பிட்ட இடத்திற்குச் செல்வதற்கான பயணச் சீட்டைப் பெற்றிருப்பவர் மட்டுமே அந்த இடத்தைச் சென்றடைய லாம். இது சாதாரணமானவர்களும் மிக எளிதில் புரிந்துகொள்ளக் கூடிய விஷயம். கல்கத்தாவுக்குச் செல்ல சீட்டு வாங்கியிருப்பவர் கல்கத்தாவுக்குத்தான் செல்லலாம், பம்பாய்க்கல்ல. என்றுலும், தம்மை குருமார்களென்று சொல்லிக் கொள்ளும் தற்காலிகர்கள் எல்லாச் சீட்டுக்களும் அந்த உயர்ந்த இலக்கிற்கு நம்மை அழைத் துச் செல்ல முடியுமென்று கூறுகிறுர்கள். இப்படிப்பட்ட கீழ்த்தர மான, முறைகேடான உறுதிமொழிகளால் வசீகரிக்கப்பட்டுப் பல மூடர்கள் செயற்கை முறையில் ஆத்ம ஞானம் பெற்றுவிட்டதாக எண்ணிப் பெருமைப்பட்டுக் கொள்கிறுர்கள். ஆனுல், வேதக் கோட்பாடுகள் அவர்களை ஒப்புக் கொள்வதில்லை. அதிகாரம் பெற்ற சிஷ்ய பரம்பரையில் வந்துள்ள குருவிடமிருந்து உபதேசம் பெற்று லன்றி உண்மையான ஞானத்தை உண்மையுருவில் பெறவியலாது. பகவத்கீதையில் கிருஷ்ணர் அர்ஜுனனுக்குக் கூறுகிறுர்:

"ஏவம் பரம்பரா ப்ராப்தம்
இமம் ராஜர்ஷயோ விது:
ஸ காலேநேஹ மஹதா
யோகோ நஷ்ட: பரந்தப"

"உன்னதமான இவ்விஞ்ஞானம் சங்கிலித் தொடர் மூலமாகப் பெறப்பட்டு அவ்வாறே புனிதமாக மன்னர்களால் உணரப்பட்டது.

ஆனால் காலப்போக்கில் இத் தொடர் விட்டுப் போகவே, இவ்விஞ் ஞானம் மறைந்துவிட்டது போலத் தோன்றுகிறது'' (பகீ. 4.2).

ஸ்ரீ கிருஷ்ணர் இப்பூவுலகில் உலவிய காலத்தில் பகவத்கீதை யில் விவரிக்கப்பட்டுள்ள பக்தியோக முறைகள் தம் உண்மை உருவை இழந்து திரிந்திருந்தன. எனவே அவர் தம் ஆப்த நண்பனும் பக்தனுமான அர்ஜுனனை முதன்மையாகக் கொண்டு சிஷ்ய பரம் பரையை மீண்டும் நிறுவவேண்டியதாயிற்று. அர்ஜுனன் தம் பக்தனாகவும் நண்பனாகவும் விளங்கியபடியால் பகவத்கீதையின் கோட்பாடுகளை சரிவரப் புரிந்து கொள்ள அவனால் முடிந்ததென்று பகவான் அவனுக்குத் தெளிவாகக் கூறினார் (பகீ. 4.3). அதாவது, பகவானின் நண்பனாகவும் பக்தனாகவும் இல்லாத எவரும் கீதையைப் புரிந்து கொள்ள முடியாதென்று பொருள். அர்ஜுனனின் வழியைப் பின்பற்றுபவர்கள் மட்டுமே பகவத்கீதையைப் புரிந்து கொள்ள முடியுமென்றும் பொருள்.

அர்ஜுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ணர் அளித்த இந்த உபதேசங்களை சரிவரப் புரிந்து கொள்ளாத உரையாசிரியர்களும் மொழிபெயர்ப் பாளர்களும் தற்போது உள்ளனர். இத்தகைய உரையாசிரியர்கள் தம் மனம் போன போக்கில் பகவத்கீதையின் பதங்களுக்கு விளக்கம் தந்து மதநூலென்ற பெயரில் எல்லா வகையான அபத்தங்களையும் வகுத்திருக்கிறார்கள். இந்த விரிவுரையாளர்கள் ஸ்ரீ கிருஷ்ண ரையோ, அவரது நித்யமான இருப்பிடத்தையோ நம்பாதவர்கள். இவர்கள் எப்படி பகவத்கீதைக்கு விளக்கம் தர முடியும்?

அறிவை இழந்தவர்களே சில்லரை தேவர்களைப் பூஜிக்கிறார்கள என்று பகவத்கீதை தெளிவாகச் சொல்கிறது (பகீ. 7.20). ஒருவர் மற்றெல்லா வகையான வழிபாட்டு முறைகளையும் கைவிட்டுத் தம் மிடம் முழுமையாக சரணடைய வேண்டுமென்று கிருஷ்ணர் இறுதி யான அறிவுரை கூறியுள்ளார் (பகீ. 18.66). பாவச் செயல்களி லிருந்து முற்றிலும் விடுபட்டவர்களே உன்னதமான பிரபுவிடம் இத்தகைய திடமான நம்பிக்கை கொண்டிருக்க முடியும். மற்றவர் களெலாம் அற்பமான வழிபாடுகளை மேற்கொண்டு ஜட நிலையிலே யே தொடர்ந்து வட்டமிட்டுக் கொண்டு, எல்லா வழிகளும் ஒரே இலக்கை நோக்கிச் செல்கின்றன என்ற தவறான எண்ணத்தில் உண்மையான பாதையிலிருந்து விலகிச் செல்கிறார்கள்.

இந்த மந்திரத்தில் ஆதி காரணத்தை வழிபடுவதைக் குறிக்கும் ''ஸம்பவாத்'' எனும் சொல் பயன்படுத்தப்பட்டிருப்பது மிக முக்கிய மாகக் குறிப்பிடத்தக்கது. கிருஷ்ண பரமாத்மா ஆதியான முழு முதற் கடவுள். அவரிலிருந்தே எல்லாம் தோன்றியுள்ளன. பிரம்மா, விஷ்ணு, சிவன் உட்பட எல்லாரையும் தாமே சிருஷ்டித்திருப்ப தாக பகவான் பகவத்கீதையில் விளக்கியிருக்கிறார் (பகீ. 10.8). பௌதிகப் பிரபஞ்சத்தின் இம்மூன்று முக்கிய தெய்வங்களும் பிரபு வால் சிருஷ்டிக்கப்பட்டவர்களாகையால், பௌதிக மற்றும் ஆன்மீக

உலகங்களிலுள்ள எல்லாவற்றையும் பிரபுவே சிருஷ்டித்தவராகிருர். ஸ்ரீ கிருஷ்ணர் பிரம்மன் படைக்கப்படுவதற்கு முன்பே இருந்தவரென்றும், பிரம்மனுக்கு வேத உபதேசம் செய்தவர் அவரேயென்றும் அதர்வ வேதத்திலும் கூறப்பட்டுள்ளது. "பரம்பொருள் உயிர் வாழிகளை உண்டுபண்ண விரும்பினுர். இப்படியாக நாராயணர் எல்லா உயிர்வாழிகளையும் சிருஷ்டித்தார். நாராயணரிடமிருந்து பிரம்மன் தோன்றினுர். நாராயணர் எல்லாப் பிரஜாபதிகளையும் உற்பத்தி செய்தார். நாராயணர் இந்திரனை உண்டுபண்ணினுர். நாராயணர் அஷ்ட வசுக்களை சிருஷ்டித்தார். நாராயணர் பதினொரு ருத்ரர்களை சிருஷ்டித்தார். நாராயணர் பன்னிரு ஆதித்யர்களை உண்டாக்கினுர்." நாராயணர் கிருஷ்ணரின் முழுமையான தோற்றமாகையால், நாராயணரும் கிருஷ்ணரும் ஒருவரே. அதே மகாப் பிரபு தேவகியின் மைந்தனுகத் தோன்றினுரென்று பிந்தைய பாடங்களில் வருகிறது. தேவகி, வசுதேவர் ஆகியோருடன் ஸ்ரீ கிருஷ்ணர் கழித்த குழந்தைப் பருவமும், அவரும் நாராயணரும் ஒருவரே என்பதும் வியக்தவாத வைஷ்ணவரல்லாத ஸ்ரீபாத சங்கராசார்யாராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. அதர்வ வேதமும் இவ்வாறு கூறுகிறது:

"ஆரம்ப காலத்தில் பிரம்மா, சிவன், நெருப்பு, நீர், நட்சத்திரங்கள், சூரியன், சந்திரன் எதுவுமே இல்லாதபோது நாராயணர் மட்டுமே உள்ளவராயிருந்தார். பிரபு தான் மட்டும் தனியாகவிராமல் தன் விருப்பப்படி சிருஷ்டித்துக் கொண்டிருக்கிருர்." "மோக்ஷ தர்மத்தில்" கூறப்பட்டுள்ளதாவது: "பிர்ஜாபதிகளையும் ருத்ரர்களையும் நானே சிருஷ்டித்தேன். அவர்கள் எனது மாயையால் மூடப்பட்டிருப்பதால் என்னைப் பற்றிய முழுமையான ஞானம் இல்லாதவர்களாயிருக்கிருர்கள்." வராக புராணத்திலும் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது: "நாராயணரே புருஷோத்தமனன கடவுள். அவரிலிருந்து நான்முகப் பிரம்மனும் ருத்திரரும் தோன்றிப் பின்னர் சர்வக்ஞர்களானுர்கள்."

இப்படியாக, எல்லா வேத இலக்கியங்களும் நாராயணரான கிருஷ்ணர் எல்லாக் காரணங்களுக்கும் காரணமானவரென்று உறுதிப்படுத்துகின்றன. பிரஹ்மசம்ஹிதையும், எல்லா உயிர்வாழிகளின் இன்பமும் எல்லாக் காரணங்களுக்கும் ஆதி காரணமான கோவிந்தனெனும் ஸ்ரீ கிருஷ்ணரே பரம புருஷன் என்று கூறுகிறது. மகான்களான ரிஷிகளும் வேதங்களும் தரும் சாட்சியங்களிலிருந்து இதை அறிவுடைய ஒவ்வொருவரும் அறிகிருர்கள். இப்படியாக, ஞானி, கிருஷ்ண பரமாத்மாவே எல்லாமென்று அவரை வணங்க முடிவு செய்கிருன்.

கிருஷ்ணரை மட்டும் வழிபடுவதென்ற தீர்மானமான முடிவிற்கு வந்திருப்பவர்கள் உண்மையான ஞானம் பெற்ற புத்தர்கள் எனப்படுகிருர்கள். தீரர்களான ஆசார்யர்களிடமிருந்து நம்பிக்கையோ

டும் அன்போடும் இந்த உன்னதமான செய்தி பெறப்படும்போது உறுதியும் ஏற்படுகிறது. கிருஷ்ணரிடம் நம்பிக்கையும் அன்பும் இல்லாதவர்களுக்கு இந்த எளிய உண்மை புலப்படுவதில்லை. நம்பிக்கையற்றவர்களை மூடர்கள், அதாவது கழுதைகள் என்று பகவத்கீதை வர்ணிக்கிறது (பகீ. 9.11). மூடர்கள் தீரர்களான ஆசார்யர்களிடமிருந்து முழுமையான அறிவு பெறாத காரணத்தால் கடவுளை ஏளனம் செய்கிறார்களென்று சொல்லப்பட்டுள்ளது. பௌதிக சக்தியின் சுழற்சியில் அகப்பட்டுத் தத்தளிக்கும் ஒருவன் ஆசார்யராவதற்குத் தகுதியுடையவனாகான்.

'பகவத்கீதையைக் கேட்பதற்கு முன், அர்ஜுனன் தன் குடும்பம், சமூகம், இனம் என்ற பற்றுக்களின் காரணமாக ஜடச் சுழலில் அகப்பட்டு நிலைகுலைந்திருந்தான். ஒரு ஜனோபகாரியாக, அஹிம்சாவாதியாகவிருக்க அவன் விரும்பினான். ஆனால் அவன் புருஷோத்தமனை கடவுளிடமிருந்து பகவத்கீதையில் அடங்கியுள்ள வேத ஞானத்தைக் கேட்டறிந்தபோது அறிவு பெற்ற புத்தனாகித் தன் முடிவை மாற்றிக் கொண்டு, குருக்ஷேத்திர பூமியை வகுத்தவரான கிருஷ்ணபரமாத்மாவின் பக்தனாய்; தனது உறவினர்களென்று கருதப்பட்டவர்களோடு போரிட்டு, கிருஷ்ணருக்குத் தன் பக்தியைத் தெரிவித்துக் கொண்டான். இந்த முறையில் அவன் பிரபுவின் பரம பக்தனான். இத்தகைய சாதனைகள் உண்மையான கிருஷ்ணரிடம் பக்தி செலுத்துபவர்களுக்கு மட்டுமே சாத்தியம்; ஸ்ரீமத் பாகவதம், பகவத்கீதை ஆகியவற்றில் விவரிக்கப்பட்டுள்ள கிருஷ்ண பக்தி விஞ்ஞானத்தின் நுணுக்கங்களை அறியாத மூடர்கள் உருவாக்கியுள்ள போலியான கிருஷ்ணர்களை வழிபடுபவர்களுக்கு இது சாத்தியமல்ல.

வேதாந்த சூத்திரத்தின்படி, "ஸம்பூத" என்பது ஜனனம், பரிபாலனம் ஆகியவற்றின் தோற்றுவாயாகவும், ஸம்ஹாரத்திற்குப்பின் எஞ்சுவதன் தேக்கமாகவும் விளங்குகிறது. அந்நூலின் இயல்பான பாஷ்யமும் அதே ஆசிரியர் எழுதியுள்ளதுமான ஸ்ரீமத் பாகவதம், எல்லா வெளிப்பாடுகளுக்கும் தோற்றுவாயான மூலப் பொருள் ஒரு உயிரற்ற கல்லைப் போன்றதல்ல, மாறாக, "அபிஞான", அதாவது முழுமையான உணர்வு பெற்றது என்று உறுதியாகக் கூறுகிறது. முழுமுதற்கடவுளான ஸ்ரீ கிருஷ்ணரும் பகவத்கீதையில் (பகீ. 7.26) தாம் கடந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் ஆகிய மூன்றையும் முற்றிலும் உணர்ந்தவராயிருப்பதாகவும், சிவன், பிரம்மா போன்ற தேவர்கள் உட்பட எவருமே தம்மை முழுவதுமாக உணர்ந்தவர் இல்லையென்றும் கூறியிருக்கிறார். ஜட இருப்பின் அலைகளால் அலைக்கழிக்கப்படுபவர்கள் நிச்சயமாக அவரை முழுவதுமாக உணர முடியாது. அரைகுறைக் கல்வி பெற்ற ஆன்மீகக் குருமார்கள் மனித சமுதாயம் ஒட்டுமொத்தமாக வணக்கத்திற்குரியதென்று இட்டுக் கட்டிக் கூறுகிறார்கள். இத்தகைய வழிபாடு நடைமுறைக்கொவ்

வாதது, மக்கள் கூட்டமும் குறையற்றதல்லவென்பதை அவர்கள் அறியார்கள். அவர்களது முயற்சி மரத்தின் வேரை விட்டுவிட்டு இலைகளுக்கு நீருற்றுவதைப் போன்றது. வேருக்கு நீர் ஊற்றுவது தான் இயல்பான முறை. ஆனால், நிலைகுலைந்த இன்றையத் தலைவர்கள் இலைகளிடத்தில் அதிகப் பற்றுதலைக் கொண்டுள்ளவர்கள். அவர்கள் தொடர்ந்து இலைகளுக்கு நீரூற்றிக் கொண்டிருந்தாலும், ஊட்டமின்மை காரணமாக செடியெல்லாம் காய்ந்து போகும். உயிர்த்தலின் மூலமான வேருக்கு நீரூற்றும்படி ஈசோபநிஷத் நமக்கு அறிவுரை வழங்குகிறது. மக்கள் கூட்டத்தின் உடல் நலனுக்குத் தொண்டு செய்வது குறையற்ற வழிபாடாகாது. அத்தகைய தொண்டு அவர்களின் ஆத்மாக்குத் தொண்டு செய்வதைவிடக் குறைவான முக்கியத்வம் வாய்ந்ததாகும். ஜட வினைகளின் விளைவான "கர்மா"வின் விதிகளின்படி வெவ்வேறு வகையான உடல்கள் ஆத்மாவெனும் வேரிலிருந்து தோன்றுகின்றன. மருத்துவ உதவி, சமுதாய உதவி, கல்வி வசதிகள் போன்றவற்றை வழங்கி மக்களுக்கு சேவை செய்து கொண்டும், அதே சமயத்தில் ஏதுமறியா விலங்கனங்களைக் கசாப்புக் களங்களில் கொன்று தீர்த்துக் கொண்டுமிருப்பது உயிரினங்களுக்கு நியாயமான சேவை செய்வதாகாது.

ஜடத் துயரங்களான பிறப்பு, மூப்பு, பிணி, இறப்பு ஆகியவற்றால் உயிரினங்கள் பல்வேறான உடல்களில் தொடர்ந்து துன்புற்று வருகின்றன. உன்னத இறைவனோடான தன் தொடர்பை இழந்து நிற்கும் உயிர்வாழி, மீண்டும் அதை நிறுவிக் கொண்டு ஜடச் சிக்கலினின்று விடுபடுவதற்கான அரிய வாய்ப்பை மனிதப் பிறவி அவனுக்கு அளிக்கிறது. பரம்பொருளிடம் சரணடைவதான "ஸம்பூதம்" எனும் தத்துவத்தைக் கற்பிப்பதற்கென பகவான் நேர்முகமாக வருகிறார். முழுமையான அன்புடனும் உணர்வுடனும் இறைவனைச் சரணடைந்து வழிபடுவதை உபதேசிப்பது மனித இனத்திற்குச் செய்யப்படும் உண்மையான சேவையாகும். ஈசோபநிஷத் இந்த மந்திரத்தில் தரும் அறிவுரை இதுவே.

கலவரங்கள் மிகுந்த இந்த யுகத்தில் உன்னதமான இறைவனை வழிபடுவதற்கான எளிய முறை யாதெனில், அவரது உன்னத நிலைகளைப் பற்றிக் கேட்டறிவதும், அவரின் புகழ் பாடுவதுமாகும். ஆனால், மனோ யூகங்களில் நம்பிக்கை கொண்டவர்கள் பிரபுவின் லீலைகளைக் கற்பனைகளென்றெண்ணி, அவைகளைப் பற்றிக் கேட்க மறுத்து; அப்பாவி மக்களைத் திசை திருப்பும் நோக்கத்தோடு சாரமற்ற ஜால வார்த்தைகளைப் புனைகிறார்கள். அவர்கள் தம்மைப் பின்பற்றுபவர்களைக் கிருஷ்ண பரமாத்மாவின் லீலைகளைப் பற்றிக் கேள்விப்படுவதை விடுத்துப் போலி குருமார்களின் புகழ் பாடத் தூண்டுகிறார்கள். இந்த நவீன காலத்தில் இத்தகைய போலிகளின் எண்ணிக்கை கணிசமாக உயர்ந்து வருவதால் இந்த வேஷதாரிகள் மற்றும் பொய்யான அவதாரங்களின் புனிதமற்ற பிரசாரங்களி

னின்று பாமர மக்களைக் காப்பாற்றுவது பிரபுவின் உண்மையான பக்தர்களுக்குப் பெரும் பிரச்னையாக உள்ளது.

ஆதிமூலமான ஸ்ரீ கிருஷ்ணரை உபநிஷத்துக்கள் மறைமுகமாக நமக்கு அறிமுகப்படுத்துகின்றன. ஆனால், உபநிஷத்துக்களின் சாரமான பகவத்கீதை கிருஷ்ணரை நமக்கு நேர்முகமாகக் காட்டுகிறது. பகவத்கீதையிலும் ஸ்ரீமத் பாகவதத்திலும் ஸ்ரீ கிருஷ்ணரைப் பற்றி அவரது உண்மை உருவில் கேள்விப்படும்போது நமது மனதில் படிந்துள்ள மாசுகள் படிப்படியாக நீங்குகின்றன. ஸ்ரீமத் பாகவதம் கூறுவதாவது: "பிரபுவின் லீலைகளைப் பற்றிக் கேட்பதால் அவரது கவனம் அவர்களது பக்தர்களின்பால் ஈர்க்கப்படுகிறது. இவ்வாறாக, ஒவ்வொரு உயிர்வாழியின் இதயத்திலும் உறையும் பகவான் தகுந்த அறிவுரைகள் தந்து பக்தனுக்கு வழி காட்டுகிறார்." பகவத்கீதையும் இதை உறுதிப்படுத்துகிறது (பகீ. 10.10). பௌதிக இயற்கையின் குணங்களான தீவிரம், அறியாமை ஆகியவை பிறப்பிக்கும் மாசுகளையெல்லாம் உள்ளிருக்கும் பகவானின் நல்லுரைகள் பக்தனின் உள்ளங்களிலிருந்து நீக்குகின்றன. பக்தர்களல்லாதவர்கள் தீவிரம் மற்றும் அறியாமைக் குணங்களின் ஆளுகையில் உள்ளனர். தீவிர குணத்தின் பிடியிலிருப்பவன் ஜட இச்சைகளிலிருந்து மீளவியலான். அறியாமையிலிருப்பவன் தன்னைப் பற்றியோ, பகவானைப் பற்றியோ அறியவியலாதவன். எனவே, தீவிர மற்றும் அறியாமைக் குணங்களிலிருப்பவன், எவ்வளவுதான் பக்திமானாகக் காட்சியளித்தாலும், ஆத்ம ஞானம் பெறும் வாய்ப்பு அவனுக்கில்லை. பக்தனின் தீவிர குணமும் அறியாமையும் பகவானின் கருணையால் விலகிப் போகின்றன. இவ்வாறாக, பக்தன் சாத்விக குணத்தில் நிலைபெறுத்தப்படுகிறான். இது பக்குவமான பிராஹ்மணனின் இலக்கணமாகும். அதிகாரம் பெற்ற குருவினால் பக்தித் தொண்டில் வழிபடுத்தப்படும் எவரும் பிராம்மணனாகும் தகுதியைப் பெறலாம். ஸ்ரீமத் பாகவதம் இவ்வாறு கூறுகிறது (பாக. 2.4.18):

"கிராத-ஹூணாந்த்ர-புலிந்த-புல்கசா
ஆபீர-சும்பா யவனா: கஸாதய:
யே'ன்யே ச பாபா யத்- அபாச்ரயாச்ரயா:
சுத்யந்தி தஸ்மை ப்ரபவிஷ்ணவே நம:

"பிறப்பால் தாழ்ந்த எந்த உயிர்வாழியும் பகவானின் புனிதமான பக்தனால் வழிபடுத்தப்பட்டுப் புனிதமடையலாம்; ஏனெனில் பகவான் அசாதாரணமான வல்லமை படைத்தவர்."

பிராம்மணனின் தகுதிகளை ஒருவர் பெறும்போது அவர் ஆனந்த நிலையையடைந்து பகவானுக்கு பக்தித் தொண்டாற்றுவதில் உத்

சாகமடைகிறுர். இறை விஞ்ஞானம் தானுகவே அவரை வந்தடைகிறது. கடவுளைப் பற்றிய விஞ்ஞானத்தை அறிவதால் பௌதிக இச்சைகளிலிருந்து படிப்படியாக விடுதலை கிடைக்கிறது. பகவானின் அருளால் சந்தேகங்கள் நீங்கி மனம் பளிங்கு போல் தெளிவு பெறுகிறது. இந்நிலையை அடைபவன் ஆத்ம முக்தி பெற்று வாழ்வின் ஒவ்வொரு படியிலும் பகவானைக் காண்கிறுன். "ஸம்பவாத்" எனும் இந்தப் பக்குவம் இம்மந்திரத்தில் விளக்கப்பட்டுள்ளது.

# பதினான்காவது மந்திரம்

ஸம்பூதிம் ச விநாச'ம் ச
யஸ் தத் வேதோபயம் ஸஹ
விநாசே'ன ம்ருத்யும் தீர்த்வா
ஸம்பூத்யாம்ருதம் அச்னுதே

ஸம்பூதிம் - நித்யமான இறைவன், அவரது திவ்ய நாமம், வடிவம், லீலைகள், தன்மைகள், சின்னங்கள் முதலியன; ச - மற்றும்; விநாசம் - தேவர்களின் தாற்காலிகமான ஜடத் தோற்றம், மனிதர்கள், விலங்குகள் முதலியனவும், அவற்றின் பொய்யான பெயர்கள், புகழ், முதலியன; ச - மற்றும்; ய: - யாரொருவன்; தத் - அந்த; வேத - அறிகிறான்; உபயம் - இரண்டு; ஸஹ - உடன்; விநாசேன - நாசத்திற்குரியது; ம்ருத்யும் - மரணம்; ஸம்பூத்ய - கடவுளின் நித்யமான ராஜ்யத்தில்; அம்ருத்வம் - அமரத்துவம்; அச்னுதே - அனுபவிக்கிறான்.

## மொழி பெயர்ப்பு

புருஷோத்தமனான இறைவனையும் அவனது திவ்ய நாமத்தையும், மற்றும் தாற்காலிகமான பௌதிக சிருஷ்டியையும் அதன் தாற்காலிகமான தேவர்கள், மனிதர்கள், விலங்குகள் ஆகியவற்றையும் ஒருவன் முற்றிலுமாகப் புரிந்து கொள்ள வேண்டும். இவற்றை அறிபவன் மரணத்தையும், அதோடுகூட அநித்யமான பிரபஞ்சத் தோற்றத்தையும் கடந்து, இறைவனின் நித்யமான சாம்ராஜ்யத்தையடைந்து, அங்கு நித்யமான இன்பமும் ஞானமும் நிறைந்த வாழ்வை அனுபவிக்கிறான்.

## பொருளுரை

அறிவியல் முன்னேற்றம் என்ற பெயரில் மனித நாகரிகம் விண்கலன்கள், அணுசக்தி போன்ற பல பௌதிக வசதிகளைப் பெருக்கியுள்ளதென்றாலும், பிறப்பு, மூப்பு, பிணி, மரணம் ஆகியவற்றிலிருந்து விடுதலை பெறுவதில் இன்னும் வெற்றி காணவில்லை. விஞ்ஞானியென்று அழைக்கப்படுபவரிடம் அறிவாளியான ஒருவன் இதைப்பற்றிக் கேட்டால் பௌதிக விஞ்ஞானம் முன்னேற்றமடைந்து வருகிறதென்றும் காலாகாலத்தில் மனிதனை மரணம், மூப்பு ஆகியவற்றிலிருந்து விடுவிக்க முடியுமென்றும் சாமர்த்தியமாகப் பதில் சொல்வார். இத்தகைய பதில்கள் பௌதிக நிலையைப் பற்றி விஞ்ஞானிகள் முற்றிலும் அறியாமலிருப்பதையே சுட்டிக் காட்டுகின்றன. பௌதிக இயற்கையிலுள்ள எல்லாம் கடுமையான நியதிகளுக்கு உட்பட்டிருக்கின்றன. தோற்றம், வளர்ச்சி, பரா

மரிப்பு, மாற்றம், இழிவு, இறுதியாக மறைவு (அதாவது மரணம்) ஆகிய ஆறு நிலைகளை இவை கடந்தாக வேண்டும். பௌதிக இயற்கையோடு தொடர்பு கொண்டுள்ள எதுவும் இந்த ஆறு விதிகளுக்குப் புறம்பானதல்ல. எனவே, எவரும் தேவர்கள், மனிதன், விலங்கு, மரம் எதுவானாலும் - நித்யமாகப் பௌதிகவுலகில் தங்குவதென்பது சாத்தியமில்லை.

ஆயுட்காலம் இனத்திற்கு இனம் மாறுபடலாம். பௌதிகப் பிரபஞ்சத்தின் முக்கிய உயிர்வாழியான பிரம்ம தேவன் கோடிக் கணக்கான ஆண்டுகள் உயிர் வாழ்கிறார்; ஆனால் நுண்ணிய கிருமிகள் சில மணி நேரங்கள் மட்டுமே உயிருடனிருக்கின்றன. அது ஒரு பொருட்டல்ல. பௌதிகவுலகில் யாரும் நிரந்தரமாக வாழ முடியாது என்பது கவனிக்கத்தக்கது. பொருட்கள் சில நிபந்தனைகளுக்குட்பட்டுப் பிறக்கின்றன அல்லது சிருஷ்டிக்கப்படுகின்றன. அவை தொடர்ந்து உயிர் வாழும்போது, வளர்ந்து, பெருகி, படிப்படியாகக் குறைந்து, முடிவில் மறைந்து போகின்றன. இந்த விதிகளின்படி, வெவ்வேறு பிரபஞ்சங்களிலுள்ள கோடிக்கணக்கான பிரம்மாக்களுங்கூட இன்றோ, நாளையோ மரணத்திற்குட்படவேண்டியவர்களே. எனவேதான் பௌதிகப் பிரபஞ்சம் முழுவதும் மிருத்யுலோகம் எனப் பெயர் பெற்றுள்ளது.

பௌதிக விஞ்ஞானிகளும் அரசியல்வாதிகளும் இவ்வுலகை மரணமற்றதாகச் செய்துவிடலாமென்று முயற்சிக்கிறார்கள். ஏனெனில், மரணமற்ற ஆன்மீக இயற்கையைப் பற்றி அவர்கள் அறிந்திருக்கவில்லை. இதற்குக் காரணம் அவர்கள் பௌதிக நிலையைக் கடந்த அனுபவங்களைப் பற்றிய தகவல்கள் நிறைந்த இலக்கியங்களைப் பற்றி அறியார்கள். துர்திர்ஷ்டவசமாக இன்றைய நாகரிக மனிதன் வேதங்கள், புராணங்கள் மற்றும் இதர நூல்களிலிருந்து அறிவு பெறுவதை வெறுக்கிறான்.

முழுமுதற்கடவுளான மகாவிஷ்ணு "பரா" (உன்னதமானது) மற்றும் "அபரா" அதாவது "அவித்யா" (கீழ்நிலையிலானது) என்ற பிரிவுகளிலடங்கும் பல்விதமான ஆற்றல்களைக் கொண்டிருக்கிறாரென்று விஷ்ணுபுராணம் நமக்குத் தெரிவிக்கிறது (வி.பு. 6.7.61). ஜடவுலகில் தற்போது நாம் சிக்கிக் கொண்டிருப்பது "அவித்யை" எனும் கீழ்நிலை சக்தியில். பௌதிகப் படைப்பு சாத்தியமாவது இந்த சக்தியால்தான். இதைத் தவிர, "பராசக்தி" எனும் மேலானதொரு சக்தி உள்ளது. இது முற்கூறிய கீழ்நிலை சக்தியிலிருந்து வேறானது. இறைவனின் நித்யமான, அதாவது மரணமற்ற, சிருஷ்டிகள் இந்த மேலான சக்தியின்பாற்பட்டவை.

சூரியன், சந்திரன், சுக்கிரன் உட்பட மேல், நடு, கீழ் ஆகிய நிலைகளிலுள்ள பௌதிக கிரகங்களெல்லாம் பிரபஞ்சம் முழுவதும் பரவிக் கிடக்கின்றன. இந்த கிரகங்களெல்லாம் பிரம்மனின் ஆயுட்காலம் வரையிலேயே நிலைத்திருக்கின்றன. சில கீழ்நிலை கிரகங்கள்

ஒரு பிரம்ம நாளுக்குப் பின் அழிக்கப்பட்டு மறு நாள் மீண்டும் தோற்றுவிக்கப்படுகின்றன. உயர் கிரகங்களில் காலம் வேறு விதமாகக் கணிக்கப்படுகிறது. நமது பூமியின் கணக்குப்படியான ஒரு ஆண்டு பல உயர் கிரகங்களில் நம் 24 மணி நேரத்திற்கு, அதாவது ஒரு பகல், ஒரு இரவுக்குச் சமமானது. நம் பூமியின் நான்கு யுகங்களான சத்ய, த்ரேத, த்வாபர, கலி ஆகிய யுகங்கள் உயர் கிரகங்களின் காலக்கணக்குப்படி 12,000 ஆண்டுகள் வரை நீடித்திருக்கின்றன. இந்தக் கால அளவை ஆயிரத்தால் பெருக்கும்போது வரும் எண் பிரம்மனின் ஒரு பகலைக் குறிக்கும். பிரம்மனின் ஒரு இரவும் இதே கால அளவிலானது. இத்தகைய பகல்களும், இரவுகளும் சேர்ந்து மாதங்கள், வருடங்கள் என்று கணக்கிடப்பட்டால் அப்படிப்பட்ட நூறு ஆண்டுகள் பிரம்மனின் ஆயுட்காலமாகும். பிரம்மனின் ஆயுட்காலத்திற்குப் பிறகு பிரபஞ்சத் தோற்றம் முழுமையும் அழிக்கப்பட்டுவிடுகிறது.

சூரியனிலும் சந்திரனிலும் வாழும் உயிரினங்களும் இந்த பூமியும் அதற்குக் கீழுள்ள பல கிரகங்களும் உள்ளடங்கிய மர்த்ய லோகத்தில் வாழும் எல்லா ஜீவ ராசிகளும் பிரம்ம இரவு நேரத்தில் ஜலப்பிரளயத்தில் மூழ்கிக் கிடக்கின்றன. இந்த நேரத்தில் எந்த உயிரினமோ, வேறு ராசிகளோ, ஆன்மீகமாக அவை தொடர்ந்து நிலைபெற்றிருப்பவையானாலும், வெளித்தோன்றுவதில்லை. இந்தத் தோன்றாத நிலை அவ்யக்தமெனப்படுகிறது. மீண்டும், பிரம்மனின் ஆயுட்காலத்தின் முடிவில் பிரபஞ்சம் முழுவதும் அழிக்கப்படும் போது, மற்றுமொரு அவ்யக்த நிலை ஏற்படுகிறது. ஆனால், இந்த இரண்டு அவ்யக்த நிலைகளுக்குமிடையில் ஒரு ஆன்மீகச் சூழல் நிலவுகிறது. இதை ஆன்மீக இயற்கையென்றும் கூறலாம். இந்தச் சூழலில் பெரும் எண்ணிக்கையிலான ஆன்மீகக் கிரகங்கள் உள்ளன; இவை நித்யமாக நிலைத்திருக்கின்றன. பௌதிகப் பிரபஞ்சங்களெல்லாம் அழிக்கப்பட்ட பின்பும் இந்த ஆன்மீக கிரகங்கள் நிலைத்திருக்கின்றன. பல்வேறு பிரம்மாக்களின் அதிகார வரம்பிற்குட்பட்ட பிரபஞ்சங்களின் தோற்றமெல்லாம் இறைவனான பிரபுவின் சக்தியின் நான்கில் ஒரு பங்கின் காட்சியே. பிரம்மனின் வரம்பிற்கப்பால் ஆன்மீக இயற்கை உள்ளது. இது "த்ரி-பாத-விபூதி", அதாவது பிரபுவின் முக்கால் பங்கு சக்தியாகும். இதுவே "பராப்ரக்ருதி" எனப்படும் உன்னதமான சக்தி.

ஆன்மீக இயற்கையில் உறையும் பிரதானமான பரமபுருஷன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஆவார். பகவத்கீதையில் (பகீ. 8.22) உறுதிப்படுத்தப்பட்டுள்ளதுபோல் நிர்மலமான பக்தித் தொண்டின் மூலமே அவரை அணுக முடியும். ஞானம், யோகம், கர்மம் ஆகிய எந்த முறையாலும் அல்ல. பலனை எதிர்பார்த்துத் தொண்டு செய்யும் "கர்மிகள்" எனப்படுபவர்கள் சூரியன், சந்திரன் உட்பட்ட சுவர்க்கலோகம் வரைத் தம்மை உயர்த்திக் கொள்ள முடியும்.

ஞானிகளும் யோகிகளும் பிரம்மலோகம் போன்ற மேலுமுயர்ந்த கிரகங்களுக்குச் செல்ல முடியும். பக்தித் தொண்டின் மூலம் அவர்கள் மேலும் தகுதிகளைப் பெறுகையில் ஒளிதரும் ஆன்மீக ஆகாயமான பிரம்மனையோ, வைகுண்ட கிரகங்களையோ, தம் தகுதிக்கேற்ப சென்றடைவார்கள். பக்தித் தொண்டில் பயிற்சி பெறாத எவரும் ஆன்மீகமான வைகுண்ட கிரகங்களில் பிரவேசிக்க இயலாதென்பது திண்ணம்.

பௌதிக கிரகங்களில் எறும்பு முதல் பிரம்மா வரை எல்லாரும் பௌதிக இயற்கையின் மேல் ஆட்சி செலுத்த முயற்சிக்கிறார்கள்; இது ஜட வாழ்வைப் பீடித்துள்ள நோய். இந்த ஜட நோய் நீடிக்கும்வரை உயிர்வாழி உடல் மாறுதல்களைச் சந்திக்க நேரிடுகிறது. அவன் மனித உருவிலோ, தேவனாகவோ, விலங்காகவோ தோன்றினாலும் இறுதியில் இரண்டு பிரளயங்களின்போதும் (பிரம்ம இரவின் பிரளயம் மற்றும் பிரம்மனின் வாழ்வின் இறுதியில் ஏற்படும் பிரளயம்) அவ்யக்த நிலையை அனுபவிக்க நேரிடுகிறது. பிறப்பு, இறப்பு எனும் சுழலையும் அதோடு தொடர்பு கொண்ட மூப்பு, பிணி ஆகியவற்றையும் முடிவுக்குக் கொண்டுவர வேண்டுமானால், ஆன்மீகக் கிரகங்களைச் சென்றடைய நாம் முயற்சிக்க வேண்டும். கிருஷ்ண பரமாத்மா தமது முழுமையான வியாபகத்தில் இந்த கிரகங்கள் ஒவ்வொன்றிலும் ஆதிக்கம் செலுத்துகிறார்.

கிருஷ்ணரின் மீது ஆதிக்கம் செலுத்த யாராலும் இயலாது. கட்டுப்பட்ட ஆத்மாதான் பௌதிக இயற்கையின் மேல் ஆதிக்கம் செய்ய முயன்று, இயற்கையின் நியதிகளுக்குள்ளாகி, பிறப்பு, இறப்பு எனும் துயரங்களை அனுபவிக்கிறது. ஆத்திகத்தின் கோட்பாடுகளை மீண்டும் நிலைநாட்டுவதற்காக பகவான் இவ்வுலகிற்கு வருகிறார். அவரிடம் சரணடையும் மனப்பாங்கை வளர்ப்பதுவே அடிப்படைத் தத்துவமாகும். பகவத்கீதையில் பகவான் வழங்கும் இறுதி உபதேசம் இதுவேயாகும் (பகீ. 18.66). ஆனால் இந்தத் தலையாய படிப்பினைக்கு மூட மனிதர்கள் சாமர்த்தியமாகத் தப்பர்த்தம் செய்து, மக்கள் கூட்டத்தைப் பல வகையாகத் திசை திருப்பி விடுகிறார்கள். மருத்துவமனைகள் திறக்கும்படி அவர்கள் மக்களை ஊக்குவிக்கிறார்கள். ஆனால் பக்தித் தொண்டு செய்து ஆன்மீக ராஜ்யத்தை அடையும் வழியைக் கற்றுக்கொள்ளும்படி வற்புறுத்தவில்லை. தாற்காலிக நிவாரணங்கள் வழங்கும் பணி மக்களுக்குக் கற்பிக்கப்பட்டது; ஆனால் அவற்றால் உயிர்வாழி நிரந்தரமான மகிழ்ச்சியை ஒருபோதும் பெறவியலாது. இயற்கையின் கோரமான சக்திகளைச் சமாளிப்பதற்கென பல பொதுஜன நிறுவனங்களும் அரசு சார்புடைய ஸ்தாபனங்களும் துவக்கப்படுகின்றன. ஆனால் இயற்கையின் வெற்றிகாண முடியாத சீற்றங்களை எப்படி சாந்தப்படுத்துவதென்பதை அவர்கள் அறிந்திருக்கவில்லை. பகவத்கீதையைக் கற்றறிந்த மகாபண்டிதர்களெனப் பலர் விளம்பரப்படுத்தப்

படுகிறார்கள். ஆனால் அவர்கள் பௌதிக இயற்கையை சமாதானப் படுத்த கீதை கற்றுத் தரும் வழிமுறையை மறந்துவிடுகிறார்கள். பலம் பொருந்திய இயற்கையை சாந்தப்படுத்துவதற்கான ஒரே வழி மனிதர்கள் தம்மில் இறையுணர்வை வளர்த்துக்கொள்வதே யென்று பகவத்கீதையில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது (பகீ. 7.14).

ஒருவர் "ஸம்பூதி" (பரம்பொருளான இறைவன்) மற்றும் "விநாச" (தாற்காலிகமான பௌதிக வெளிப்பாடு) ஆகிய இரண்டையும் ஒருங்கே குற்றமின்றி அறிதல் வேண்டுமென்று இந்த மந்திரத்தில் ஈசோபநிஷத் உபதேசிக்கிறது. தாற்காலிகமான பௌதிகத் தோற்றத்தை அறிவதால் மட்டும் ஒருவர் எதையும் காப்பாற்ற முடியாது. ஏனென்றால் இயற்கையின் போக்கில் ஒவ்வொரு கணமும் அழிவும் இணைந்துள்ளது. மருத்துவமனைகள் திறப்பதன் மூலம் இந்த அழிவுகளைத் தவிர்க்க முடியாது. நிரந்தர மான ஆனந்தமும் உணர்வும் உள்ள வாழ்வு பற்றிய முழுமையான அறிவு பெற்றவர்களே இவ்விபத்துக்களினின்று தப்ப முடியும். நித்யமான வாழ்வு பெறும் கல்வியை வழங்குவதே வேதங்கள் வகுத்துள்ள முறைகளின் முழு நோக்கமாகும். புலன் திருப்திக்கெனத் தாற்காலிகமாக ஏற்பட்டுள்ள வசீகரமான திட்டங்களால் மக்கள் திசை திருப்பப்படுகிறார்கள்; ஆனால் புலன்களைச் சார்ந்தனவற்றிற்குத் தொண்டு செய்வது தவறான வழியில் சென்று அவமானப்படுவதாகும்.

எனவே நாம் நமது சக மனிதர்களைக் காப்பாற்ற சரியான வழிமுறைகளைக் கையாள வேண்டும். உண்மை நம் விருப்பத்திற்கு உகந்ததா இல்லையா என்ற கேள்விக்கு இடமளிப்பதற்கில்லை. உண்மையை மறுப்பதற்கில்லை. மீண்டும் மீண்டும் பிறந்து இறப்பதிலிருந்து தப்ப வேண்டுமானால் நாம் பகவானுக்குத் தொண்டாற்றுவதை மேற்கொண்டாகவேண்டும். இதில் சரிகட்டுவதற்கு வாய்ப்பில்லை. ஏனெனில் இது அத்யாவசியமானதொன்று.

# பதினைந்தாவது மந்திரம்

ஹிரண்மயேன பாத்ரேண
ஸத்யஸ்யாபிஹிதம் முகம்
தத் த்வம் பூஷன் அபாவ்ருணு
ஸத்ய தர்மாய த்ருஷ்டயே

ஹிரண்யமயேன - தங்கமயமான; பாத்ரேண - பாத்திரத்தால்; ஸத்யஸ்ய - சத்தியத்தின்; அபிஹிதம் - மூடப்பட்டிருக்கிறது; முகம் - முகம்; தத் - அதை; த்வம் - தாங்கள்; பூஷன் - நிலைபெறச் செய்பவரே; அபாவ்ருணு - தயவுசெய்து விலக்குங்கள்; ஸத்ய - புனிதமான; தர்மாய - பக்தனுக்கு; த்ருஷ்டயே - பார்ப்பதற்கு.

## மொழி பெயர்ப்பு

எல்லா உயிரினங்களையும் நிலைபெறச் செய்பவரே, உமது முகம் உமது கண்கவர் ஒளியால் மூடப்பட்டிருக்கிறது. அந்த மூடியை விலக்கி உமது புனிதமான பக்தனுக்கு உம்மைக் காண்பிப்பீராக.

## பொருளுரை

பகவத்கீதையில் பகவான் தமது பிரம்ம ஜோதியை, தமது ஜோதிமயமான வடிவை இவ்வாறு விவரிக்கிறார்:

"ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம்
அம்ருதஸ்யாவ்யயஸ்ய ச
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய
ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச"

(பகீ. 14.27)

"இறுதி சுகத்தின் ஆதார நிலையானதும், மரணமற்றதும், அழிவற்றதும், நித்யமானதுமான அருவ பிரம்மத்தின் அடிப்படை நானே." பிரம்மன், பரமாத்மா, பகவான் ஆகிய மூன்றும் ஒரே பூரண சத்தியத்தின் அம்சங்களாகும். ஆரம்ப நிலையிலுள்ள பக்தன் பிரம்மனை மிக எளிதில் கண்டுகொள்கிறான். மேலும் முன்னேற்றமடைந்தவன் பரமாத்மா எனும் மேலான ஆத்மாவை உணர்ந்தறிகிறான். பகவானை அறிவதென்பது பூரண சத்தியத்தை இறுதியாக அறிந்துணரும் நிலை. இதை பகவத்கீதையில் உறுதிப்படுத்துகையில், ஸ்ரீ கிருஷ்ணர் தாமே பூரண சத்தியத்தின் இறுதித் தத்துவம், பிரம்ம ஜோதியின் தோற்றுவாய் மற்றும் எங்கும் நிறைந்த பரமாத்மா என்கிறார். பூரண சத்தியத்தின் அருவதத்துவமான

பிரம்ம ஜோதியின் அறுதியான இருப்பிடம் தாமேயென்றும், தமது வரம்பற்ற வல்லமைகளுக்கு விளக்கம் சொல்லத் தேவையில்லை யென்றும் பகவத்கீதையில் கிருஷ்ணர் கூறுகிறார்:

"அதவா பஹுனைதேன
கிம் ஞானதேன தவார்ஜுன
விஷ்டப்யாஹம் இதம் க்ருத்ஸ்னம்
ஏகாம்'சேன ஸ்திதோ ஜகத்"

(பகீ. 10.42)

"அர்ஜுனா, இந்த விவரமான விளக்கங்களின் தேவை என்ன இருக்கிறது? என்னுடைய ஒரு சிறு பின்னப் பகுதியால் இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் புகுந்து நான் தாங்குகிறேன்." இவ்வாறாக, எங்கும் நிறைந்த பரமாத்மா எனும் தனது முழுமையான வியாபகத்தால் பகவான் தம் சிருஷ்டியான பௌதிகப் பிரபஞ்சம் முழுவதையும் பரிபாலிக்கிறார். ஆன்மீக உலகிலுள்ள எல்லா தோற்றங்களையுங்கூட அவரே பரிபாலிக்கிறார். எனவே ஸ்ரீ ஈசோபநிஷத்தில் பகவான் "பூஷன்" அதாவது பரிபாலிப்பவர் என்று அழைக்கப்படுகிறார்.

புருஷோத்தமனான ஸ்ரீ கிருஷ்ணர் எப்போதும் பரமானந்த நிலையிலிருக்கிறா. (ஆனந்தமயோ'ப்யாஸாத்). இந்தியாவிலுள்ள விருந்தாவனத்தில் 5,000 ஆண்டுகட்கு முன்பு அவர் வசித்தபோது தம் குழந்தைப் பருவ லீலைகளிலிருந்து தொடங்கி எப்போதும் பரமானந்த நிலையிலேயே விளங்கினார். அகா, பகா, பூதனா, ப்ரலம்ப போன்ற அரக்கர்களைக் கொன்றதெல்லாம் அவருக்கு உல்லாச விளையாட்டுக்களே. விருந்தாவனமெனும் கிராமத்தில் அவர் தன் தாயார், சகோதரன், நண்பர்கள் ஆகியோரோடு கூடி மகிழ்ந்தார்; வெண்ணெய் திருடிய கள்வனாக விளையாடியபோது அவருடைய திருட்டினால் தம் நண்பர்களையெல்லாம் சுவர்கானுபவம் பெறச் செய்தார். வெண்ணெய்த் திருடனாக அவர் புகழ் பெற்றது கண்டனத்திற்குரியதல்ல; ஏனெனில் வெண்ணெய்த் திருடியதன் மூலம் பிரபு தம் புனிதமான பக்தர்களுக்கு மகிழ்ச்சியைத் தந்தார். பிரபுவின் பிருந்தாவன லீலைகளெல்லாம் அவருடைய சகாக்களின் திருப்திக்காக நிகழ்ந்தவை. ஹட யோகத்தின் மூலம் பூரண சத்தியத்தைக் காண அங்கு முயன்றுகொண்டிருந்தவர்களான வரட்டு ஹேஷ்யவாதிகளையும் உடல் வித்தைக்காரர்களையும் கவர்வதற்கென அவர் அந்த லீலைகளில் ஈடுபட்டார்.

பிரபுவும் அவரது விளையாட்டுத் தோழர்களான கோபாலர்களும் நிகழ்த்திய பால்ய விளையாட்டுக்களைப் பற்றி ஸுகதேவ கோஸ்வாமி ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்வதாவது:

"இத்தம் ஸதாம் ப்ரஹ்மஸுகானுபூத்யா
தாஸ்யம் கதானும் பரதைவதேன
மாயாச்ரிதானும் நரதாரகேன
ஸாகம் விஜஹ்ர: க்ருத-புண்ய-புஞ்ஜா:

"அருவமான ஆனந்தமய பிரம்மனெனக் கருதப்படுபவரும், பக்தர்களால் உன்னதமான பிரபுவெனப் பூஜிக்கப்படுபவரும், கீழ் நிலையிலுள்ளவர்களால் சாதாரணமான மனிதனென எண்ணப்படுபவருமான முழுமுதற்கடவுள், பல நற்செயல்களால் உயர்நிலையை அடைந்திருந்த கோபாலர்களோடு விளையாடினார்." (பாக. 10.12. 11).

இப்படியாக, பிரபு தம்மோடு "ச'ாந்த" (நடுநிலை), "தாஸ்ய" (சேவகம்), "ஸக்ய" (நட்பு), "வாத்ஸல்ய" (பெற்றோர் அன்பு), "மாதுர்ய" (காதல்) ஆகிய பல்வகையான உறவுகளைக் கொண்டுள்ள ஆன்மீக சகாக்களோடு எப்போதும் திவ்யமான அன்பு நிறைந்த செயல்களில் ஈடுபட்டிருக்கிறார்.

விருந்தாவன தாமத்தை விட்டு பிரபு ஒருபோதும் அகல்வதில்லையென்று சொல்லப்படுவதால், அவர் சிருஷ்டியை மேற்கொள்வது எப்படி சாத்தியமாகிறது என்று கேட்கலாம். இதற்கு பகவத் கீதையில் விடை கூறப்பட்டுள்ளது (பகீ. 13.14): "புருஷன்" எனப்படும் தம் முழுமையான அம்சத்தில் பகவான் பௌதிகப் பிரபஞ்சம் முழுவதிலும் வியாபித்திருக்கிறார். பௌதிகப் பிரபஞ்சத்தின் சிருஷ்டி, பராமரிப்பு, சம்ஹாரம் ஆகிய செயல்களில் பகவானுக்கு நேரடியான ஈடுபாடு எதுவும் இல்லாவிடினும் அவர் தனது முழு வியாபகமான பரமாத்மாவால் இவற்றைச் செய்விக்கிறார். ஒவ்வொரு உயிர்வாழியும் ஆத்மா எனப்படுகிறான். எல்லா ஆத்மாக்களையும் ஆளும் பிரதம ஆத்மாவான "பரமாத்மா" எனப்படுகிறார்.

இறையுணர்வு பெறுவதற்கான இம்முறை மாபெரும் விஞ்ஞானமாகும். பௌதிகவாதிகள் செய்யக்கூடியதெல்லாம் பௌதிக சிருஷ்டியின் இருபத்து நான்கு அம்சங்களைப் பற்றி எண்ணிப் பார்த்து ஆராய்வது மட்டுமே. ஏனெனில், "புருஷனைப் பற்றிய எவ்விதமான தகவலையும் அவர்கள் பெற்றிருக்கவில்லை. அருவவாத ஞானிகள் பிரம்ம ஜோதியின் கண்ணைக் கூச வைக்கும் பிரகாசத்தைக் கண்டு திகைத்துப் போகிறார்கள். பூரண உண்மையை முழுவதுமாகக் காண விரும்புபவன் இருபத்து நான்கு பௌதிக வஸ்துக்கள் மற்றும் கண் கூசும் ஒளி ஆகியவற்றை ஊடுருவி அதற்கும் அப்பால் செல்ல வேண்டும். ஒளிமிக்க "ஹிரண்யபாத்ரம்" எனும் மூடியை விலக்கும்படி பகவானைப் பிரார்த்திக்க வேண்டும் என்று ஈசோபநிஷத் நமக்கு குறிப்பிட்டுக் காட்டுகிறது. இந்த மூடி விலகி, முழுமுதற்கடவுளைக் கண்டாலன்றி பூரண சத்தியத்தை உண்மையாக உணர்ந்தறிவது ஒருபோதும் சாத்தியமில்லை.

முழுமுதற் கடவுளின் பரமாத்மா அம்சம் அவரது மூன்று முதன்மையான வியாபகங்களில் ஒன்றாகும். இவை மூன்றும் ஒட்டுமொத்தமாக "விஷ்ணு தத்வம்" எனப்படும் பிரபஞ்சத்தில் வியாபித்துள்ள விஷ்ணு தத்வம் "க்ஷீரோதகசாயீ விஷ்ணு"வாகும். ஒவ்வொரு உயிர்வாழியிலுமுள்ள எங்கும் நிறை பரமாத்மா அவரே. "கர்போதகசாயீ விஷ்ணு" எல்லா உயிர்வாழிகளிலுமுள்ள ஒட்டுமொத்தமான உயராத்மா ஆவார். அவர் எல்லாப் பிரபஞ்சங்களையும் படைக்கிறவர். பிரபஞ்ச சிருஷ்டியின் 24 தத்துவங்களையும் கடந்தபின் விஷ்ணு தத்துவங்களை எதிர்நோக்குவதற்கான வழிகளை அக்கறையுள்ள சிஷ்யர்களுக்கு யோக முறை கற்பிக்கிறது. அனுபவங்களின் அடிப்படையில் அமைந்த தத்துவ முறை அருவமானதும் ஸ்ரீ கிருஷ்ணரின் சரீரத்திலிருந்து வெளிப்படுவதுமான பிரம்ம ஜோதியை அறிய உதவுகிறது. இது பகவத்கீதையிலும் (பகீ. 14.27) பிரஹ்ம ஸம்ஹிதையிலும் உறுதி செய்யப்பட்டுள்ளது.

"யஸ்ய ப்ரபா ப்ரபவதோ ஜகத்-அண்ட கோடி
கோடிஷ்வசேஷ-வஸுதாதி விபூதி பின்னம்
தத்-ப்ரஹ்ம நிஷ்கலம் அனந்தம் அசேஷ-பூதம்
கோவிந்தம் ஆதிபுருஷம் தம் அஹம் பஜாமி"

"கோடானுகோடி பிரபஞ்சங்களில் எண்ணற்ற கிரகங்கள் உள்ளன. அவை பிரபஞ்ச அமைப்பில் ஒவ்வொன்றும் மற்றவையினின்று வேறுபட்டு விளங்குகின்றன. இக் கிரகங்களெல்லாம் பிரம்ம ஜோதியின் ஒரு மூலையில் உள்ளன. இந்த பிரம்ம ஜோதி நான் வணங்கும் முழுமுதற் கடவுளின் கதிர்களே." பிரம்ஹஸம்ஹிதையின் இம் மந்திரம் பூரண சத்தியத்தை உணர்ந்த நிலையிலிருந்து உரைக்கப் படுகிறது. ஸ்ரீ ஈசோபநிஷத்தின் சுருதி மந்திரமும் இம் மந்திரத்தை ஆத்ம ஞானம் பெறுவதற்கான வழியென்று உறுதிப்படுத்துகிறது. பகவான் தமது பிரம்ம ஜோதியெனும் திரையை விலக்கித் தம் திருமுகத்தைக் காட்ட வேண்டுமெனப் பிரார்த்திப்பதற்குகந்த எளிய மந்திரம் இது.

பிரம்மனின் அடிவேர் கிருஷ்ணரென்பதை அறிவது பக்குவமான அறிவாகும். பிரம்மனின் அடிவேர் ஸ்ரீ கிருஷ்ணர். ஸ்ரீமத் பாகவதம் போன்ற வேத இலக்கியங்களில் கிருஷ்ண விஞ்ஞானம் குறைவற விவரிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீமத் பாகவதத்தில் அதன் ஆசிரியரான ஸ்ரீல வியாஸ தேவர், உன்னத உண்மையானது பிரம்மன், பரமாத்மா அல்லது பகவான் என்று அவரவரின் இறைஞான நிலையைப் பொறுத்து வர்ணிக்கப்படுகிறதென்று நிரூபிக்கிறார். சாதாரண ஜீவனான உயிர்வாழியே உன்னத சத்யமென்று ஸ்ரீல வியாஸ தேவர் ஒருபோதும் கூறியதில்லை. உயிர்வாழியை எல்லாம் வல்ல உன்னத உண்மையென்று ஒருபோதும் கருதுவதற்கில்லை. அவன் அப்படிப்

பட்டவனுனல், இறைவன் தம் ஒளிமயமான திரையை விலக்கி உண்மை உருவில் தரிசனம் தரவேண்டுமென்று அவரிடம் பிரார்த்திக்கும் அவசியம் அவனுக்கிருக்காது.

எனவே, உன்னத சத்தியத்தின் ஆன்மீகமான வெளிப்பாடுகள் உணரப்படாதவரை அருவ பிரம்மம் மட்டும் உணரப்படுகிறது என்பது முடிவு. அவ்வாறே, பிரபுவின் ஆன்மீக வல்லமைகளைப் பற்றி உணராத காரணத்தால் அவரின் பௌதிக வல்லமைகளை மட்டும் ஒருவர் உணர்ந்தறியும்போது அவர் பரமாத்மாவை உணர்ந்தவராகிறார். இவ்வாருக, பிரம்ம ஞானமும், பரமாத்ம ஞானமும், இரண்டுமே பூரண சத்தியத்தைப் பகுதியளவில் உணர்ந்தறிந்த நிலைகள். ஆனால், முழுமுதற்கடவுளான ஸ்ரீ கிருஷ்ணரை ஹிரண்மயபாத்திரமான திரை விலகிய பிறகு அவரின் முழு வல்லமையில் அறிபவன், "வாஸுதேவ:ஸர்வம் இதி": வாஸுதேவன் எனப்படும் ஸ்ரீ கிருஷ்ணரே பிரம்மன், பரமாத்மா, பகவான் ஆகிய எல்லாமாவான் என்பதை உணர்கிறன். அவரே பகவான், எல்லாவற்றிற்கும் அடிவேர்; பிரம்மனும், பரமாத்மாவும் அவரின் கிளைகள்.

பகவத்கீதையில், அருவப் பிரம்மத்தை வணங்குபவர்கள் (ஞானிகள்), பரமாத்மாவாகிய அம்சத்தை வழிபடுபவர்கள் (யோகிகள்), ஸ்ரீ கிருஷ்ணரின் தொண்டர்கள் (பக்தர்கள்) ஆகிய மூன்று வகையினரைப் பற்றிய ஒப்பீட்டு ஆய்வு காணக்கிடைக்கிறது. பகவத்கீதையில் (பகீ. 6.46-47) எல்லா வகையான பரம ஞானிகளிலும் வேத ஞானத்தைப் பெற்றிருப்பவனே உயர்ந்தவனென்று கூறப்பட்டுள்ளது. எனினும், ஞானிகளையும், பலன் கருதிய தொண்டர்களையும் விட யோகிகள் மேலும் யோகிகளெல்லாம் தன் முழு சக்தியோடு சதா காலமும் பிரபுவுக்குத் தொண்டு செய்பவன் தலை சிறந்தவன். சுருக்கமாகச் சொன்னுல், உழைப்பாளியைவிட தத்வ ஞானி மேலானவர். யோகி தத்வ ஞானியை விடச் சிறந்தவர். பக்தி யோகத்தை மேற்கொண்டு சதாசர்வ காலமும் இறை பணியில் ஈடுபட்டிருப்பவர் யோகிகளெல்லாரிலும் மிக உன்னதமானவர். இந்தப் பக்குவமான உயர் நிலைக்கு ஈசோபநிஷத் நம்மை வழிபடுத்துகிறது.

# பதினாறுவது மந்திரம்

பூஷன் ஏகர்ஷே யம ஸூர்ய ப்ரஜாபத்ய
வ்யூஹ ரச்மீன் ஸமூஹ தேஜோ
யத் தே ரூபம் கல்யாணதமம் தத் தே பச்யாமி
யோ'ஸாவஸௌ புருஷ: ஸோ'ஹம் அஸ்மி

பூஷன் - நிலைபெறச் செய்பவரே; ஏகர்ஷே - ஸர்வக்ஞரே; யமா - நியமங்களுக்கு அதிபதியே; ஸூர்ய - பெரும் பக்தர்களான ஸூரிகளின் இலக்கே; ப்ரஜாபத்ய - மனித இனத்தின் பிதாக்களான ப்ரஜாபதிகளின் நலன்களைப் பரிபாலிப்பவரே; வ்யூஹ - தயவுசெய்து அகற்றுவீராக; ரச்மீன் - கிரணங்களை; ஸமூஹ - தயவு செய்து அகற்றுவீராக; தேஜ: - பிரகாசத்தை; யத் - அதற்காக; தே - தங்கள்; ரூபம் - ரூபம்; கல்யாணதமம் - மிக்க மங்களகரமான; தத் - அதை; பச்யாமி - நான் பார்க்க; ய: - இருப்பவர்; அஸௌ - ஸூரியனைப் போன்று; புருஷ: - புருஷனான கடவுள்; ஸ: - அவர்; அஹம் - நானாக; அஸ்மி - இருக்கிறேன்.

## மொழி பெயர்ப்பு

என் பிரபுவே, ஸர்வக்ஞரே, பிரபஞ்சத்தை நிலைபெறச் செய்பவரே, நியமங்களுக்கு அதிபதியே, தூய்மையான பக்தர்களின் இலக்கே, மனித இனத்தின் பிதாக்களான பிரஜாபதிகளைப் பரிபாலிப்பவரே, நான் உம்து ஆனந்தமய சரீரத்தைப் பார்க்கும்படியாக உமது ஒளிமிக்க திவ்ய கிரணங்களை அகற்றுவீராக. நீரே சூரியனுக்கும் எனக்குமான நித்ய புருஷனான முழுமுதற் கடவுள்.

## பொருளுரை

சூரியனும் அதன் கிரணங்களும் தன்மையளவில் ஒன்றே. அதுபோலவே, பிரபுவும் உயிர்வாழிகளும் தன்மையளவில் ஒன்றே. இருப்பது ஒரே சூரியனே, ஆனால் சூரிய கிரணங்களின் மூலக்கூறுகள் எண்ணற்றவை. சூரிய கிரணங்கள் சூரியனின் பகுதியாகும்; கிரணங்களும், சூரியனும் சேர்ந்து முழுமையான சூரியனாகும். சூரியனுக்குள் சூரிய பகவான் உறைகிறார். அவ்வாறே, பிரம்ம ஜோதியை வெளிப்படுத்தும் கோலோக விருந்தாவனமெனும் உன்னதமான ஆன்மீக கிரகத்தினுள் நித்யமான பிரபு வசிக்கிறார். இதை பிரஹ்மஸம்ஹிதை இவ்வாறு கூறுகிறது:

"சிந்தாமணி-ப்ரகர-ஸத்மஸு கல்பவ்ருக்ஷ
லக்ஷாவ்ருதேஷு ஸுரபீர் அபிபாலயந்தம்
லக்ஷ்மீ-ஸஹஸ்ர-சத ஸம்ப்ரம ஸேவ்யமானம்
கோவிந்தம் ஆதி-புருஷம் தம் அஹம் பஜாமி."

"ஆதி புருஷனை கோவிந்தன், ஆதி பிதா், பசுக்களைப் பரிபாலிப்ப வன், விருப்பங்களையெல்லாம் பூர்த்தி செய்பவன் வசிக்குமிடம் தெய்வீகமான ரத்தினங்களால் கட்டப்பட்டது. விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் லட்சோபலட்சம் கல்பவிருக்ஷங்களால் சூழப்பட்டது. ஆயிரக்கணக்கான லக்ஷ்மிகள் (அதாவது செல்வத்தின் அதிதேவ தைகள்) பக்தியோடும் அன்போடும் அங்கு அவருக்கு சேவை செய் கிறார்கள். அந்த கோவிந்தனை நான் வணங்குகிறேன்." (பிஸ. 5.29).

பிரஹ்ம ஜோதி பிரஹ்மஸம்ஹிதையிலும் வர்ணிக்கப்பட்டுள் ளது. சூரியனின் கிரணங்கள் சூரிய கோளத்திலிருந்து வெளிப் படுவதுபோல் கோலோக விருந்தாவனமெனும் ஆன்மீகக் கோளி லிருந்து வெளிப்படும் கிரணங்கள் பிரம்ம ஜோதியெனப்படுமென்று பிரஹ்மஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளது. பிரம்மஜோதியின் கண் கூசும் பிரகாசத்தைக் கடந்தாலன்றி பிரபுவின் வாசஸ்தலத்தைப் பற்றிய செய்தி கிட்டுவதில்லை. பிரம்ம ஜோதியின் ஜாஜ்வல்யமான பிரகாசத்தில் கண்கூசிப் போவதால் அருவவாத ஞானியால் பிரபு வின் உண்மையான இருப்பிடத்தையோ அவரின் திவ்யமான வடிவத்தையோ காண முடிவதில்லை. வரம்பிற்குட்பட்ட அறிவின் காரணமாக இத்தகைய அருவவாத சிந்தனையாளர்கள் கிருஷ்ண பரமாத்மாவின் ஆனந்தமயமான திவ்ய ரூபத்தை அறியமுடியாமல் இருக்கிறார்கள். எனவே, இந்த மந்திரத்தில், புனிதமான பக்தர்கள் இறைவனின் ஆனந்தமயமான திவ்ய ரூபத்தைக் காண்பதற்கு வசதியாக பிரம்மஜோதியின் ஒளிமிக்க கிரணங்களை அகற்றும்படி ஈசோபநிஷத் இறைவனிடம் வேண்டிக் கொள்கிறது.

அருவமான பிரம்மஜோதியை அறிவதன் மூலம் பரம்பொருளின் மங்களகரமான தன்மையை அனுபவிக்க முடிகிறது. பரம்பொருளின் எங்கும் நிலவும் அம்சமான பரமாத் மாவை உணர்வதால் மேலும் அதிகமான தெளிவு பிறக்கிறது. முழு முதற்கடவுளை நேருக்குநேர் சந்திக்கும்போது பக்தன் பரம்பொரு ளின் மிகச் சிறந்த மங்கள நிலையின் அனுபவத்தைப் பெறுகிறான். அவர் ஆதி ஞானி, பரிபாலிப்பவர், பிரபஞ்சத்தின் நன்மையைக் கருதுபவர் என்றழைக்கப்படுகிறார். உன்னத சத்தியத்தை அருவ மாகக் கருதுவதற்கில்லை. இதுவே ஸ்ரீ ஈசோபநிஷத்தின் தீர்ப்பு. "பூஷன்" எனும் சொல் கவனிக்கத்தக்கது. ஏனெனில், பிரபுவே எல்லாவற்றையும் நிலைபெறச் செய்கிறாரென்றாலும் சிறப்பாக அவர் தம் பக்தர்களைப் பரிபாலிக்கிறார். பிரம்ம ஜோதியைக் கடந்து பிரபு வின் வியக்தித்துவத்தையும் அவரது மங்களகரமான நித்ய ரூபத் தையும் தரிசித்தபின் பக்தன் பூரண சத்தியத்தை முழுமையாக உணர்கிறான்.

"பாகவத-ஸந்தர்ப"த்தில் ஸ்ரீல ஜீவ கோஸ்வாமி கூறுகிறார்: பூரண சத்தியத்தின் முழுமையான கோட்பாடு புருஷோத்தமனை

இறைவனில் உணரப்படுகிறது; ஏனெனில் அவர் எல்லாம் வல்லவர் உன்னதமான சக்திகள் மிகுந்தவர். பூரண சத்தியத்தின் முழு சக்தியும் பிரம்ம ஜோதியில் உணரப்படுவதில்லை; எனவே பிரம்ம ஜோதியை உணர்வதென்பது பரம புருஷனை ஓரளவு உணர்ந்த தேயாகும். கற்றறிந்த மகான்களே, 'பகவான்' என்ற சொல்லின் முதல் எழுத்து இருவகையில் பொருள் பொதிந்ததாகும்.: முதலில், 'முழுமையாகப் பரிபாலிப்பவன்' என்றும், இரண்டாவதாக, 'பாது காவலன்' என்ற பொருளிலும் கொள்ளப்படும். இரண்டாவது எழுத்து (க) வழிகாட்டி, தலைவன், சிருஷ்டிகர்த்தா என்று பொருள் படும். 'வா' எனும் எழுத்து எல்லா உயிரினமும் அவரில் வாழ்கிற தென்பதையும், அவர் எல்லாவற்றிலும் உறைகிறார் என்பதையும் குறிக்கும். வேறு வகையாகச் சொன்னால் 'பகவான்' எனும் பரமான ஒலி எவ்வித பௌதிக சம்பந்தமுமில்லாத நிலையிலான அளவற்ற ஞானம், வல்லமை, ஆற்றல், செல்வச் செழிப்பு, பலம், பிரபாவம் ஆகியவற்றை வர்ணிக்கிறது."

பிரபு தமது தூய பக்தர்களைப் பரிபாலித்து அவர்களைப் படிப் படியாகப் பக்தியில் முழுமை பெற வழிகாட்டுகிறார். அவர் பக்தர் களின் வழிகாட்டியாகையால் அவர்களின் பக்தித் தொண்டிற்கு வெகுமதியாக முடிவில் தம்மையே அவர்களுக்கு அளிக்கிறார். காரணங்களுக்கப்பாற்பட்ட தம் கருணையால் பிரபு தம் பக்தர் களுக்கு நேருக்கு நேர் காட்சியளிக்கிறார். இதன் மூலம் அவரின் பக்தர்கள் மிகவுயர்ந்த ஆன்மீக கிரகமான கோலோக விருந்தா வனத்தை அடைய முடிகிறது. அவரே சிருஷ்டி கர்த்தாவாகை யால் இறுதியில் தம்மை வந்தடைவதற்கான எல்லாத் தகுதிகளை யும் பக்தர்களுக்கு அவர் அளிக்க முடியும். பிரபு எல்லாக் காரணங் களுக்கும் காரணமானவர். அவருக்குக் காரணமானது எதுவுமில் லாததால் அவரே மூல காரணம். அதனால் தம்முள் உறையும் சக்தியை வெளிப்படுத்தித் தம்மில் தாமே ஆனந்தம் காண்கிறார். அவரின் புறசக்தி அவரால் நேரடியாக வெளிப்படுத்தப்படுவதல்ல; ஏனெனில் அவர் புருஷர்களாக வியாபித்து அந்த உருவங்களில் பௌதிக வெளியீடுகளின் தன்மைகளை நிலைநாட்டுகிறார். இப்படிப் பட்ட வியாபகங்களால் அவர் பிரபஞ்சத் தோற்றங்களைப் படைத்து, காத்து, அழிக்கிறார்.

உயிரினங்களும் பிரபுவின் வியக்தித்துவத்தின் வேறுபடுத்தப் பட்ட வியாபகங்களே. அவற்றில் சில தம்மளவில் பிரபுக்களாக விருந்து, உன்னதமான பிரபுவுக்கொப்பாக விளங்க விரும்புவதால், அவர் அவைகளைப் பிரபஞ்ச சிருஷ்டியினுட் புகுந்து தத்தம் இயல் பான சக்திகளை முழுவதுமாகப் பயன்படுத்தி இயற்கையின் மீது ஆதிக்கம் செலுத்த அனுமதிக்கிறார். உயிரினங்களிலும் பிரபஞ்சத் தோற்றம் முழுவதிலும் பிரபுவின் பகுதிகள் இடம் பெற்றிருப்பதால் அவற்றுள் செயல்களும் எதிர்ச் செயல்களும் தூண்டப்படுகின்றன.

இவ்வாருக, உயிரினங்களுக்கு பௌதிக இயற்கையின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான முழு வசதிகளும் தரப்படுகின்றன. எனினும் இறுதியான ஆளுநர் பிரபுவே. தம் பூரண அம்சமும் புருஷர்களில் ஒருவருமான பரமாத்மாவாக விளங்கி அவர் ஆட்சி புரிகிருர்.

இவ்வாருக, உயிர்வாழியான ஆத்மாவுக்கும் ஆளுநரான பரமாத்மாவுக்குமிடையே பெரும் வேறுபாடு உள்ளது. பரமாத்மா ஆளுநர், ஆத்மா ஆட்சிக்குட்பட்டவர். எனவே இருவரும் சமமான நிலையில் இருக்க முடியாது. பரமாத்மா ஆத்மாவோடு முழுவதுமாக ஒத்துழைப்பதால் அவர் உயிர் வாழியின் உற்ற தோழன் எனப்படுகிருர்.

இறைவனின் எங்கும் நிறையும் தன்மை பிரம்மன் எனப்படுகிறது. இது, விழிப்பு, உறக்கம், உள்ளடங்கிய நிலை ஆகிய எல்லா நிலைகளிலும் இறைகிறது. கட்டுப்பட்ட மற்றும் விடுபட்ட ஆத்மாக்களாக உருப்பெறும் ஜீவ சக்தியின் தோற்றுவாயுமாகிறது. பரமாத்மா மற்றும் பிரம்மன் ஆகிய இரண்டுமே பிரபுவினின்று தோன்றியவையாகையால், எல்லா உயிர்வாழிகளுக்கும் மற்றுமுள்ள எல்லாவற்றிற்கும் தோற்றுவாய் பிரபுவே. இதை அறிபவன் உடனடியாகப் பிரபுவின் பக்தித் தொண்டை மேற்கொள்கிருன். இப்படிப் புனிதமான முழு ஞானம் பெற்ற பக்தன் மனத்தாலும் ஆத்மாவாலும் பிரபுவோடு முற்றிலும் இணைந்தவனுகிருன். இத்தயை பக்தன் தன்னைப் போன்ற பிற பக்தர்களோடு கூடும்போது, பிரபுவின் உன்னதச் செயல்களின் புகழ் பாடுவதைத் தவிர வேறு வேலை எதுவுமில்லை. புனிதமான பக்தர்களைப் போல் முதிர்ச்சி பெற்றிராமல் பிரபுவின் பிரம்ம மற்றும் பரமாத்ம அம்சங்களை மட்டும் உணர்ந்துள்ளவர்கள் முழுமை பெற்ற பக்தர்களின் செயற்பாடுகளின் சிறப்பை உணரவியலாதவர்கள். பிரபு பக்தர்களின் உள்ளத்தில் தேவையான அறிவை அவ்வப்போது தந்து உதவுகிருர். அவரது விசேஷமான தயவால் அறியாமையெனும் இருள் முற்றிலுமாக அகற்றப்படுகிறது. இதை, யூகத்தின் உதவியை நாடும் தத்துவ ஞானிகளும் யோகிகளும் எண்ணிப்பார்க்க முடியாது; ஏனென்ருல் அவர்கள் தம் சொந்த பலத்தையே பெருமளவிற்கு நம்பியிருக்கிருர்கள். கடோபநிஷத்தில் கூறப்பட்டுள்ளதுபோல் பிரபுவின் தயவைப் பெற்றவர்கள் மட்டுமே அவரை அறிய முடியும். மற்றவர்களுக்கு அது சாத்தியமில்லை. இத்தகைய விசேஷ சலுகைகள் பிரபுவின் புனிதமான பக்தர்களுக்கு மட்டுமே அளிக்கப்படுகின்றன. இவ்வாருக, பிரம்ம ஜோதியின் ஆதிக்க வரம்பிற்கப்பாற்பட்டதான கடவுட் கருணையை ஸ்ரீ ஈசோபநிஷத் எடுத்துக் கூறுகிறது.

# பதினேழாவது மந்திரம்

வாயுர் அனிலம் அம்ருதம்
அதேதம் பஸ்மாந்தம் சரீரம்
ஓம் க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர
க்ரதோ ஸ்மர க்ருதம் ஸ்மர

வாயு: - ப்ராணன்; அனிலம் - ஒட்டுமொத்தமான காற்று; அம்ருதம் - அழியாதது; அத - இப்போது; இதம் - இது; பஸ்மாந்தம் - சாம்பலான பின்; சரீரம் - உடல்; ஓம் இறைவனை பிரபு; க்ரதோ - யக்ஞங்களின் அனுபவிப்பாளர்; ஸ்மர - தயவு செய்து நினைவில் வைத்துக் கொள்ளவும்; க்ரதோ - உன்னதமான பயனுளி; ஸ்மர - தயவு செய்து நினைவில் வைத்துக் கொள்ளவும்; க்ருதம் - நான் தங்களுக்குச் செய்திருப்பதையெல்லாம்; ஸ்மர - தயவு செய்து நினைவில் வைத்துக் கொள்ளவும்.

## மொழிபெயர்ப்பு

தாற்காலிகமான இந்த உடல் தகனம் செய்யப்பட்டு சாம்பலாகட்டும். அதன் பிராணன் ஆகாயத்தோடு கலக்கட்டும். இறைவனை பிரபுவே, எனது யக்ஞங்களையெல்லாம் தயவு செய்து நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இறுதியில் அவற்றின் பயனை அடைபவர் தாங்களே. நான் தங்களுக்காகச் செய்திருப்பதையெல்லாம் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

## பொருளுரை

தாற்காலிகமான இவ்வுடல் நிச்சயமாக வேற்று உடைதான். ஆனால் பௌதிக உடல் அழிந்தபின் உயிர்வாழி அழிவதோ, தனது தனியுணர்வை இழப்பதில்லை. உயிர்வாழியின் தன்னுணர்வு அருவமானதோ, வடிவற்றதோ அல்ல; மாறாக, அவனின் பௌதிக உடைதான் வடிவமற்றது, அதாவது அழிவில்லாத தனி நபரின் வடிவத்திற்கேற்றவாறு உடல் வடிவம் பெறுகிறது. குறைந்த அறிவு படைத்தவர்கள் தவறாக எண்ணுவது போல் எந்த உயிர்வாழியும் ஆரம்பத்தில் உருவமற்றவனல்ல. பௌதிக உடல் அழிந்த பின்னும் உயிர்வாழி நிலைத்திருக்கிறான் என்பதை இந்த மந்திரம் உறுதிப்படுத்துகிறது.

பௌதிகவுலகில் உயிர்வாழிகள் தத்தம் இயல்பின்படிப் புலனின்பம் துய்ப்பதற்குச் சாதகமான பல்வேறான உடலமைப்புக்களை அதிசயிக்கத்தக்க வேலைப்பாட்டுடன் இயற்கை ஏற்படுத்தித் தருகிறது. மலத்தை ருசிக்க விரும்பும் உயிர்வாழிக்கு அதற்கான முழுத் தகுதியையும் கொண்ட பௌதிகவுடல் தரப்படுகிறது - அதாவது

பன்றியின் உடல். அது போலவே, மாமிசம் உண்ண விரும்பும் ஜீவனுக்குப் புலியின் உடல் தரப்படுகிறது; அதன் உதவியால் அது பிற விலங்குகளின் ரத்தத்தைக் குடித்தும் மாமிசத்தைத் தின்றும் அனுபவிக்கிறது. மனிதனின் பல்லின் அமைப்பு வேருக உள்ளதால் அவன் மலத்தையோ, மாமிசத்தையோ உண்பதற்காக ஏற்பட்டவ னல்லவென்பதும், மிகப் பூர்வமான பரிணும நிலையிலும் அவனுக்கு மலத்தைத் தின்னும் ஆவல் இருந்ததில்லையென்பதும் தெளிவு. கனி களையும் தாவர உணவையும் சவைத்துத் துண்டித்துத் தின்பதற்கு வசதியாக மனிதனின் பற்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மாமி சம் உண்பதற்கு வசதியாக இரு கூரிய நாய்ப் பற்களும் அமைந் துள்ளன.

விலங்கு மற்றும் மனிதனின் பௌதிகவுடல்கள் உயிர்வாழிக்கு அந்நியமானவை. உயிர்வாழியின் புலனிச்சைகளுக்கேற்ப அவை மாறுகின்றன. பரிணுமப் போக்கில் உயிர்வாழி தன் உடலை ஒன்றன்பின் ஒன்ருக மாற்றிக் கொண்டு செல்கிருன். பூமி நீரால் நிறைந்திருந்தபோது உயிர்வாழி நீர்வாழ் உருவை மேற்கொண் டான். பின்னர், தாவரம், புழு, பறவை, விலங்கு, விலங்கிலிருந்து மனிதன், என்று ஒன்றன்பின் ஒன்ருக உருமாறினுன். மனிதஉரு முழுமையான ஆன்மீக ஞானம் பெறும்போது அது எல்லாவற்றிலும் சிறந்த நிலையை எய்திய வடிவாகிறது. மகோன்னதமான ஆன் மீக உணர்வு இம்மந்திரத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது: பூதவுடல் நீங்கி, அது சாம்பலாகி, பிராணன் நித்யமான காற்றின் சமஷ்டியில் கலக்க வேண்டும். உயிர்வாழியின் செயல்களெல்லாம் அவனின் உடலில் பலவகையான காற்று இயங்குவதால் நடைபெறுகின்றன. இக்காற்று மொத்தமாக, "பிராணவாயு" எனப்படும். உடலின் காற்றோட்டத்தைக் கட்டுப்படுத்த யோகிகள் பயில்கிருர்கள். ஆத் மா ஒரு காற்று வட்டத்திலிருந்து மற்ருென்றிற்கு உயர்ந்து இறுதி யில் மிகவுயர்ந்த வட்டமான "ப்ரஹமரந்திரம்" எனப்படும் இடத் தை அடைகிறதென்று எண்ணப்படுகிறது. அந்த மையத்திலிருந்து யோகி தன்னை எந்த கிரகத்திற்கும் மாற்றிக் கொள்ளலாம். ஒரு பௌதிகவுடலை விடுத்து மற்ருென்றிற்குப் புகுவது பொதுவான நடைமுறையென்ருலும், உயிர்வாழி இம்மந்திரத்தில் சொல்லப்பட் டிருக்கும் முறையில் பௌதிக உடலை முற்றிலுமாக நீக்குவதால் மட்டுமே பரிணுமத்தின் உச்ச நிலையை அடைய முடியும். அதன் பின்பு அவன் ஆன்மீக ஆகாயத்தையடைந்து அங்கு முற்றிலும் வேருனதொரு வகையான, அதாவது, மரணத்தையோ, மாறுதலை யோ சந்திக்க நேரிடாத ஆன்மீகவுடலைப் பெறவியலும்.

பௌதிகவுலகில் ஒவ்வொருவரும் கொண்டுள்ள வெவ்வேருன புலனிச்சைகளின் திருப்திக்காக உடலை அடிக்கடி மாற்றும்படி இயற்கை அவர்களை வற்புறுத்துகிறது. இந்த இச்சைகள் கிருமி கள் முதல் மிகவுயர்ந்த நிலையிலான பூதவுடல்கள் (பிரம்மன் மற்றும்

தேவர்கள்) வரை பலவான உயிர் வகைகளிலும் இடம் பெற்றிருக்கின்றன. உயிரினங்களெல்லாம் பல்வேறு வடிவங்களில் தூலப் பொருட்களால் ஆனவை. அறிவாளி இவற்றின் ஆன்மீகத் தன்மையில் ஒருமையைக் காண்கிறான்; வெவ்வேறான உடல்களிலல்ல. பன்றியின் உடலினுலும், தேவனின் உடலினுலும், உள்ளுறையும் ஆன்மீகப் பொறி உன்னதமான பிரபுவின் அம்சமாகையால், ஒன்றுனதே. உயிர்வாழி தன் பாவ புண்ணியங்களுக்கொப்ப பல்வேறான உடல்களைப் பெறுகிறான். மனிதவுடல் மிகத் திருந்தியது, முழுமையான உணர்வு கொண்டுள்ளது. வேத இலக்கியங்களின்படி, பக்குவம் மிகுந்தவன் பற்பல பிறவிகளில் தன் அறிவைப் பண்படுத்திக் கொண்ட பின்பு பிரபுவிடம் சரணடைகின்றான். உன்னதமான பிரபுவான வாசுதேவரிடம் சரணடையும் தருவாயில்தான் அவனது அறிவு முழுமையாகப் பண்பட்டதாகிறது. ஒருவன் தன் ஆத்மாவின் நிலைபற்றிய அறிவு பெற்ற பின்பும், ஒருபோதும் தம்மில் தாமே முழுமையாகமாட்டா என்ற அறிவு அவனுக்கு ஏற்படாவிடில் அவன் மீண்டும் பௌதிகச் சூழலில் விழ நேரிடுகிறான். பிரம்ம ஜோதியோடு ஒன்றியவனும் கூட கீழே விழ வேண்டியவனே.

பிரபுவின் திவ்யமான சரீரத்திலிருந்து எழும் பிரம்ம ஜோதியில் நிறைந்துள்ள ஆன்மீகப் பொறிகளெல்லாம் தனித்தன்மையுணர்வைக் கொண்டிருப்பவை. சில வேளைகளில் இந்த உயிர்ப் பொறிகள் புலன் அனுபவம் பெற விரும்பும்போது அவை பௌதிகவுலகையடைந்து பொய்யான பிரபுக்களாகிப் புலன்களின் கட்டளைகளுக்கு அடிமையாகின்றன. பிரபுத்வம் செலுத்த வேண்டுமென்ற இச்சை உயிர்வாழிகளுக்குள்ள ஜட நோயாகும். புலனின்பத்தின் வசியத்தில் கட்டுண்டிருப்பதால் பௌதிகவுலகில் காணப்படும் பல்வேறான உடல்களில் அவன் புகுந்து புறப்படுகிறான். பிரம்ம ஜோதியோடு ஒன்றிப்போவது மட்டும் முதிர்ந்த அறிவுபெற்றதாகாது: முழுவதுமாகப் பிரபுவைச் சரணடைந்து ஆன்மீகத் தொண்டை வளர்த்துக் கொள்வதன் மூலமே மிக உன்னதமான பக்குவ நிலையை அடையவியலும்.

பூதவுடலையும் பௌதிக ஆகாயத்தையும் விட்டு விலகி இறைவனின் ஆன்மீக ராஜ்ஜியத்தை அடைய வேண்டுமென உயிர்வாழி இம்மந்திரத்தில் பிரார்த்திக்கிறான்; பூதவுடல் சாம்பலாவதற்கு முன் தான் புரிந்துள்ள நற்செயல்களையும் தியாகங்களையும் பிரபு தம் நினைவிற்கொள்ளவேண்டுமென்று அவரிடம்பிரார்த்திக்கிறான். இந்தப் பிரார்த்தனை அவன் மரணத்தைச் சந்திக்கும் சமயத்தில், தன் கடந்த காலச் செயல்களையும் இறுதி நோக்கத்தையும் பற்றிய முழு உணர்வுடன் செய்யப்படுகிறது. முழுவதுமாக பௌதிக இயற்கையின் பிடியிலிருப்பவன் மரணமடையும் நேரத்தில் பூதவுடலில் தான் செய்த பாவகாரியங்களையெல்லாம் நினைத்துக் கொள்கிறான்; அதன் பலனுக மரணத்திற்குப் பின் வேறொரு உடலைப் பெறுகிறான். இந்த உண்மையை பகவத்கீதை உறுதி செய்கிறது:

"யம் யம் வாபி ஸ்மரன் பாவம்
த்யஜதி அந்தே கலேவரம்
தம் தம் ஏவைதி கௌந்தேய
ஸதா தத்-பாவ-பாவித:"

"உடலை விடும்போது எந்த உணர்வு நிலையை ஒருவன் எண்ணுகிறானோ சந்தேகமின்றி அந்த நிலையை அவன் அடைகிறான்." (பகீ. 8.6). இவ்வாறாக, உயிர்விடும் பிராணியின் இயல்புகளை அதன் மனம் அடுத்த பிறவிக்கு எடுத்துச் செல்கிறது.

மன வளர்ச்சி பெறாத சாதாரண விலங்குகளைப் போலல்லாமல் மனிதன் தன் வாழ்வில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை இரவில் கனவு காண்பது போல் மீண்டும் எண்ணிப் பார்க்க முடியும். ஆகையால் அவன் மனம் எப்போதும் ஜட இச்சைகளால் நிரம்பியிருக்கிறது. அதனால் அவன் ஆன்மீக உடல் பெற்று ஆன்மீகவுலகை அடைய முடியாமற் போகிறது. ஆனால், பக்தித் தொண்டாற்றுவதன் மூலம் பக்தர்களுக்குக் கடவுளிடம் அன்பு வளர்கிறது. மரணமடையும் நேரத்தில் தன் தெய்வத் தொண்டுகளைப் பற்றி பக்தன் எண்ணமற் போனாலும் இறைவன் அவனை மறப்பதில்லை. பக்தனின் தியாகங்களை இறைவனுக்கு நினைவுப்படுத்துவதற்காக இம்மந்திரம் சொல்லப்பட்டுள்ளது. நினைவுப்படுத்தப்படாவிட்டாலும் தன் புனித பக்தர்களின் தொண்டை அவர் மறப்பதில்லை.

பக்தர்களோடான தம் நெருக்கமான உறவை பகவான் பகவத் கீதையில் தெளிவாக விவரிக்கிறார்: "மிகவும் மோசமான முறையில் ஒருவன் செயலாற்றுவதாகத் தோன்றினும் கூட அவன் பக்தித் தொண்டில் ஈடுபட்டிருந்தால் அவனைப் புனிதமானவனாகவே கருத வேண்டும். ஏனெனில் அவன் தக்க முறையில் நிலைபெற்றிருக்கிறான். வெகு சீக்கிரமே அவன் நல்லவனாகி நித்யமான அமைதியை அடைகிறான். குந்தியின் மகனே, எனது பக்தன் என்றும் அழிவதில்லையென்பதைத் தைரியமாக அறிவிப்பாயாக. ப்ருதாவின் மகனே, என்னிடம் சரணடைபவர்கள் யாராவது இழிந்த பிறவியினராயிருந்தாலும் பரகதி அடைய முடியும். அப்படியிருக்க, துன்பமயமான, தாற்காலிகமான இந்த உலகில் என்னுடைய அன்புத் தொண்டில் ஈடுபட்டிருக்கின்ற அந்தணர்களும், நல்லோரும், பக்தர்களும், புனிதமான அரசர்களும் பேலும் எவ்வளவு சிறந்தவர்கள். உனது மனத்தை எப்பொழுதும் என்னைப் பற்றிய சிந்தனையிலேயே ஈடுபடுத்தி எனக்கு வந்தனை செய்து, என்னை வழிபடுவாயாக. என்னில் ஆழமாக ஈடுபட்டு நிச்சயமாக நீ என்னிடமே வருவாய்." (பகீ. 9.30-34).

இத்தப் பதங்களை ஸ்ரீல பக்திவேதாந்த டாகூரா இவ்வாறு விளக்குகிறார்: "மகான்கள் காட்டியுள்ள பாதையில் செல்லும் பக்தனை, அவன் சீரற்றவனாயிருந்தாலும், ஒப்புக் கொள்ள வேண்

டும். 'சீரற்ற' என்ற சொல்லின் சரியான பொருளை நாம் அறிய வேண்டும். கட்டுப்பட்ட ஆத்மா இரண்டு காரியங்களைக் கவனிக்க வேண்டியதிருக்கிறது. அதாவது, உடலைக் காப்பாற்றிக் கொள்ளும் அதே சமயம் ஆத்ம ஞானம் பெற முயற்சிக்க வேண்டியதாகிறது. சமூக அந்தஸ்து, மன வளர்ச்சி, சுத்தம், நோன்புகள், உடல் நலம், வாழ்வுப் போராட்டம் இவையெல்லாம் உடலை வாழ வைப்பதற்காக ஏற்பட்டவை. ஆத்ம ஞானம் பெறுவதற்கான நடவடிக்கைகள் பகவானுக்குச் செய்யும் பக்தித் தொண்டில் மேற்கொள்ளப்படுபவை: கட்டுப்பட்ட ஆத்மா உடலைப் பேணுவதை விடமுடியாதாகையால் இவ்விரண்டு வகையான செயல்களும் ஒரே சமயத்தில் இணையாக நிகழ்த்தப்பட வேண்டியுள்ளது. ஆனால், பக்தித் தொண்டு அதிகமாக ஆக, உடலுக்கான தொண்டுகள் அதே அளவில் குறைந்து கொண்டே போகின்றன. பக்தித் தொண்டு சரியான அளவை எட்டாத வரை உலகப்பற்று அவ்வப்போது தலை தூக்கக் கூடும். ஆனால் இந்த உலகப் பற்று எப்போதும் நீடிக்கு மென்று எண்ணுவதற்கில்லையென்பதைக் கவனத்தில் கொள்ள வேண்டும். ஏனெனில், இறைவனின் கருணை இதை மிக விரைவில் முடிவிற்குக் கொண்டு வரும். ஆகையால், பக்தித் தொண்டு மட்டுமே சரியான வழி. அவ்வப்போது ஏற்படும் உலகப்பற்று ஆத்ம ஞானம் பெறுவதற்குத் தடையாகாது."

அருவவாதிகள் பக்தித் தொண்டாற்றும் வாய்ப்பைப் பெறுவதில்லை. ஏனெனில் அவர்கள் இறைவனின் பிரம்மஜோதி அம்சத்தில் பற்றுதல் கொண்டவர்கள். முந்தைய மந்திரங்களில் கூறப்பட்டுள்ளதுபோல் அவர்களால் பிரம்ம ஜோதியைக் கடக்கவியலாது. அதற்குக் காரணம் இறைவனின் வ்யக்தித்துவத்தில் அவர்களுக்கு நம்பிக்கையில்லை. அவர்களது கருத்தெல்லாம் சொல்லாராய்ச்சியிலும், வார்த்தை ஜாலங்களிலும், மனத்தின் சிருஷ்டிகளிலும் மட்டுமே சம்பந்தப்பட்டுள்ளது. இதன் விளைவாக அருவவாதிகளின் உழைப்பு பயனற்றுப் போகிறது. இதை பகவத்கீதையின் பன்னிரண்டாவது அத்தியாயம் உறுதி செய்கிறது (பகீ. 12.5).

இந்த மந்திரத்தில் கூறப்பட்டுள்ள வசதிகளையெல்லாம் பூரண சத்தியத்தின் வியக்தித்துவத்த அம்சத்தோடு தொடர்ந்து தொடர்பு கொள்வதன் மூலம் பெறலாம். இறைவனுக்கு பக்தர்கள் ஆற்றும் பக்தித் தொண்டு ஒன்பது வகையான உன்னதச் செயல்களைக் கொண்டது:

1) பிரபுவைப் பற்றிக் கேட்டல்
2) பிரபுவின் புகழ் பாடுதல்
3) பிரபுவை நினைந்திருத்தல்
4) பிரபுவின் பாத கமலங்களில் பணிதல்
5) பிரபுவைப் பூஜித்தல்

6) பிரபுவைப் பிரார்த்தித்தல்
7) பிரபுவுக்குத் தொண்டு செய்தல்
8) பிரபுவுடன் தோழமை கொண்டிருத்தல்
9) எல்லாவற்றையும் பிரபுவுக்கு அர்ப்பணித்தல்

இந்த ஒன்பது கோட்பாடுகளும் ஒட்டு மொத்தமாகவோ தனித்தனியாகவோ மேற்கொள்ளப்படும்போது பக்தன் பகவானோடு இடைவிடாது தொடர்பு கொண்டிருக்க உதவுகின்றன. இதனால் வாழ்வின் இறுதியில் பகவானை நினைவு கூர்வது எளிதாகிறது. இந்த ஒன்பது கோட்பாடுகளில் ஒன்றை மட்டும் மேற்கொண்டு பகவானின் பக்தர்கள் பலர் மிகவுயர்ந்த பக்குவத்தையடைந்து பிரசித்தி பெற்றுள்ளார்கள்:

1) கேட்டலின் மூலம், ஸ்ரீமத் பாகவ்தத்தின் நாயகனை மஹாராஜா பரீக்ஷித்.
2) பகவானின் புகழ்பாடி ஸ்ரீமத் பாகவதத்தைக் கூறியுள்ள ஸுகதேவ கோஸ்வாமி.
3) பிரார்த்தித்தலின் மூலம், அக்ரூரர்.
4) நினைத்தலின் மூலம் ப்ர்ஹ்லாத மஹாராஜா.
5) பூஜித்தலின் மூலம், ப்ருது மஹாராஜா.
6) பிரபுவின் பாதகமலங்களைச் சேவித்தலின் மூலம் செல்வத்தின் தேவதையான லக்ஷ்மி.
7) பிரபுவிற்கு நேரடியாக சேவை செய்து, ஹனுமான்.
8) தோழமை மூலம், அர்ஜுனன்.
9) எல்லாவற்றையும் பகவானுக்கு அர்ப்பணித்து மஹாராஜா பாலி.

இந்த மந்திரத்தின் பொருளும், வேத கீதங்களிலுள்ள அநேகமாக எல்லா மந்திரங்களின் கருத்தும் வேதாந்த சூத்திரத்தில் சுருக்கமாகவும் ஸ்ரீமத் பாகவதத்தில் விளக்கமாகவும் காணக்கிடைக்கின்றன. வேத ஞானமெனும் மரத்தின் கனியான ஸ்ரீமத் பாகவதத்தில் இந்த மந்திரத்தின் தாத்பர்யம் மஹாராஜா பரீக்ஷித்தும் ஸுகதேவ கோஸ்வாமியும் தம் சந்திப்பின் ஆரம்ப கட்டத்தில் நிகழ்த்தும் உரையாடலில் கேள்வி-பதில் வடிவத்தில் விளக்கப்பட்டுள்ளது. இறை விஞ்ஞானத்தைப் பற்றிக் கேட்டாலும், கீர்த்தனமும் ஆன்மீக வாழ்வின அடிப்படைக் கோட்பாடுகளாகும். ஸுகதேவ கோஸ்வாமி தம் காலத்தில் வாழ்ந்த யோகிகளெல்லாம் தலைசிறந்த ஆன்மீக குருவாகத் திகழ்ந்தவராதலால் பரீக்ஷித் மஹாராஜா அவரிடம் கேட்டறிந்து ஞானம் பெற்றார்.

மஹாராஜா பரீக்ஷித்தின் முக்கியமான கேள்வியாவது: "மனிதனாகப் பிறந்தவனின் முக்கியமான கடமை யாது? குறிப்பாக மரணமடையும் தருவாயில் அவன் செய்ய வேண்டியதென்ன?" ஸுகதேவ கோஸ்வாமி இவ்வாறு விடையளித்தார்:

"தஸ்மாத் பாரத ஸர்வாத்மா
பகவான் ஈச்வரோ ஹரி:
ச்ரோதவ்ய: கீர்த்திதவ்யச்' ச
ஸ்மர்த்தவ்யச் சேச்சதாப்யம்"

"எல்லாக் கவலைகளினின்றும் விடுபட விரும்புபவன் முழுமுதற கடவுளான பகவானைப் பற்றி எப்போதும் கேட்டுக் கொண்டிருந்து, அவரின் புகழ் பாடி, அவரை தியானித்திருக்க வேண்டும். அவரே எல்லாவற்றையும் இயக்கும் உன்னத புருஷனும், இன்னல்களைப் போக்க வல்லவரும், எல்லா உயிர்வாழிகளின் உயர் ஆத்மாவுமாவார்." (பாக. 2.15).

மனித சமூகமெனப்படுவது பொதுவாக இரவில் தூங்குவதும், பாலுறவு கொள்வதும், பகலில் இயன்ற அளவு பணம் சம்பாதிப்பதும், குடும்பத்திற்குத் தேவையான பொருட்களை வாங்குவதுமாகப் பொழுதைக் கழிக்கிறது. இறைவனைப் பற்றிப் பேசுவதற்கோ, சிந்தனை செய்வதற்கோ அவர்களுக்கு நேரமிருப்பதில்லை. கடவுளை எத்தனையோ விதங்களில் அவர்கள் நிராகரித்திருக்கிறார்கள். முக்கியமாக அவரை அருவமானவர், அதாவது உணர்வற்றவர் என்று கூறி ஒதுக்கிவிடுகிறார்கள். ஆனால் வேத இலக்கியங்களான உபநிஷத்துக்கள், வேதாந்த சூத்திரங்கள், பகவத்கீதை, ஸ்ரீமத் பாகவதம் ஆகியவற்றில் பகவான் உணர்வுள்ளவர், உயிருள்ள எல்லாவற்றிலும் தலையானவர் என்று பிரகடனம் செய்யப்பட்டுள்ளது. அவரது புகழ்மிக்க லீலைகள் அவரோடு ஒன்றியவை. எனவே மக்கள் லௌகீக அரசியல்வாதிகளையும், பெரிய மனிதர்கள் என்று சொல்லப்படுபவர்களையும், அவர்களின் அபத்தமான செயல்களையும் பற்றிக் கேட்பதையும் பேசுவதையும் தவிர்த்து, ஒவ்வொரு கணத்தையும் வீணாக்காமல் பகவானின் சேவையில் செலவிடுவதற்கேற்றவாறு தம் வாழ்வை வடிவமைத்துக் கொள்ள வேண்டும். இத்தகைய இறை பக்தியை ஸ்ரீ ஈசோபநிஷத் நமக்கு எடுத்துரைக்கிறது.

பக்தித் தொண்டு செய்வதைப் பழக்கமாக்கிக் கொண்டாலன்றி மரணத்தின் தருவாயிலுள்ள ஒருவன் உடல் சீர்கெட்ட நிலையில் எதையும் எண்ணிப் பார்ப்பதோ, தன் தியாகங்களை நினைவிற் கொள்ளும்படி இறைவனைப் பிரார்த்திப்பதோ, எப்படி முடியும்? தியாகங்கள் என்றால் புலனிச்சைகளைத் துறப்பது என்று பொருள். வாழ்நாளில் புலனுணர்வுகளைக் கடவுட் தொண்டில் ஈடுபடச் செய்வதே இந்த வித்தையைக் கற்பதற்கான வழி. இதற்கான அப்யாஸங்களின் பலனை ஒருவன் தன் மரண காலத்தில் தக்கவாறு பயன்படுத்திக் கொள்ளலாம்.

# பதினெட்டாவது மந்திரம்

அக்னே நய ஸுபதா ராயே அஸ்மான்
விச்வானி தேவ வயுனானி வித்வான்
யுயோத்யஸ்மஜ் ஜுஹுராணம் ஏனோ.
பூயிஷ்டாம் தே நம உக்திம் விதேம

அக்னே - அக்னியைப் போன்று பலவானான பிரபுவே; நய - வழி நடத்திச் செல்வீராக; ஸுபதா - நல்வழியில்; ராயே - உம்மை அடைவதற்கு; அஸ்மான் - எமக்கு; விச்வானி - எல்லா; தேவ - என் பிரபுவே; வயுனானி - செயல்கள்; வித்வான் - அறிபவர்; யுயோதி - அகற்றுங்கள்; அஸ்மத் - எம்மிலிருந்து; ஜுஹுராணம்- தடங்கல்கள்; ஏன: - பாவங்களெல்லாம்; பூயிஷ்டாம் - மிகப்பல வான; தே - உமக்கு; நம உக்திம் - வந்தனை; விதேம- செய்கி றோம்.

## மொழி பெயர்ப்பு

அக்னியைப் போன்ற பலவானான பிரபுவே, சர்வவல்லமையுள்ள வரே, உமக்கு நான் எல்லா வந்தனைகளும் செலுத்தி நிலத்தில் உமது அடிகளில் விழுகிறேன். பிரபுவே, உம்மை அடைவதற்கான நல்வழியில் என்னை நடத்திச் செல்வீராக. கடந்த காலத்தில் நான் செய்துள்ளனவற்றையெல்லாம் நீர் அறிவீராதலால் என் முன்னேற்றத்தில் தடங்கல் ஏற்படாதிருக்க என் பாவங்களின் வினைவுகளிலிருந்து தயவு செய்து என்னை விடுவிப்பீராக.

## பொருளுரை

பிரபுவிடம் சரணடைந்து காரணத்திற்கப்பாற்பட்ட அவரது கருணைக்காகப் பிரார்த்திப்பதால் பக்தன் முழுமையான ஆத்ம ஞானம் பெறுவதற்கான பாதையில் முன்னேறவியலும். பிரபு தம்மிடம் சரணடைந்துள்ள ஆத்மாவின் பாவங்கள் உட்பட எதை யும் பஸ்மமாக எரிக்கவல்லவராகையால் அவர் அக்னியென்று அழைக்கப்படுகிறார். முந்தைய மந்திரங்களில் கூறப்பட்டுள்ளது போல், பூரணத்தின் உண்மையானதும் இறுதியானதுமான அம்சம் அவரது புருஷோத்தம நிலையே. பிரம்ம ஜோதியாகிய அவரது அருவத் தன்மை அவரது முகத்தை மறைக்கும் கண் கூசும் திரை. கர்மகாண்ட முறை, அதாவது பலனுக்காகச் செயலாற்றுவதென் பது, ஆத்ம ஞானம் பெறும் முயற்சியின் கடை நிலை. அத்தகைய கர்மாக்கள் (செயல்கள்) வேதங்கள் கூறும் நிலையிலிருந்து சிறிது தவறினும், விகர்மாவாக, அதாவது, செயல்படுபவனின் நலனுக்கு எதிரான வினைவுகளைத் தருவனவாக உறுப்பெறுகின்றன. இப்படிப்

பட்ட விகர்மா மாயையின் வசப்பட்ட உயிர்வாழியால் புலனின் திருப்திக்காகச் செய்யப்படுவதால், ஆத்மஞானம் பெறுவதற்கான நல்வழியில் தடையாக அமைகிறது.

ஆத்மஞானம் பெறுவது மனிதனுகப் பிறந்த ஜீவனுக்கே சாத்தியம். 84 லட்சம் உயிரினங்களில் பிராம்மண தர்மத்திற்கு உகந்த தான மனித வடிவம் மட்டுமே உயர் ஞானம் பெறுவதற்கான வாய்ப்பைப் பெற்றிருக்கிறது. பிராம்மண தர்மம் என்ருல், உண்மையைக் கடைப்பிடித்தல், புலன் கட்டுப்பாடு, சகிப்புத் தன்மை, எளிமை, முழுமையான அறிவு, முழுமையான கடவுள் நம்பிக்கை ஆகியவற்றைப் பெற்றிருப்பதாகும். பிறப்பால் மட்டும் ஒருவன் பெருமை பெறுவதில்லை. பிராம்மணனின் மகனுகப் பிறப்பது பிராம்மணனுவதற்கு ஒரு வாய்ப்பு மட்டுமே. பெருங்குடி மகனுகப் பிறப்பது உயர்ந்தவனுவதற்கு ஒரு வாய்ப்பு, பிறப்புரிமை மட்டும் எல்லாமாகிவிடாது. பிராம்மணனெனக் கருதப்படுவதற்கான தகுதியையும் பெற்ருகவேண்டும். பிராம்மணனுகப் பிறந்ததற்காகப் பெருமைப்பட்டுக்கொண்டு உண்மையான பிராம்மணனுவதற்கான தகுதிகளைப் பெறுவதில் அசட்டையாகவிருப்பவன் உடனேயே தன் நிலை கெட்டு, ஆத்மஞானம் பெறுவதற்கான வழியிலிருந்து தவறிச் செல்பவனுகிருன். மனித வாழ்வை அடைந்ததன் இலட்சியத்தை அவன் இழந்து நிற்கிருன்.

யோகப் பிரஷ்டர்கள், அதாவது, ஆத்ம ஞானத்திற்கான வழியிலிருந்து தவறியவர்கள், நல்ல பிராம்மணர்களின் குடும்பங்களிலோ, செல்வந்தர்களான வணிகர்களின் குடும்பங்களிலோ, பிறந்து தம்மைத் திருத்திக் கொளவதற்கான வாய்ப்பைப் பெறுகிருர்களென பகவத்கீதையில் (பகீ. 6.41-42) நமக்கு உறுதியளிக்கப்படுகிறது. இத்தகைய பிறவிகள் ஆத்ம ஞானம் பெறுவதற்கான வாய்ப்புக்களை அதிகப்படுத்துகின்றன. இவ்வாய்ப்புக்கள் மாயை காரணமாகத் தவருகப் பயன்படுத்தப்படும்போது, எல்லாம் வல்ல இறைவனுல் அளிக்கப்பட்ட மனித வாழ்வெனும் நல்லதொரு தருணம் வீணுகிறது.

நன்னடத்தைக்கான நியமங்கள் ஒருவனைப் பயன் கருதிய செயல் நிலையிலிருந்து பரஞானம் பெறுவதற்கான நிலைக்கு உயர்த்துகின்றன. பற்பலப் பிறவியெடுத்துப் பரஞானம் பெறும் தன்மையை அடைந்த பின்னர் ஒருவன் நற்பக்குவமடைந்து பகவானைச் சரணடைகிருன். இதுவே பொதுவான முறை. ஆனுல், இந்த மந்திரத்தில் பரிந்துரைக்கப்பட்டுள்ளது போல், ஒருவன் ஆரம்பத்திலேயே சரணடைந்துவிட்டால், பக்தி மனப்பான்மையைப் பெறுவதால், மற்ற நிலைகளையெல்லாம் உடனடியாகக் கடந்துவிடுகிருன். பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளதுபோல் (பகீ. 18.66) சரணுர்த்தியான ஆத்மாவிற்கான பொறுப்பை பகவான் உடனடியாக ஏற்றுக்கொண்டு, பாவ காரியங்களின் விளைவுகளிலிருந்து அவனை விடுவிக்

கிருர். கர்மகாண்டச் செயல்களில் பாவங்கள் அதிகமாக நேரலாம்; ஞான மார்க்கத்தில் அவை குறைகின்றன. ஆனுல் பக்திமார்க்க மான இறைத் தொண்டில் அவை ஏற்படும் வாய்ப்புக்கள் சிறிதள வும் இல்லே. பிரபுவின் பக்தன் அவரின் நற்பண்புகளேயெல்லாம் தானும் பெற்றுவிடுகிருன் எனும்போது அவன் பிராம்பணத் தன் மைகளேப் பெறுவதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? பக்குவம் அடைந்த ஒரு பக்தன் பிராம்பணக் குடும்பத்தில் பிறவாமலிருந் தாலும் யக்ஞங்களே நடத்தும் அதிகாரம் பெற்றுள்ள நிபுணனுன பிராம்பணனுக்குச் சமமான தகுதிகளே, பிரபுவின் பக்தனுகவிருக்கும் காரணத்தால் மட்டுமே உடனடியாகப் பெற்று விடுகிருன். பிரபுவின் சர்வ வல்லமை இத்தன்மையானது. அவர், பிராம்பண குலத்தில் பிறந்தவனே நாயைத் தின்னும் இழிந்தவனுகவும், பிறப்பால் இழிந்த ஒருவனே, அவன் ஆற்றியுள்ள பக்தித் தொண்டிற்சாக, பிராம்மணனிலும் உயர்ந்தவனுகவும் ஆக்கக் கூடியவர்.

சர்வ வல்லமை படைத்த பகவான் எல்லாருடைய இதயங்களி லும் இருப்பவராகையால் தம் உண்மையான பக்தர்கள் சரியான பாதையில் செல்வதற்கான அறிவுரைகளே வழங்குகிருர். பக்தர்கள் பிற விருப்பங்களேக் கொண்டிருந்தாலும், பகவான் அவர்களுக்குத் தம் அறிவுரையை வழங்குகிருர். மற்றவர்கள் அவரவா பொறுப் பில் அவரவர் விருப்பம்போல் நடக்கட்டுமென்று விட்டு விடுகிருர். ஆனுல், பக்தர்களேப் பொறுத்தவரையில் அவன் ஒருபொழுதும் தவருன பாதையில் செல்லாதபடி பகவான் அவனே வழிநடத்து கிருர். இதுபற்றி ஸ்ரீமத் பாகவதத்தில் கூறப்பட்டுள்ளதாவது:

"ஸ்வ-பாத-மூலம் பஜத: ப்ரியஸ்ய
த்யக்தான்ய-பாவஸ்ய ஹரி: பரேச:
விகர்ம யச் சோட்பதிதம் கதம் சித்
துனோதி ஸர்வம் ஹ்ருதி ஞன்னிவிஷ்ட:"

"பகவான் பக்தனிடம் எவ்வளவு அன்பு கொண்டவராயிருக்கிருர் என்ருல், அவன் சில சமயம் விகர்மாவின வசப்பட்டு வேதத்தின் அறிவுரைகளுக்கு முரணுக நடக்கும்போது பகவான் பக்தனின் உள்ளத்திலிருந்து அவனது தவறுகளேத் திருத்துகிருர். இது ஏனென்ருல், பக்தர்கள் பகவானுக்கு மிகவும் பிரியமானவர்கள்."

(பாக. 11.5.42)

பகவான் தன் உள்ளத்திலிருந்து கொண்டு தன் தவறுகளேத் திருத்த வேண்டுமென பக்தன் இம்மந்திரத்தில் பிரார்த்திக்கிருன். தவறுவது மனித இயல்பு. கட்டுப்பட்ட ஆத்மா பலமுறை தவறு கள் செய்ய முனேகிருன். அவன் அறியாமல் செய்யும் தவறுகளின் விளேவுகளே நீக்குவதற்கான ஒரே வழி பிரபுவின் பாத கமலங்களில்

சரணடைவதே. அப்போது அவர் அவனை வழி நடத்துகிறார். முற்றிலும் சரணடைந்த ஆத்மாக்களின் பொறுப்பை பகவான் மேற்கொள்கிறார். இவ்வாறாக, பிரபுவிடம் சரணடைந்து அவரின் அறிவுரைகளின்படி நடப்பதால் பக்தனின் எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்துவிடுகின்றன. இவ்வறிவுரைகள் பக்தனுக்கு இரு வழிகளில் தரப்படுகின்றன. ஒன்று, மகான்கள், மற்றும் குரு மூலம். மற்றொன்று, எல்லாருடைய இதயங்களிலுமிருக்கும் பகவான் மூலம் நேரடியாக. இவ்வாறாக பக்தன் எல்லா வழிகளிலும் பாதுகாக்கப்படுகிறான்.

வேத இலக்கியம் பரமானது. சாதாரணக் கல்வி முறைகளில் அவற்றைப் புரிந்து கொள்வது இயலாத காரியம். பிரபுவின் கருணையினாலும் குருவின் அருளாலும் மட்டுமே வேத மந்திரங்களைப் புரிந்து கொள்வது சாத்தியம். தகுதி பெற்ற ஆன்ம குருவிடம் ஒருவன் தஞ்சம் புகுந்தால் அவனுக்குப் பிரபுவின் கருணை சித்தியாகிவிட்டதென்று கொள்ள வேண்டும். பிரபுவே ஆன்மீக குருவின் வடிவில் பக்தனுக்கு அருள் புரிகிறார். இவ்வாறாக, ஆன்மீக குரு, வேத அறிவுரை, உள்ளிருக்கும் பிரபு, ஆகியவெல்லாம் தம் முழு பலத்தோடு பக்தனை வழிநடத்திச் செல்கின்றன. எனவே பக்தன் மீண்டும் ஜட மாயையின் வலையில் விழுவதற்கில்லை. எல்லா வகைகளிலும் நன்கு பாதுகாக்கப்பட்டுள்ள பக்தன் நற்பக்குவமாகிய இலக்கை அடைவது திண்ணம். இதற்கான வழிமுறை இம் மந்திரத்தில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீமத் பாகவதம் அதை மேலும் விளக்குகிறது (பாக. 1.2.17-20).

கேள்வியும் கீர்த்தனமும் தம்மளவில் பக்தியின்பாற்பட்டவை. எல்லா உயிர்வாழிகளின் நலனையும் விரும்பும் பகவான் அவர்கள் எல்லாரும் தம்மைப் பற்றிய கேள்வியிலும் கீர்த்தனத்திலும் ஈடுபட வேண்டுமென்று விரும்புகிறார். பகவானைப் பற்றிய கேள்வியிலும் கீர்த்தனத்திலும் ஈடுபடும் பக்தர்களின் மாசுகள் களையப்பெற்று அவர்கள் இறை பக்தியில் நிலைத்தவர்களாகிறார்கள். இந்த நிலையில் பக்தன் பிராம்மணத் தகுதிகளைப் பெறுகிறான். இயற்கையின் கீழ்நிலைக்குணங்களான தீவிரம், மந்தம் ஆகியவற்றின் விளைவுகள் அவனை விட்டு முற்றிலும் மறைந்துவிடுகின்றன. பக்தித் தொண்டின் விசேஷத்தால் பக்தன் முழுமையான ஞானம் பெற்று இறைவனைச் சென்றடையும் வழியை அறிந்தவனாகிறான். அவனின் எல்லா சந்தேகங்களும் நீங்கிப் புனிதமடைகிறான்.

முழுமுதற் கடவுளான ஸ்ரீ கிருஷ்ணரிடம் நம்மை அழைத்துச் செல்லும் அறிவு செறிந்த ஸ்ரீ ஈசோபநிஷத்திற்கு பக்தி வேதாந்தா வழங்கியுள்ள பொருளுரைகள் நிறைவு பெறுகின்றன.

உச்சாடனம் செய்யவும்!
ஹரே கிருஷ்ண
ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண
ஹரே ஹரே

ஹரே ராம
ஹரே ராம
ராம ராம
ஹரே ஹரே
உங்கள் வாழ்வு புனிதமடையும்.



இந்த புத்தகத்தை படித்தவர்கள், மேலும் விவரங்களுக்கு, கீழ்கண்ட 'இஸ்கான்' விலாசத்துடன் தொடர்பு கொள்ளவும்.

## ISKCON CENTRES IN INDIA

**Agartala, Tripura** - Hare Krishna Land, A.A. Road, Marup Karyalaya, Banamalipur, 799001.

**Ahmedabad, Gujarat** - P.O. Odhav, Dist. Odhav, Opp. Vepari Maha mandal Industrial Estate, 382410/886382.

**Ahmedabad, Gujarat** - 7 Kailash Society, Opp. Behra Munga school, Ashram Road, 380009 / 449945 / 449935

**Bangalore, Karnataka**
Hare Krishna Hill, Chord Road, Rajaji Nagar, ✆: 3321956, 3320768

**Baroda, Gujarat** - 18, Sujata Society, Gotri Road, 390015 / 326699

**Bhayandar (Thane), Maharashtra** - Lokmanya Shopping Centre, 1st Floor, 401101 / 6982595

**Bhuvaneshwar, Orissa** - National Highway No. 5, Nayapali, 751001 / 53125, 55817

**Bombay, Maharashtra** - Hare Krishna Land, Juhu, 400 049 / 626860-70

**Calcutta, West Bengal** - 3, Albert Road, 700017/443757–476987–473283

**Chandigarh, Punjab** - Hare Krishna Land, Dakshin Marg, Sector 36-B, 160036 / 26674

**Coimbatore, Tamil Nadu** - Padmam 387, VGR Puram, Alagesan Road-1, 641 011 / Tel. 445978

**Darjeeling, West Bengal** - P.O. Gitalpara, Siligiri, 734401.

**Gauhati, Assam** - Sri Sri Rukmini Krsna Mandir, Mount Hare Krishna, Ulubari Charali, 781007.

**Hyderabad, A.P.** - Hare Krishna Land, Nampally Station Road, 500001 / 551 018 / 552924.

**Imphal, Manipur** - Hare Krishna Land, Airport Road, 795 001.

**Madras, Tamil Nadu** - 59, Burkit Road, T.Nagar, Madras - 600 017. Ph. 4343266, 4345929

**Mayapur, W.Bengal** - Shree Mayapur Chandrodaya Mandir, P.O. Shree Mayapur Dham (Dist. Nadia)

**Moirang, Manipur** - Nongban Ingkhonidim Road, Ingkhon, Tidim Road.

**Nagpur, Maharashtra** - 70, Hill Road, Ram Nagar, 440010.

**New Delhi** - Sand Nagar (Gargi) Nehru Place Complex, P.B.No. 7061.

**Pandharpur, Maharashtra** - Hare Krishna Ashram, Across CHandrabhaga River, Dist. Sholapur, 413304.

**Patna, Bihar** - Road No.12, Rajendra nagar (Near Bahadurpur Gumpti) 800016 / 50765

**Pune, Maharashtra** - 4, Tarapur Road, Camp, 411001 / 60124.

**Rajkot, Gujarat** - 32, Ananta Nagar, Kalavad Road, 360003.

**Silchar, Assam** - Hare Krishna land, Ambicapatty, 788004, Dist. Cachar.

**Surat, Gujarat** - Sri Radha Krishna Mandir, Jahangirpura, Olpad Road, 395005 / 84215.

**Tripura** - Hare Krishna Land, A.A. Road, Marup Karyalaya, Banamalipur, Agartala, 799 001.

**Tirupati, A.P.** - No.37, B Type T.T.D. Qrs. Vinayak Nagar, K.T. Road, 517501 / 2285

**Trivandrum, Kerala** - T.C. 24 / 1485 WC Hospital Road, Thycaud, 695014 / 68197

**Vrindavana, U.P.** - Krishna Balarama Mandir, Bhaktivedanta Swami Marg, Raman Reti, Mathura / 178.

# ஸ்ரீல பிரபுபாதா நூற்றாண்டு விழா

# 1896 - 1996



தெய்வத்திரு அ.ச. பக்திவேதாந்த சுவாமி பிரபுபாதா

ஸ்தாபக ஆச்சாரியர் : அகில உலக கிருஷ்ண பக்தி இயக்கம்

**உலகமே வாழ வீட்டை கட்டியவர்**

வாருங்கள்!

நாம் எல்லோரும் சேர்ந்து ஸ்ரீகிருஷ்ணரின் பரமபக்தரை போற்றி, புகழ்ந்து பகவானை திருப்திப்படுத்துவோம்.